।।ஸ்ரீஹரி:।। 1482▲

# பக்தியோகத்தின் பெருமை

भक्तियोगका तत्त्व ( तमिल )




ஜயதயாள் கோயந்தகா

1482

# பக்தியோகத்தின் பெருமை

भक्तियोगका तत्त्व ( तमिल )

त्वमेव माता च पिता त्वमेव
त्वमेव बन्धुश्च सखा त्वमेव।
त्वमेव विद्या द्रविणं त्वमेव
त्वमेव सर्वं मम देवदेव॥

ஜயதயாள் கோயந்தகா

॥ஸ்ரீஹரி:॥

# வேண்டுகோள்

ஞானயோகம், கர்மயோகம், பிரேமயோகம் சம்பந்தமான கட்டுரைகளைத் தனித்தனி நூலாக வெளியிட்டிருப்பதைப் போல, பக்தியோகம் பற்றிய கட்டுரைகளையும் தொகுத்து, நூல்வடிவில் வெளியிட வேண்டும் என்று பல அன்பர்கள் வற்புறுத்திக் கேட்டுக் கொண்டதற்கிணங்க, இந்தத் தொகுப்பு வெளியிடப்படுகிறது. இதிலுள்ள கட்டுரைகளில் பக்தியின் ஸ்வரூபம், மகிமை, ரகசியம்; அதேபோல், பக்தியின் லட்சணம், மகிமை, பிரபாவம் மற்றும் நாமஜபம், தியானம், சத்சங்கம், ஸ்வாத்யாயம், சிரத்தை, பிரேமை, சரணாகதி முதலிய பக்தி சாதனங்களைப் பற்றியும், பகவானுடைய நாமம், வடிவம், லீலை, தவம், குணம், பிரபாவம், தத்துவம், ரகசியம், ஸ்வபாவம் முதலிய பக்தி சம்பந்தமான மிக உன்னதமான உணர்வுகள், நல்ல முறையில் விளக்கப்பட்டிருக்கின்றன.

பகவத்பக்தி மார்க்கம் என்பது, ஞான-அஷ்டாங்க- கர்மயோகம் முதலிய எல்லா வழிகளைக் காட்டிலும் மிகவும் உயர்ந்ததாகவும் எளியதாகவும் இருப்பதால், சிறுவர்-வயோதிகர், பெண்கள் மற்றும் சாமான்யர்களாலும் கூட கைக்கொள்ளத்தக்கதாக இருக்கிறது. இப்படிப் பார்க்கும்போது, அடித்தள நிலையில் உள்ளவர்களுக்கும் கூட இந்த நூல் உபயோகமாக இருக்கும். இந்தக் கட்டுரைகள், பல்வேறு சந்தர்ப்பங்களில் எழுதப்பட்டவைகளாதலால், ஒரே செய்தி பல இடங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், இதனால் குற்றம் ஏதும் ஏற்படப் போவதில்லை. ஏனென்றால், பக்தி விஷயங்களை ஒரு தடவை படித்து விட்டதாலேயே, அவை மனத்தில் படிந்து விடுவதில்லை. அதனால், பல தடவைகள் படித்துப் படித்து, செயல்பாட்டிற்குக் கொண்டுவர வேண்டும்.

இந்தக் கட்டுரைகள், பகவானின் சொற்கள், பகவானின் அடியார்களுடைய சொற்கள் மற்றும் அறநூல்களில் கூறப்பட்ட விஷயங்களின் ஆதாரத்திலேயே எழுதப்பட்டுள்ளன. ஆதலால், இதில் கூறப்பட்ட முறைகளை வாழ்க்கையில் கடைப்பிடிப்பதால், பகவானை அடைந்துவிட முடியும் என்பதில் சந்தேகமே இல்லை.

பணிவுள்ள,

**ஜயதயாள் கோயந்தகா**

# பொருளடக்கம்

## 1. ஸ்ரீமத் பகவத்கீதையில் பக்தியோகம்

ஸ்ரீமத் பகவத்கீதை, எல்லா அறநூல்களின், குறிப்பாக, உபநிடதங்களின் சாரம் ஆகும். மகாபாரதம் பீஷ்ம பர்வத்தில், ஸ்ரீவேதவியாஸரே கூறியிருக்கிறார் -

கீ$_3$தா ஸுகீ$_3$தா கர்தவ்யா கிமந்யை: ஶாஸ்த்ரஸங்க்ரஹை:।
யா ஸ்வயம் பத்மநாப$_4$ஸ்ய முக$_2$பத்மாத்$_3$ விநிஸ்ருதா ॥
ஸர்வ ஶாஸ்த்ரமயீ கீ$_3$தா ஸர்வதேவமயோ ஹரி:।
ஸர்வ தீர்த்த$_2$மயீ க$_3$ங்க$_3$ா ஸர்வவேத$_3$மயோ மநு: ॥

*(43-1,2)*

*(கீதையை மட்டுமே நன்றாக (கேட்டல், இசைத்தல், படித்தல், படிப்பித்தல், மனனம் செய்தல், உள்ளத்தில் உறுதியாகக் கொள்ளுதல் போன்ற வழிகளில்) பயில வேண்டும்; அதை விட்டு, பிற சாஸ்திரங்களை குவித்துக் கொள்வதற்கு என்ன அவசியம்? ஏனென்றால், அது, (கீதை) தாமரை உந்தியாளனான சாட்சாத் பகவானுடைய முகத் தாமரையிலிருந்தே வெளிப்பட்டது. கீதை என்பது எல்லா சாஸ்திரங்களையும் உள்ளடக்கியது; ஸ்ரீஹரி எல்லா தெய்வங்களின் வடிவானவர்; ஸ்ரீகங்கை அனைத்துப் புனித நீர் வடிவமானது; மனுஸ்ம்ருதி, எல்லா வேதங்களும் அடங்கியது.)*

இத்துடன் நின்று விடவில்லை. 'எல்லா சாஸ்திரங் களிலும் என்ன விஷயம் சொல்லப்பட்டிருக்கிறதோ, அதனை இப்போது என்னிடமிருந்தே நீ கேள்' என்று பகவானும் சொல்லியிருக்கிறார்.

ருஷிபி$_4$ர்ப$_3$ஹுதா$_4$ கீ$_3$தம் ச$_2$ந்தே$_3$ாபி$_4$ர் விவிதை$_4$: ப்ருத$_2$க்।
ப்$_3$ரஹ்ம ஸூத்ரபதை$_3$ஶ்சைவ ஹேதுமத்$_3$பி$_4$ர்விநிஶ்சிதை: ॥

*(கீதை : 13/4)*

*(இந்தத் தத்துவமானது, முனிவர்களால், பல வகைகளில் விளக்கப்பட்டிருக்கிறது; பல வகையான வேத மந்திரங் களாலும் அலசி ஆராய்ந்து நிறுவப்பட்டுள்ளது. அவ்வாறே, காரண-காரிய வாதங்களால் வாதிக்கப்பட்டு முடிவு செய்யப் பட்ட பிரம்மஸூத்ர பதங்களாலும் சொல்லப்பட்டிருக்கிறது.)*

அதனால், நாமெல்லாம், கீதையை நல்ல முறையில் கற்றுத் தியானிக்க வேண்டும். அப்படி தியானிப்பதால், அதில் நிறைந்து கிடக்கும் ஆழ்ந்த ரகசிய தத்துவங்கள் புலப்படும். இப்போது, கீதையில் வருணிக்கப்பட்டுள்ள பக்தனைப் பற்றி சிறிது சிந்தித்துப் பார்ப்போம்.

கீதை பக்தியினால் நிறைந்தது. கீதையில் சில இடங்களில் வேற்றுமை உபாசனை பற்றிய விளக்கம் உள்ளது; சில இடங்களில் வேற்றுமை இல்லாத உபாசனை யின் விளக்கமும் உள்ளது. முதல் ஆறு அத்தியாயங்களில் கர்மயோகமும், அடுத்த ஆறு அத்தியாயங்களில் பக்தி யோகமும், கடைசி ஆறு அத்தியாயங்களில் ஞானயோகமும் முதன்மையாகக் கூறப்பட்டுள்ளன என்று பல சான்றோர்கள் கூறி வருகிறார்கள். தொடக்கத்திலுள்ள ஆறு அத்தியாயங் களில் கர்மயோகமும் கடைசி ஆறு அத்தியாயங்களில் ஞானயோகமும் முதன்மை பெற்றுள்ளன என்பதை ஒப்புக் கொள்ளலாம்; ஆனால், ஏழாம் அத்தியாயம் முதல் பன்னிரெண்டாம் அத்தியாயம் வரை, பக்தி, பக்தி என்று, பக்தி மட்டுமே பேசப்பட்டிருக்கிறது; அதனால், இவைகளை யெல்லாம் பக்தியோக விளக்கம் என்று குறிப்பிடுவது மிகையாகாது. ஏனென்றால், இவைகளில் பெருமளவு ஸகுண-ஸாகார், ஸகுண-நிராகார் பற்றிய விளக்கம் இடம் பெற்றுள்ளது. ஆங்காங்கே நிர்குண-நிராகார உபாசனை பற்றிய குறிப்பும் வந்துள்ளது. இந்த ஆறு அத்தியாயங் களிலுமாக மொத்தம் 209 சுலோகங்கள் இருக்கின்றன. இவைகளில், மறைபொருளாக உள்ள ஒரு விஷயம், இங்கே சுட்டிக் காட்டப்படுகிறது.

இந்த சுலோகங்களில் ஆழ்ந்து கவனம் செலுத்தினால், ஒரு விஷயம் தெளிவாகத் தெரிய வருகிறது-அதாவது, அநேகமாக, ஒவ்வொரு சுலோகத்திலும் ஏதோ ஒரு வகையில் பகவானைக் குறிக்கும் சொல் வந்துள்ளது. எந்த இடங்களில் பகவான் கிருஷ்ணனுடைய சொற்கள் சொல்லப் படுகின் றனவோ, அங்கெல்லாம் நான்-என்னை-என்னால்-என்னிட மிருந்து-என்னுடைய-என்னிடத்திலிருந்து-இருக்கிறேன் (அஹம், மாம், மயா, மத்த:, மம, மே, மயி, அஸ்மி) முதலிய சொற்கள் உபயோகிக்கப்பட்டுள்ளன. அவ்வாறே, அர்ஜுனன்

பேசும்போது, நீ-உன்னை-உன்னால்-உன்னிடமிருந்து-உன்னுடைய-தாங்கள்-இருக்கிறாய் (த்வம், த்வாம், த்வயா, த்வத்த:, தவ, தே, பவான், அஸி) என்ற சொற்களும், ஜனார்தனன்-புருஷோத்தமன்-தேவ-தேவேச-ஜகந்நிவாஸ முதலிய சொற்களும் உபயோகிக்கப்பட்டுள்ளன. இதே போல, சஞ்ஜயன் பேச்சுக்களில், ஹரி-தேவ-தேவதேவ-கேசவ-க்ருஷ்ண-வாசுதேவ முதலிய, பகவானைக் குறிக்கும் சொற்கள் வந்துள்ளன. பெரும்பாலான சொற்கள், பகவானுடைய ஸகுண-ஸாகாரம் மற்றும் ஸகுண-நிராகார வடிவத்தைக் குறிக்கும் சொற்களே ஆகும்; ஆனால், நிர்குண-நிராகாரத்தைக் குறிக்கும் ஓம்-அக்ஷரம்-அவ்யக்தம்-ப்ரஹ்ம முதலிய பதங்களும் சில இடங்களில் வந்துள்ளன.

இந்த 209 சுலோகங்களில், பகவானைக் குறிப்பால் சுட்டிக்காட்டும் சொற்கள் பலவும் உள்ளன. மொத்த சுலோகங்களில் பத்தில் ஒரு பங்கான 21 சுலோகங்களில் மட்டுமே, பகவானைக் குறிக்கும் சொல் ஏதும் இல்லை. ஆனால், அவைகளும் கூட உணர்ச்சியினாலும் அமைந்துள்ள விஷயத்துக்கும் ஏற்பக் காணும்போது, பக்தியிலிருந்து வேறுபட்டுத் தனித்திருக்கவில்லை. இம்மாதிரியான சுலோகங்கள் எட்டாவது அத்தியாயத்தில் ஒன்பதும், மற்ற ஐந்து அத்தியாயங்களில், ஒன்வொன்றிலும், இரண்டு-மூன்று சுலோகங்களாகவும் உள்ளன. ஐந்து அத்தியாயங்களிலுமாகச் சேர்ந்து 12 சுலோகங்கள் மட்டும் இவ்வாறு வந்துள்ளன-அதாவது, இவைகளில், வெளிப்படையாகப் பகவானைக் குறிக்கும் சொற்கள் இல்லை. ஏழாவது அத்தியாயத்தில் 20, 27வது சுலோகம்; ஒன்பதில் இரண்டு, பன்னிரெண்டு, இருபத்தொன்று சுலோகங்கள், பத்தில் நாலாவது மற்றும் இருபத்தி ஆறாவது; பதினொன்றில் ஆறாவது மற்றும் பத்தாவது; பன்னிரெண்டாம் அத்யாயத்தில் 12,13 மற்றும் 18வது சுலோகங்களில், பகவானை வெளிப்படையாகக் குறிக்கும் சொற்கள் இல்லை.

கர்மயோகத்தை முக்கியமாகக் கூறும் ஒன்று முதல் ஆறு வரையிலான எந்த ஓர் அத்தியாயத்திலும் கூட பக்தி விளக்கம் இடம் பெறாமல் போகவில்லை. முதல் அத்தியாயத்தில் அர்ஜுனன் மற்றும் சஞ்ஜயனுடைய உரைகளில் மாதவன்,

ஹ்ருஷீகேசன், அச்யுதன், கிருஷ்ணன், கேசவன், மதுசூத னன், ஜனார்தனன், வார்ஷ்ணேயன் போன்ற பக்திபாவம் நிரம்பிய, பகவானைக் குறிப்பிடும் சொற்கள் வந்துள்ளன. இரண்டாம் அத்தியாயம் அறுபத்தியோராவது சுலோகத்தில், பகவானிடம் சரண் அடைதல் என்பது தெளிவாக வருகிறது -

தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர:।
வஶே ஹி யஸ்யேந்த்$_3$ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டி$_2$தா॥

*(தன்னுடைய எல்லாப் பொறிகளையும் வசப்படுத்தி, ஒருமுனைப்பட்ட மனத்துடன் என்னிடமே தஞ்சம் புகுந்து தியானத்தில் ஈடுபடவேண்டும்; ஏனென்றால், எவனுடைய புலன்கள் வசப்பட்டுவிட்டனவோ, அவனுடைய புத்தி (மனம்) நிலைபெற்றதாகிறது.)*

இவ்வாறே, மூன்றாம் அத்தியாயம் முப்பதாம் சுலோகத்தில், பரமாத்மாவிடம் ஈடுபட்டுள்ள உள்ளத்தின் மூலம், எல்லாக் கர்மாக்களையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்யும் கருத்து வருகிறது.

மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்யாத்$_4$யாத்மசேதஸா।
நிராஶீர்நிர்மமோ பூ$_4$த்வா யுத்$_4$யஸ்வ விக$_3$தஜ்வர:॥

*(அந்தர்யாமியாக விளங்கும் பரமாத்மாவான என்னிடம் மனப்பூர்வமாக எல்லாக் கர்மாக்களையும் அர்ப்பணம் செய்து, ஆசை இல்லாமல், மமதை இல்லாமல், தாபம் இல்லாமல் போர் புரிவாயாக.)*

நான்காம் அத்தியாயத்தில் பகவானே கூறியிருக்கிறார் : ‘நான், சாட்சாத் பூர்ணப்ரஹ்ம பரமாத்மா; சான்றோர்களை மேல் தூக்கி விடவும், துஷ்டர்களை அழிக்கவும் தர்மத்தை நிலைநிறுத்தவும் அவ்வப்போது அவதாரம் எடுக்கிறேன்.’

பரித்ராணாய ஸாதூ$_4$நாம் விநாஶாய ச து$_3$ஷ்க்ருதாம்।
த$_4$ர்மஸம்ஸ்த$_2$ாபநார்த$_2$ாய ஸம்ப$_4$வாமி யுகே$_3$ யுகே$_3$॥

*(கீதை : 4/8)*

***(மேன்மக்களைத் தூக்கிவிடவும், பாவச் செயல் செய்பவர் களை அழிப்பதற்காகவும், தர்மத்தை நல்லபடியாக நிலை நிறுத்துவதற்காகவும் யுகங்கள்தோறும் நான் வெளிப்படு கிறேன்.)***

இதனை அடுத்து, பகவான், தன்னுடைய பிறப்பு மற்றும் கர்மாக்களின் தெய்விகத் தன்மையை உணர்ந்து கொள்வதன் பெருமையைக் கூறியுள்ளார்.

அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூ$_4$தாநாமீஸ்வரோऽபி ஸந் ।
ப்ரக்ருதிம் ஸ்வாமதி$_4$ஷ்ட$_2$ாய ஸம்ப$_4$வாம்யாத்மமாயயா ॥

*(கீதை : 4/6)*

(நான் பிறப்பும் அழிவும் அற்றவன்; அத்துடன், எல்லாப் பிராணிகளுக்கும் தலைவன். அப்படியானாலும், என்னுடைய பிரகிருதியை வசப்படுத்திக் கொண்டு என்னுடைய யோகமாயையால் வெளிப்படுகிறேன்.)

பகவானுடைய பிறப்பு, உலக வழக்கத்திற்கு மாறானது; மனிதர்களுடைய பிறப்பைப் போல, புண்ணிய-பாவங்களின் விளைவாக ஏற்படுவது அல்ல; அவர், பிரகிருதிக்கு வசப்பட்டவரும் அல்லர்-இதுதான், அவருடைய பிறப்பின் தெய்விகத் தன்மை. அவர் பிறப்பது போலவும் இறப்பது போலவும் காணப்படுகிறாரே தவிர, மனிதர்களைப் போல் பிறப்பு-இறப்பு உடையவர் அல்லர். வெளிப்பாடும் மறைவும் (பிராதுர்பாவமும் திரோபாவமும்) தான் உண்டு. அவருடைய உடல், நோய் அற்றது; களங்கமற்றது; சின்மயமானது. அவர் தன்மேல் மாயை என்ற திரையைப் போட்டுக் கொள்வதால், அவரை யாராலும் அடையாளம் கண்டுகொள்ள முடிவ தில்லை (கீதை : 7/25). பகவானிடம் அடைக்கலம் புகுந்து, அவரையே சிரத்தை-பிரேமையுடன் வழிபடும் பக்தன், அவரை உள்ளபடி அறிகிறான். அவர் (பகவான்) தன்னுடைய இச்சைப்படி, பிரகிருதியை வசப்படுத்தி, தான் பிறப்பும் அழிவும் அற்றவராக இருந்தும், மேலோர்களின் மேன்மைக் காகவும் தர்மத்தை பிரசாரம் செய்யவேண்டும் என்பதற் காகவும் தன்னுடைய யோகமாயையால் வெளிப்படுத்திக் கொள்கிறார். (கீதை : 4/6,8) இது தான் அவருடைய பிறப்பின் தெய்விகத்தைச் சுட்டிக் காட்டுவது.

அதே போல, அவருடைய கர்மாக்களின் தெய்விகத் தன்மையைக் குறிப்பிட்டுக் காட்டுவன எவை என்றால், அவருடைய எல்லாச் செயல்களுமே கர்வம், பற்றுதல், விருப்பம் இல்லாமலும், உலகத்தின் நன்மைக்காகவுமே

செய்யப்படுகின்றன. (கீதை : 4/13,14). அதனால், அவருடைய செயல்கள், தெய்விகமாகின்றன. இதனைப் புரிந்து கொண்டு, இந்த அறிவை செயல்பாட்டில் கொண்டு வருவது தான், பகவானுடைய பிறப்பு-கர்மாக்களின் தெய்விகத் தத்துவ ரகசியத்தை அறிந்து கொள்வதாகும்.

இந்த நாலாம் அத்தியாயத்தில், பகவான், தன்னிடம் பக்தி செலுத்துவதன் அளவிடற்கரிய பெருமைபற்றிக் கூறும்போது இவ்வாறு சொல்லியுள்ளார் :

யே யத$_2$ா மாம் ப்ரபத்$_3$யந்தே தாம்ஸ்ததை$_2$வ ப$_4$ஜாம்யஹம் ॥
*(கீதை : 4/11)*

*(என் பக்தன் என்னை எந்த முறையில் அணுகுகிறானோ நான் அவனை அதே முறையில் அணுகுகிறேன்.)*

ஐந்தாம் அத்தியாயத்தின் கடைசி சுலோகத்தில், பகவான் தன்னுடைய ஸ்வரூபம், பிரபாவம் மற்றும் குணங்களின் தத்துவத்தை அறிவதன் பலன், மேலான சாந்தியை அடைதல் என்று சொல்லியிருக்கிறார்.

பே$_4$ாக்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேஶ்வரம் ।
ஸுஹ்ருத$_3$ம் ஸர்வபூ$_4$தானாம் ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம்ருச்ச$_2$தி ॥
*(கீதை : 5/29)*

*(என்னை, எல்லா வேள்வி-தவங்களை ஏற்பவராகவும், அனைத்து உலகங்களுக்கும் தலைவனுக்குத் தலைவனாகவும், எல்லா பூதப் பிராணிகளுக்கும் நண்பனாகவும்-அதாவது, சுயநலமில்லாதவர், தயை நிரம்பியவர், பிரேமை உடையவர் என்று-தத்துவத்தோடு உணர்ந்து கொள்ளும் என் பக்தன் சாந்தியை அடைகிறான்.)*

இங்கே ஒரு கேள்வி எழுகிறது. எவனொருவன், பகவான் வேள்வி-விரதங்களை அனுபவிப்பவர், எல்லா உலகங்களுக்கும் தன்னிகரில்லாத் தலைவர், எல்லாப் பிராணிகளுக்கும் நண்பர்-என்று, இந்த மூன்று தன்மைகளோடு கூடியவராக பகவானை அறிந்து கொள்கிறானோ, அவன் தான் சாந்தியை அடைகிறானா? அல்லது, இம்மூன்று லட்சணங்களில் ஏதேனும் ஒன்றுடன் கூடியவராக அறிந்து கொள்பவனுக்கும் கூட சாந்தி கிடைக்குமா? இந்தக்

கேள்விக்குப் பதில் என்னவென்றால், மேலே குறிப்பிட்ட மூன்று லட்சணங்களில் ஏதேனும் ஒன்றுடன் கூடியவராகப் பகவானைத் தெரிந்து கொள்பவருக்கும் சாந்தி கிடைக்கிறது-என்பது தான். எனவே, மூன்று லட்சணங்களையும் உடையவராக அறிந்து கொள்பவனுக்கு சாந்தி நிச்சயமாகக் கிடைக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

வேள்வி-தவம் ஆகியவற்றை அனுபவிப்பவர் பகவான்-என்று கூறுவதன் தாத்பரியம், வேள்வி-தானம்-தவம் என்பதாக சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள எல்லாக் கர்மாக் களும், பகவானை அடைந்து நிறைவெய்துகின்றன-என்பதாகும். ஆகாயத்திலிருந்து பெய்யும் மழைநீர், எவ்வாறு பெருங்கடலிற் புகுந்து விடுகிறதோ, அதுபோல, எல்லா கர்மாக்களும் பரமாத்மாவிலேயே கலந்து விடுகின்றன. ஒன்பதாம் அத்தியாயம் 27, 28வது சுலோகங்களில் விளக்கப் பட்டுள்ள, 'பகவானுக்கே-அர்ப்பணம்' என்ற புத்தியோடு கர்மாக்களை செய்யும் மனிதன் பரம சாந்தி வடிவமான பரமாத்மாவையே அடைந்து விடுகிறான். விலங்கு, பறவை, புழு, பூச்சி, மனிதன், தேவதை முதலிய எல்லாப் பிராணி களிடமும் பகவான் விளங்குகிறார். ஆகவே, இவைகளுக்குப் பணி செய்தலும் போற்றுதலுமே பகவானுக்கு செய்யப்படும் பணி-வழிபாடு ஆகும்-(கீதை : 18/46)-என்று எண்ணிக் கொண்டு எல்லாவற்றையும் பகவானாகவே எண்ணி சேவை புரிய வேண்டும். இவ்வாறு சேவை புரியும் காலத்தில்-அதாவது, அதிதிகளுக்கு உணவு, பசுவுக்குப் புல், காகம் முதலியவற்றுக்கு அன்னம், மரங்களுக்குத் தண்ணீர் என்று செயல்புரியும்போது பகவான் தான் அதிதியாக வந்து உணவு கொள்கிறார்; அவரே பசு வடிவில் வந்து புல்லை ஏற்கிறார்; அவரே காகம் முதலியனவாக வந்து அன்னத்தைப் புசிக்கிறார்; அவரே, மர வடிவில் தண்ணீரைப் பருகுகிறார்-என்று எண்ண வேண்டும். இத்தகைய உணர்வுகளில் மனம் தோய்ந்து, எல்லாவற்றுக்கும் நிஷ்காம பாவனையுடன் சேவை செய்வது தான், தத்துவத்துடன், பகவான் வேள்வி-விரதங் களை அனுபவிப்பவர் என்று அறிவதாகும்; இவ்வாறு அறிந்து கொள்ளும் மனிதன் பரம சாந்தியை அடைந்து விடுகிறான்.

'பகவான் ஸர்வலோக மகேசுவரன் என்று உணர்ந்து கொள்ள வேண்டும்' என்று கூறுவதன் கருத்து என்ன வென்றால், பகவான் அனைத்து உலகங்களுக்குமான தலைவர்களுக்கும் மேம்பட்ட பெருந்தலைவர் என்பதாகும். அவர் தான், எல்லா உலகங்களையும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றைச் செய்து எல்லாவற்றையும் கட்டுப் பாட்டில் வைத்திருக்கிறார். அதனால் தான், அவர், பரமாத்மா, புருஷோத்தமன் முதலிய பெயர்களால் அழைக்கப்படுகிறார். (கீதை : 15/17,18). எல்லா சராசர வஸ்துக்களையும், உயிர்ப் பிராணிகளையும், பொருட்களையும் காட்டிலும் அந்தப் பரமாத்மா தான் மேலானவர், பேராற்றல் படைத்தவர், அந்தர்யாமி, அனைத்தையும் கட்டுப்பாட்டில் வைத்திருப் பவர், அனைத்துக்கும் தலைவர், அனைத்துக்கும் சொந்தக் காரர்-என்று அறிந்து கொள்பவர், அந்தப் பரமாத்மாவை விட்டு விட்டு வேறு எவரை, எவ்வாறு வழிபட முடியும்? மனைவி, மக்கள், செல்வம் முதலிய உலகாயதப் பொருட்களிடம் அவர் அன்பு செலுத்துவதில்லை; அவைகளைப் பற்றி சிந்தித்துப் பார்ப்பதும் இல்லை. அவர், எல்லா வகையாலும் சிரத்தை, பக்தி, நிஷ்காமபாவத்தோடு நித்திய நிரந்தரமாக பகவானையே எண்ணிப் போற்றி, தியானத்தில் ஈடுபடுகிறார் (கீதை : 15/19). ஆக, மேலே சொன்னபடி அறிந்துகொள்வது தான், பகவானை, தத்துவத்துடன் ஸர்வலோக மகேசுவரன் என்று அறிந்து கொள்வதாகும். இவ்வாறு அறிந்து கொள்ளும் மனிதர் பரமசாந்தியை அடைந்து விடுகிறார்.

'பகவான் எல்லா உயிர்களுக்கும் நண்பர்' என்றால், பகவானுடைய ஒவ்வொரு செயலிலும் உலகத்தின் நன்மையும் பிரேமையும் நிரம்பியுள்ளன என்பதாகும். அவருடைய எந்த ஆணையும், தயை-பிரேமை இல்லாததாக இருப்பதில்லை. ஆகவே, பகவான், எல்லாப் பிராணி களுக்கும் நண்பர் ஆகிறார். இந்த ரகசியத்தை அறிந்து கொள்பவர், அனுபவிக்க நேரிடும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் மிக்க தயையுடைய, பிரேமையுடைய பகவானுடைய தயை-பிரேமை நிரம்பிய மங்களமயமான ஆணை என்று புரிந்து கொண்டு, எப்போதும் முகமலர்ச்சியுடன் இருக்கிறார். அவர்,

பகவானைப் பின்பற்றுபவராகவும் பகவானிடம் பேரன்பு படைத்தவராகவும் ஆகிவிடுகிறார். அவரிடமும், நட்புத் தன்மை வந்து விடுகிறது; அதாவது, அவரும், அனைத்துப் பிராணிகளிடமும் காரணமில்லாத தயை காட்டுபவராகவும், அனைத்தையும் நேசிப்பவராகவும் ஆகிவிடுகிறார். அவரிடம், வெறுப்பு என்பது முற்றிலுமாக அழிந்து, பொறுமை-சமத்துவம் முதலிய சீரிய குணங்கள் தாமாகவே வந்து விடுகின்றன; அவருடைய மனம்-புத்தி, இயல்பாகவே, பகவானிடம் கலந்து விடுகின்றன. இவ்விதம், பன்னிரெண்டாம் அத்தியாயம் பதின்மூன்றாவது சுலோகத்திலிருந்து பத்தொன்பதாவது சுலோகம் வரை விளக்கப்பட்டுள்ள பக்தனின் எல்லா லட்சணங்களும் அவரிடம் வந்து விடுகின்றன. இதனால், அவர் பரம சாந்தியை அடைந்து விடுகிறார்.

ஆறாம் அத்தியாயம் பதினொன்று, பன்னிரெண்டு, பதின்மூன்றாவது சுலோகங்களில் ஆஸன விதியைக் கூறி விட்டு, பதிநான்காவது சுலோகத்தில், தன்னுடைய ஸகுண வடிவத்தைத் தியானித்துக் கொண்டே தஞ்சம் அடைய வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். பகவான் கூறுகிறார் -

ப்ரஶாந்தாத்மா விக$_3$தபீ$_4$ர்ப்$_3$ரஹ்மசாரிவ்ரதே ஸ்தி$_2$த: ।
மந: ஸம்யம்ய மச்சித்தோ யுக்த ஆஸீத மத்பர: ॥

*(பிரம்மசர்ய விரதத்தைக் கைக்கொண்டு, அச்சம் தவிர்த்து, மிகவும் அமைதியை அடைந்துள்ள அந்தக்கரணத்தைப் பெற்றுள்ள உறுதியான நினைவுடைய யோகி, மனஓட்டத்தை நிறுத்தி என்னிடம் மனத்தைச் செலுத்தி, என்னிடமே ஈடுபட்டு நிலையாக இருக்கக்கடவன்.)*

இதே அத்தியாயத்தின் முப்பதாவது சுலோகத்தில், எல்லாவற்றிலும் பகவானையே பார்ப்பதன் பெருமையைக் கூறும் காலத்தில், 'எல்லாவற்றிலும் பகவானையே பார்ப்பவன் என் பார்வையிலிருந்து மறைவதில்லை; நான், அவன் பார்வையிலிருந்து மறைவதில்லை' என்று சொல்லியிருக்கிறார்.

இவ்வாறே, இந்த அத்தியாயத்தின் முப்பத்தோராவது மற்றும் நாற்பத்தேழாவது சுலோகங்களிலும் பக்திபாவம் முழுமையாக நிரம்பியிருக்கிறது. ஆக, கர்மயோகத்தை

முக்கியமாக விளக்கும் அத்தியாயங்கள் என்று கூறப்படுபவை களிலும், எந்த ஓர் அத்தியாயத்திலும் பக்தி கூறப்படாமல் இல்லை!

இது போலவே, ஞானயோகத்தை முக்கியமாகக் கூறும் (பதின்மூன்று முதல் பதினெட்டு வரையிலான) ஆறு அத்தியாயங்களிலும் பக்தியைப் பற்றிக் கூறப்படாமல் இல்லை. உதாரணமாக, ஞானத்துக்கான சாதனம் பற்றிக் கூறும் பதின்மூன்றாவது அத்தியாயத்தில்,

மயி சாநந்யயோகே$_3$ந ப$_4$க்திரவ்யபி$_4$சாரிணீ ।

*(கீதை : 13/10)*

*[தன்னேரில்லாத் தலைவனான என்னிடம், வேறெங்கும் செல்லாத மனத்துடன், வேறொன்றை நாடாத பக்தி (யும் ஞானத்தை அடையும் வழி.) - என்று சொல்லப் பட்டிருக்கிறது.]*

பதிநான்காம் அத்தியாயத்தில், குணங்களைக் கடந்த வனாக ஆவதற்கான வழிமுறைகளைக் கூறும்போது, பகவான், தானே சொல்லியிருக்கிறார் -

மாம் ச யோऽவ்யபி$_4$சாரேண ப$_4$க்தியோகே$_3$ந ஸேவதே ।
ஸ கு$_3$ணாந்ஸமதீத்யைதாந்ப்$_3$ரஹ்மபூ$_4$யாய கல்பதே ॥

*(கீதை : 14/26)*

*(வேறெதையும் நோக்காத பக்தியோகம் மூலம், என்னையே எப்போதும் வழிபடும் மனிதரும், இந்த மூன்று குணங் களையும் நன்றாகக் கடந்து சச்சிதானந்தச் செறிவான பிரம்மத்தை அடைவதற்கான தகுதியைப் பெற்று விடுகிறார்.)*

இங்கு, வேறு எதையும் நாடாத பக்தி யோகத்தை, குணங்களைக் கடந்து செல்வதற்கான உபாயமாக சொல்லப்பட்டிருக்கிறது.

பதினைந்தாவது அத்தியாயத்தில், 'பரமபதத்தை அடைவதற்கான உபாயம், கடுமையான வைராக்கியம் மூலமாக உலக வாழ்க்கை என்னும் மரத்தை வெட்டி, பகவானைச் சரண் அடைய வேண்டும்' என்று சொல்லப் பட்டிருக்கிறது. பகவான் சொல்கிறார் -

தத: பத$_3$ம் தத்பரிமார்கி$_3$தவ்யம் யஸ்மிந்க$_3$தா ந நிவர்தந்தி பூ$_4$ய: ।
தமேவ சாத்$_3$யம் புருஷம் ப்ரபத்$_3$யே யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ ॥
*(கீதை : 15/4)*

(உறுதியான வைராக்கியம் என்ற வாளினால், சம்சார மரத்தை வெட்டிய பிறகு, எந்த இடத்துக்குச் சென்று விட்டவர்கள், மீண்டும் திரும்பி இந்த உலகத்துக்கு வரமாட்டார்களோ, அத்தகைய பரமபத வடிவினரான தன்னேரில்லாத் தலைவனை நன்றாகத் தேடத் தொடங்க வேண்டும்; தன்னிகரற்ற எந்தத் தலைவரால், மிகத் தொன்மையான உலக வாழ்க்கையாகிற மரம் தோன்றி விசாலமாக வளர்ந்திருக் கிறதோ, அந்த மூலபுருஷனான நாராயணனை நான் தஞ்சம் அடைகிறேன்-என்று தீர்மானித்துக் கொண்டு, அந்த மாபெரும் தலைவரை மனத்தில் இருத்திக் கொண்டு இடைவிடாது சிந்தித்துக் கொண்டிருக்க வேண்டும்.)

அவ்வாறே, பதினாறாம் சுலோகத்தில் க்ஷரம்-அக்ஷரம் (அழிவது-அழியாதது) பற்றி விளக்கி, பரமாத்மா, ஈசுவரன், புருஷோத்தமன் முதலான பெயர்களால் நிரூபித்துக் காட்டப் பட்ட பரமாத்ம தத்துவத்தை உண்மையான வடிவில் அறிந்துள்ளவனை உரைத்துப் பார்க்கும் உரைகல்லாக, 'எல்லா வகையாலும் பஜித்தல்' என்பது சொல்லப்பட்டி ருக்கிறது.

யோ மாமேவமஸம்மூடே$_4$ா ஜாநாதி புருஷோத்தமம் ।
ஸ ஸர்வவித்$_3$ப$_4$ஜதி மாம் ஸர்வப$_4$ாவேந ப$_4$ாரத ॥
*(கீதை : 15/19)*

*('ஏ, பாரத! இவ்விதமாக, எவனொருவன் என்னை, தத்துவத்தோடு புருஷோத்தமனாக அறிந்து கொண்டு விடுகிறானோ அனைத்தும் அறிந்தவனான அந்த ஞானி, எல்லா வழிகளாலும், எப்போதும், பரமேசுவரனாகவும் வாசுதேவனாகவும் உள்ள என்னை வழிபடுகிறான்.)*

பதினாறாம் அத்தியாயம் முதல் சுலோகத்தில் தைவீ ஸம்பத் (இறைமைச் செழிப்பு) என்பதன் லட்சணத்தைக் கூறும்போது -

அப$_4$யம் ஸத்த்வஸம்ஶுத்$_3$தி$_4$ர்ஜ்ஞாநயோக$_3$ வ்யவஸ்த்தி$_2$தி: ।
*(அச்சமின்மை, அந்தக்கரணம் முற்றிலுமாக மாசற்றிருத்தல், ஞானயோகத்தில் உறுதியான பிடிப்பு-இவைகளே, தைவீ ஸம்பத்தின் முக்கியமான லட்சணங்கள்.)*

இங்கு, 'ஜ்ஞாநயோக$_3$ வ்யவஸ்த்தி$_2$தி:' என்பதன் பொருள்: 'தத்துவஞானத்தைப் பெறுவதற்காகப் பரமாத்மாவை தியானயோகத்தில் எப்போதும் உறுதியான நிலைப்பாடு கொண்டிருத்தல்' என்று சொல்வது, பக்திபாவத்தை நினைவூட்டுவதாக இருக்கிறது.

பதினேழாவது அத்தியாயம் இருபத்துமூன்றிலிருந்து இருபத்தி ஏழாவது சுலோகம் வரை, பரமாத்மாவின் ஓம், தத், ஸத்-என்ற மூன்று பெயர்களைக் கூறிவிட்டு, இவைகளை எவ்வாறு பிரயோகம் செய்வதால் நன்மை ஏற்படுகிறது என்பது மிகத் தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது.

பதினெட்டாவது அத்தியாயத்தைப் பற்றி சொல்லவும் வேண்டுமா? பகவான், அதை சரணாகதியில் நிறைவு செய்திருக்கிறார். அங்கே, கர்மயோகத்தைப் பற்றிக் கூறும் சமயத்திலும் பக்தியைப் பற்றிய வருணனை இருக்கிறது. பகவான் சொல்கிறார் -

யத: ப்ரவ்ருத்திர்பூ$_4$தாநாம் யேந ஸர்வமித$_3$ம் ததம் ।
ஸ்வகர்மணா தமப்$_3$யர்ச்ய ஸித்$_3$தி$_4$ம் விந்த$_3$தி மாநவ: ॥

*(கீதை : 18/46)*

(எந்த தனிப்பெரும் இறைவனிடமிருந்து எல்லாப் பிராணிகளும் உண்டாகியிருக்கின்றனவோ, எதனால் எல்லா உலகங்களும் வியாபிக்கப் பட்டிருக்கின்றனவோ அந்தப் பரம்பொருளை, தன்னுடைய இயற்கையாக அமைந்த கர்மாக்கள் வாயிலாக வழிபட்டு, மனிதன் மிக உயர்ந்த ஸித்திகளைப் பெற்றுவிடுகிறான்.)

இவ்வாறே, ஞானயோகத்தைப் பற்றிப் பேசும் இடத்திலும் பக்தி (உபாசனை)யின் அவசியம் கூறப்பட்டிருக்கிறது.

த்$_4$யாநயோக$_3$பரோ நித்யம் வைராக்$_3$யம் ஸமுபாஶ்ரித: ॥

*(கீதை : 18/52)*

*(உறுதியாக வைராக்கியத்தைக் கடைப்பிடித்து, நித்திய நிரந்தரமாகப் பரமாத்மாவை தியான வடிவமான யோக பராயணராக இருப்பவர்-பிரம்மத்தை அடைவதற்குத் தகுதி படைத்தவராகிறார்.)*

தனித்திருத்தல் (ஏகாந்தவாஸம்), மற்றும், தியான யோகத்தில் நிலைப்பட்ட ஞானநிஷ்டை மூலமாக அடையப் படும் பரமபதம், கோபியரைப் போல* எப்போதும் பகவானையே அடைக்கலம் புகுந்து, தான் செய்ய வேண்டிய கர்மாக்களைச் செய்து கொண்டிருப்பதனாலும் பெறலாகும்.

பகவான் சொல்கிறார் -

ஸர்வகர்மாண்யபி ஸதா$_3$ குர்வாணோ மத்$_3$வ்யபாஶ்ரய:।
மத்ப்ரஸாத$_3$த$_3$வாப்நோதி ஶாஶ்வதம் பத$_3$மவ்யயம்॥

*(கீதை : 18/56)*

*(என்னிடமே ஆழ்ந்துள்ள கர்மயோகி, எல்லாக் காரியங்களையும் எப்போதும் செய்துகொண்டிருந்தாலும் என்னுடைய அருளினால் மிகத் தொன்மையான, அழிவற்ற பரமபதத்தை அடைந்து விடுகிறான்.)*

---

* ***பசுமாட்டைப் பால் கறக்கும்போதும், தானியம் முதலியவைகளைப் புடைக்கும்போதும், தயிர் கடையும் போதும், முற்றத்தை மெழுகும் போதும், குழந்தையைத் தூளியில் இட்டு ஆட்டும் போதும், அழும் குழந்தையை சமாதானப் படுத்தும் போதும், வீட்டில் தண்ணீர் தெளிக்கும் போதும், மற்றும், துடைப்பம் கொண்டு பெருக்குவது போன்ற வீட்டு வேலைகளைச் செய்யும் போதும், பிரேமை நிறைந்த உள்ளத்துடன், கண்களில் நீர் பெருக, தழதழக்கும் குரலில் ஸ்ரீகிருஷ்ணனின் திருநாமத்தையும் கல்யாண குணங்களையும் இசைத்துக் கொண்டிருந் தார்களே!-ஆகா! விரஜபூமியின் இடைச் சிறுமிகள் தான் எவ்வளவு பேறு பெற்றவர்கள்! (ஸ்ரீமத் பாகவதம், 10வது ஸ்கந்தம், சுலோகம் 15)***

இவ்விதம், பகவான், தன்னைச் சரணாகதி அடைதல் என்ற முறையிலான பக்தியின் பெருமையைக் கூறியபின், எல்லாவகையாலும் தன்னையே தஞ்சம் அடையும்படி அர்ஜுனனுக்கு ஆணையிடுகிறார்.

சேதஸா ஸர்வகர்மாணி மயி ஸந்யஸ்ய மத்பர:।
பு$_3$த்$_3$தி$_4$யோக$_4$முபாஶ்ரித்ய மச்சித்த: ஸததம் ப$_4$வ॥
மச்சித்த: ஸர்வது$_3$ர்க$_3$ாணி மத்ப்ரஸாத$_3$ாத்தரிஷ்யஸி।
*(கீதை : 18/57,58)*

*[எல்லாக் கர்மாக்களையும் மனப்பூர்வமாக எனக்கு அர்ப்பணம் செய்; ஸமபுத்தி (அனைத்துப் பிராணிகளையும் பகவானாகவே காண்பது; சுக-துக்கமாகிற இரட்டைகளை சமமாகவே நினைப்பது) என்ற யோகத்தை கைக்கொள்வாய்; எல்லாக் காலத்திலும் உன் உள்ளத்தை என்பால் நிலை நிறுத்து, இவ்விதம் என்னிடம் சித்தத்தை ஈடுபடுத்தினால், என்னுடைய அருளினால், எல்லாத் துன்பங்களையும் நீ வெகு எளிதாகக் கடந்து விடுவாய்.]*

இந்த இடத்தில், பகவான் தன்னுடைய ஸகுண-ஸாகார ஸ்வரூபத்தைப் பக்தி செய்வதன் இலக்கணத்தைக் கூறி, அர்ஜுனனுக்குத் தன்னைச் சரண் அடையும்படி உத்திரவிட்டு, அதன் பெருமையைக் கூறியிருக்கிறார். ஸகுண-நிராகாரத்தைச் சரண் அடைவதன் பலனாக பரம சாந்தியும், பரமபதத்தில் நிரந்தர வாழ்வும் கிடைக்கும் என்றாலும், அதனை மிகவும் ரகசியமானது என்று கூறப்பட்டிருக்கிறதே தவிர, மிக மிக ரகசியமானது என்று சொல்லப்படவில்லை. பகவான் சொல்கிறார்-

தமேவ ஶரணம் க$_3$ச்ச$_2$ ஸர்வப$_4$ாவேந ப$_4$ாரத।
தத் ப்ரஸாத$_3$ாத்பராம் ஶாந்திம் ஸ்த$_2$ாநம் ப்ராப்ஸ்யஸி ஶாஶ்வதம்॥
இதி தே ஜ்ஞாநமாக்$_2$யாதம் கு$_3$ஹ்யாத்$_3$கு$_3$ஹ்யதரம் மயா।
*(கீதை : 18/62,63 முன்பாதி)*

*(ஏ, பாரத! நீ எல்லா வகையாலும் எங்கும் நிறைந்துள்ளதும் அனைத்தின் மேலும் இறையாண்மை செலுத்துவதுமான பரம்பொருளைச் சரண் அடைக; அந்தப் பரமாத்மாவின் கிருபையினால் நீ பரமசாந்தியையும் தொன்மையான பரம*

*பதத்தையும் அடைவாய். ரகசியங்களைக் காட்டிலும் மிக ரகசியமான இந்த ஞானத்தை நான் உனக்குக் கூறியிருக்கிறேன்.)*

மிக மிக ரகசியம் என்று, தன்னைச் சரணாகதி அடையும் பக்தியைத் தான் பகவான் கூறியிருக்கிறார் –

ஸர்வகு$_3$ஹ்யதமம் பூ$_4$ய: ஶ்ருணு மே பரமம் வச:।
இஷ்டோऽஸி மே த்$_3$ருட$_4$மிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம்॥
மந்மநா ப$_4$வ மத்$_3$ப$_4$க்தோ மத்$_3$யாஜீ மாம் நமஸ்குரு।
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜாநே ப்ரியோऽஸி மே॥
ஸர்வத$_4$ர்மாந்பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ।
அஹம் த்வா ஸர்வபாபேப்$_4$யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:॥
*(கீதை : 18/64-66)*

*[ரகசியமான எல்லாவற்றைக் காட்டிலும் மிகவும் ரகசியமான சொற்களை (ஞானத்தை)க் கேள் : நீ எனக்கு மிகவும் பிரிய மானவன் என்பதால், மிகவும் நன்மையை அளிக்கக் கூடிய சொற்களை (தத்துவத்தை) நான் உனக்குக் கூறப்போகிறேன். நீ என்னிடமே உன் மனத்தை நிலைநிறுத்து; என்னைப் பக்தி செய்பவனாக ஆகிவிடு; என்னைப் போற்று; என்னை வணங்கு. இவ்வாறு செய்தால், நீ என்னையே அடைந்து விடுவாய். இதை நான் உனக்கு சத்தியப் பிரமாணம் செய்து சொல்கிறேன். ஏனென்றால், நீ எனக்கு மிகவும் பிரிய மானவன். எல்லா தர்மங்களையும் அதாவது, விதிக்கப்பட்ட எல்லா கர்மாக்களையும் என்னிடமே தியாகம்-அர்ப்பணம்- செய்துவிட்டு, தனிப்பெரும் பொருளான, பேராற்றல் படைத்த, அனைத்துக்கும் ஆதாரமான, அனைத்தின்மேலும் இறையாண்மை செலுத்தும் என்னையே சரண் அடைவாய். நான், எல்லாப் பாவங்களிலிருந்தும் உன்னை விடுவிக் கிறேன். நீ கவலைப்பட வேண்டாம்.]*

இந்த இடத்தில், 'மிக மிக ரகசியமானது' என்று கூறுவதன் உட்பொருள் என்னவென்று பார்ப்போம். அறுபத்திரண்டு, அறுபத்து மூன்றாவது சுலோகங்களில் 'எங்கும் வியாபித்துள்ள நிராகார பரமாத்மாவை சரண் அடைதல்'-என்பது, மிக ரகசியமான தத்துவ ஞானம் என்று

கூறினார், ஆனால், இங்கே, பகவான் தானே வெளிப்பட்டு, தன்னைப் பற்றிய உண்மைகளைக் கூறிவிட்டு, 'நான் தான் சாட்சாத் பரமாத்மா; நீ என்னைச் சரண் அடைவாயாக' என்கிறார். இவ்விதமாக வெளிப்பட்டுத் தன்னைப் பற்றி விளக்கம் கொடுத்தல் என்பது, அர்ஜுனன் போன்ற மிகவும் வேண்டப்பட்ட பிரேம பக்தனுக்கு எதிரில் தான் நிகழ இயலும். மற்றவர்களிடம், 'நான் தான் சாட்சாத் பரமாத்மா; நீ என்னைச் சரண் அடைவாயாக' என்று கூற முடியாது.

இங்கே, அறுபத்துநாலாவது சுலோகத்தில், 'என்னுடைய மிகமிக ரகசியமானதும் உயர்ந்ததுமான சொற்களை மீண்டும் கேள்' என்று சொல்வதன்மூலம், முன்பு, ஒன்பதாவது அத்தியாயம் முப்பத்துநான்காவது சுலோகத்தில் சொல்லப்பட்ட கருத்துக்களை குறிப்பிட்டுக் காட்டுகிறார். அங்கே, முப்பத்திரண்டாவது சுலோகத்தில் சரணாகதியின் பெருமை கூறப்பட்டுள்ளது; முப்பத்துநாலாவதில் அதன் வடிவம் விளக்கப்பட்டுள்ளது. அதனையும் 'மிக மிக ரகசியம்' என்று சொல்லியிருக்கிறார்.

ஒன்பதாம் அத்தியாயம், முதல் இரண்டு சுலோகங்களில், 'அநஸூயவே' (பொறாமை அற்றவன்) என்ற சொற் பிரயோகத்தினால், அர்ஜுனன், ஞான உபதேசம் பெறத் தகுதி வாய்ந்தவன் என்று ஏற்றுக் கொண்டு, மிக மிக ரகசிய தத்துவத்தை நிறைய நிறையப் புகழ்ந்து, குஹ்யதமம்-ராஜ குஹ்யம் போன்ற சொற்களைப் பிரயோகம் செய்து, வாக்களித்திருந்தபடி சரணாகதி வடிவான பக்தியாகிற விஷயத்தையே மிக விரிவாக விளக்கினார்; இறுதியில் முப்பத்து நான்காவது சுலோகத்தில், சரணாகதியைப் பற்றி மிகத் தெளிவாகக் கூறி அந்த அத்தியாயம் நிறைவு செய்யப்பட்டிருக்கிறது. பகவான் கூறுகிறார்-

> மந்மநா ப₄வ மத்₃ப₄க்தோ மத்₃யாஜீ மாம் நமஸ்குரு ।
> மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்மாநம் மத்பராயண: ॥

**(என்னிடம் மனத்தைச் செலுத்து; என் பக்தனாக ஆகு; என்னை வழிபடு; என்னை வணங்கு. இவ்வாறு தன்னையே என்னிடம் ஈடுபடுத்தி, என்னிலேயே ஆழ்ந்து விட்டால், நீ என்னையே அடைந்து விடுவாய்.)**

இங்கு ஒரு கேள்வி எழுகிறது. சரணாகதி என்கிற பக்தி வழிக்கான நான்கு சாதனங்களில், ஏதேனும் ஒரு வழியைக் கடைப்பிடித்தாலே பகவத்பிராப்தி கிடைக்குமா? அல்லது, நான்கு வழிகளையும் கடைப்பிடித்தாக வேண்டுமா? இதற்கு விடை : ஒரு வழியை கடைப்பிடித்தாலே கூட பகவத்பிராப்தி கிடைக்கும். எனவே, நான்கு வழிகளையும் கடைப்பிடித்தால், பகவத்பிராப்தி நிச்சயமாகக் கிடைக்கும் என்பதை சொல்ல வேண்டுமா, என்ன!

'மன்மனா ப$_4$வ' (மனத்தில் என்னையே நிரப்பிக் கொள்)-இந்த ஒரு சாதனை-பகவானிடம் மனத்தைச் செலுத்துதல் மூலமாகவே பகவத்பிராப்தி கிடைக்கும் என்ற உண்மை, இதே அத்தியாயம் இருபத்திரண்டாம் சுலோகத் திலிருந்து தெரியவருகிறது. பகவான் கூறியிருக்கிறார் -

அநந்யாஶ்சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே ।
தேஷாம் நித்யாபி$_4$யுக்தாநாம் யோக$_3$க்ஷேமம் வஹாம்யஹம் ॥

*(அனன்ய பிரேமையோடு கூடிய எந்த பக்தர்கள், பரமேசுவரரான என்னை நித்திய நிரந்தரமாக நிஷ்காம பாவத்துடன் வழிபடுகிறார்களோ, அவ்விதம் சதாகாலமும் என்னையே சிந்தித்துக் கொண்டிருப்பவர்களின் யோக க்ஷேமத்தை நான் அடைவிக்கிறேன்.)*

இங்கே, 'அடைய முடியாததை அடைவது' என்பது யோகம்; அடைந்து விட்டவைகளைக் காப்பாற்றுவது என்பதற்குப் பெயர், க்ஷேமம். ஆக, பகவானை அடைவதற் காக எந்த சாதனைமுறை அவர்களுக்கு (பக்தர்களுக்கு)க் கிடைத்திருக்கிறதோ, அதற்கு ஏற்படக் கூடிய தடை-தடங்கல்களிலிருந்து அதனைக் காப்பாற்றுதல்; மற்றும், எந்த சாதனை முறையில் நலிவு இருக்கிறதோ அதை வலுப்படுத்தி நிறைவு பெறச் செய்து, தன்னை அடைவதற்காக, தானே ஏற்பாடு செய்து கொடுத்தல்-என்பது தான், 'அடியார்களின் யோகக்ஷேமத்தை ஏற்றுக் கொள்ளுதல்' ஆகும்.

பக்திமார்க்கத்தில் உள்ள இந்தச் சிறப்பு அம்சம் கவனிக்கத் தக்கது. சாதக பக்தர்களால் அனுஷ்டிக்கப்படும் சாதனையைக் காப்பாற்றுவதும், அவர்களுடைய சாதனை களில் ஏற்படும் தொய்வுகளை சரிப்படுத்தி நிறைவு

படுத்துவதும்-பகவானே செய்து விடுகிறார்! இந்த இடத்தில், 'காப்பாற்றுதல்' என்று கூறுவதன் அபிப்பிராயம் என்ன? ஒரு பக்தன், பகவானிடம், உலகாயதப் பொருள் ஒன்றைக் கேட்கிறான் என்று வைத்துக் கொள்வோம். ஆனால், அது அவனுக்கு ஆகாது என்று பகவான் கருதினார் என்றால், அத்தகைய வஸ்துவை அவன் வேண்டிக் கேட்டாலும், அவனுக்கு அந்தப் பொருளைக் கொடுக்க மாட்டார். நாரதர், பகவானிடம் 'ஹரி வடிவம் வேண்டும்' என்று கோரினார். ஆனால், அது அவருக்கு நன்மை தராது என்று பகவான் கருதியதால், ஹரி என்ற சொல்லுக்கு உரிய மற்றொரு பொருளான வானர வடிவத்தைக் கொடுத்து விட்டார்! இதன் விளைவாக அவர் கொடுத்த சாபத்தையும் பகவான் ஏற்றுக் கொண்டார். ஆனால், இவ்வாறு அவர் கோரியதற்கு மாறானதைக் கொடுத்ததன் மூலம், பொன்-பெண்ணாசை யிலிருந்து தன்னுடைய பக்தனைக் காப்பாற்றிவிட்டார்!-ஒரு நல்ல மருத்துவர், நோயாளி பிரியப்பட்டாலும், உடலுக்குத் தகாத உணவைத் தவிர்த்து, அவனைக் காப்பாற்றுவாரே, அதைப் போல.

என் பக்தனாக ஆகு-மத்₃ப₄க்தோ ப₄வ-என்ற ஒரு வரியை எடுத்துக் கொள்வோம். பகவானிடம் பக்தி செலுத்து வதனால் பகவானை அடைய முடியும் என்ற செய்தி, இதே அத்தியாயம் முப்பது, முப்பத்தொன்றாவது சுலோகங்களில் விளக்கப்பட்டிருக்கிறது.

என்னை வழிபடு (மத்₃யாஜீ ப₄வ)-பகவானைப் போற்றி வழிபடுவதனால் பகவத்பிராப்தி கிடைக்கும் என்ற விஷயம், இதே அத்தியாயம் இருபத்தியாறாவது சுலோகத்திலிருந்து தெரிந்து கொள்ளலாகும்.

பத்ரம் புஷ்பம் ப₂லம் தோயம் யோ மே ப₄க்த்யா ப்ரயச்ச₂தி।
தத₃ஹம் ப₄க்த்யுபஹ்ருதமஶ்நாமி ப்ரயதாத்மந:॥

*(என்னுடைய பக்தன், பேரன்போடு எனக்கு அளிக்கும் இலை, பூ, பழம், நீர் முதலிய எதுவாயினும், நிஷ்காம பாவத்துடனும் தூய உள்ளத்துடனும் அர்ப்பணம் செய்யப்படும் இலை-மலர் முதலியவைகளை, நான், ஸகுண வடிவத்தில் தோன்றி திருப்தியுடன் உண்கிறேன்.)*

இந்த இடத்திலும் ஒரு சந்தேகம் வரக்கூடும். இந்த சுலோகத்தில் இலை, மலர், பழம், தண்ணீர் என்ற நான்கு பொருட்களின் அர்ப்பணம் சொல்லப்பட்டிருக்கிறது என்பதால் இந்த நான்கு பொருட்களையும் சேர்த்து அர்ப்பணம் செய்தால் தான் பகவான் நேரில் தோன்றி ஏற்றுக்கொள்வாரா? அல்லது, ஏதேனும் ஒன்றை மட்டும் அர்ப்பணம் செய்தாலும் ஏற்றுக் கொள்வாரா?

பக்தியுடன் அளிக்கப்படும் ஏதேனும் ஒன்றை மட்டுமே கூட அவர் ஏற்றுக் கொண்டு விடுகிறார்; ஏனென்றால், இந்த விஷயத்தில் பொருட்கள் முக்கியம் அல்ல; பிரேமை தான் முக்கியம். அன்பு இருந்து விட்டால், நால்வகைப் பொருட்களில் ஏதேனும் ஒன்றை அர்ப்பணம் செய்தாலும் போதும், பகவான் அதனை ஏற்றுக் கொள்கிறார். உதாரணமாக, திரௌபதி* அளித்த ஒரு சிறு கீரைத் துணுக்கையும், கஜேந்திரன்+ அர்ப்பணித்த ஒரு புஷ்பத்தையும், வேட்டுவமாது** அர்ப்பணித்த பழத்தையும் ரந்திதேவன்= கொடுத்த தண்ணீரையும் பகவான் நேரில் வந்து, பெற்றுக் கொண்டார். இவ்விதம், இவர்கள் எல்லோரும் ஒவ்வொரு பொருளை அர்ப்பணித்தே பகவானை நேரில் காணும் பாக்கியம் பெற்றுவிட்டார்கள். அப்படியிருக்கும் போது, எல்லா வழிகளாலும், பக்தியோடு பகவானைப்

---

* *திரௌபதியின் இந்த வரலாறு, மகாபாரதம் வனபர்வத்தில் உள்ளது.*

\+ *கஜேந்திரனின் சரித்திரம் ஸ்ரீமத் பாகவதம் எட்டாவது ஸ்கந்தத்தில் வருகிறது.*

** *ஸ்ரீராமசரித மானஸம் அரண்யகாண்டத்தில் இந்தக் கதை இருக்கிறது.*

= *மாமன்னர் ரந்திதேவனின் கதையை ஸ்ரீமத் பாகவதம் ஒன்பதாவது ஸ்கந்தம் இருபத்தியோராம் அத்தியாயத்தில் காணலாம்.*

பூஜிப்பவர்களுக்கு, பகவான் கிடைப்பார் (நேரில் தோன்றி அருள்புரிவார்) என்பதைக் கூறவும் வேண்டுமா?

இதே போல், 'நமஸ்குரு' (நமஸ்காரம் செய்)- பகவானை நமஸ்காரம் செய்வதாலேயே பகவானை அடைய முடியும்; எனினும், கீதையில் பகவான் நமஸ்காரத்துடன் கீர்த்தனம் முதலிய பக்தி தொடர்பான பிற செயல்களையும் இணைத்தே கூறியிருக்கிறார் -

ஸததம் கீர்தயந்தோ மாம் யதந்தஶ்ச த்$_3$ருட$_4$வ்ரதா: ।
நமஸ்யந்தஶ்ச மாம் ப$_4$க்த்யா நித்யயுக்தா உபாஸதே ॥

*(கீதை : 9/14)*

*(மிக உறுதியாகத் தீர்மானித்துக் கொண்டு விட்ட பக்தர்கள், என்னுடைய திருநாமம் மற்றும் குணங்களைக் கீர்த்தனம் செய்துகொண்டு, எப்போதும் என் நினைவிலேயே இருந்து வேறெங்கும் செல்லாத பிரேமையுடன் என்னை உபாஸிக்கிறார்கள்.)*

மகாபாரதம் சாந்திபர்வத்தில், வெறுமே நமஸ்காரம் செய்வதாலேயே சம்சாரத்திலிருந்து கடைத்தேற முடியும் என்பது சொல்லப்பட்டிருக்கிறது.

ஏகோऽபி க்ருஷ்ணஸ்ய க்ருத: ப்ரணாமோ தஶாஶ்வமேத$_4$ாவப்$_4$ருதே$_2$ந துல்ய: ।
தஶாஶ்வமேதீ$_4$ புநரேதி ஜந்ம க்ருஷ்ணப்ரணாமீ ந புநர்ப$_4$வாய ॥

*(47/92)*

*[பகவான் ஸ்ரீகிருஷ்ணனுக்கு ஒரு தடவை செய்யப்படும் நமஸ்காரம், பத்து அசுவமேத யாகங்களின் நிறைவில் செய்யப்படும் அவப்ருதஸ்நானத்துக்கு நிகரானது. (நிகரான பலனை கொடுக்கக் கூடியது.) பத்து அசுவமேதங்களைச் செய்தவன், அதன் நற்பலன்களை (மேலுலகங்களில்) அனுபவித்து விட்டு மீண்டும் உலகத்தில் பிறப்பை அடைகிறான்; ஆனால், பகவான் ஸ்ரீகிருஷ்ணனுக்கு நமஸ்காரம் செய்பவன் மறுபடி உலகத்தில் பிறவி எடுப்பதில்லை.]*

ஒன்பதாம் அத்தியாயம் முதல் இரண்டு சுலோகங்களில் பகவான் தன்னிடம் செலுத்தப்படும் பக்தியை, எல்லா

வற்றிலும் ரகசியமானது (குஹ்யதமம், ராஜகுஹ்யம்) என்றும் மெய்யுணர்வுடன் கூடிய ஞானம் என்றும் கூறி, அத்தகைய பக்திதான் மிகவும் உத்தமமானது, சுலபமானது என்றும், அதனை ஏராளமாகப் புகழ்ந்து பேசியுள்ளார்-என்ற விஷயம் முன்னரே கூறப்பட்டுள்ளது.

இவ்வளவு சுலபமான மார்க்கம் இருந்தும் கூட எல்லா மனிதர்களும் அதில் ஈடுபடுவதில்லையே-என்றால், அதற்குக் காரணம் சிரத்தைக் குறைவு தான்.

அஶ்ரத்$_3$த$_3$த$_4$ாநா: புருஷா த$_4$ர்மஸ்யாஸ்ய பரந்தப।
அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மநி॥
*(கீதை : 9/3)*

*(எதிரிகளை வாட்டுபவனே! மேலே சொல்லப்பட்ட தர்மத்தில் நம்பிக்கை கொள்ளாத மனிதர்கள், என்னை அடையாமல், (பிறப்பு)-இறப்பு என்னும் சம்சாரச் சுழலில் சுழன்று கொண்டேயிருக்கிறார்கள்.)*

இந்த இடத்தில் ஒரு கேள்வி எழுகிறது. பகவத் பக்திக்கான சாதனை முறைகளில் நம்பிக்கை இல்லாதவர்கள், உலகிலுள்ள எண்பத்துநான்கு லட்சம் யோனிகளில் வெளிப் பட்டு சுழன்று கொண்டிருக்கிறார்கள்-என்பது, நிச்சயமாக நடக்கக் கூடியது. ஆனால், அப்படி நம்பிக்கை இல்லாதவர்கள் பகவானை அடைவது என்பது நடக்கக்கூடியதே இல்லை என்னும்போது 'என்னை அடையாமல்' என்று சேர்த்துச் சொல்வதற்கு என்ன அவசியம் ஏற்பட்டது?

இதற்கு, பின்வருவது தான் பதில்.

'என்னை அடையாமல்' என்று சொல்லியதன்மூலம் ஒரு விஷயம் தெள்ளத் தெளிவாக விளங்குகிறது- மனிதனுக்கு மட்டும் தான் பரமாத்மாவை அடையும் தகுதி, பிறவியினாலேயே கிடைத்திருக்கிறது.

உதாரணமாக, ஒரு மன்னரின் புதல்வனுக்கு, அவன் அரசகுமாரன் என்றதாலேயே, அந்த நாட்டின்மீது அதிகாரம் இயற்கையாகவே கிடைத்திருக்கிறது; என்றாலும் தந்தை யிடம் சிரத்தை-பக்தி இல்லை என்றால், அந்த அரசு அவனுக்குக் கிடைக்காமற் போகலாம். அப்படி நடந்தால்,

அதில் குற்றம் ஏதும் இல்லை. அதுபோலவே, பகவானை அடைதல் என்பது மனிதப் பிறவி எடுத்ததாலேயே இயல்பாகக் கிடைத்துவிட்ட தகுதி; என்றாலும், பகவானிடம் சிரத்தை, பக்தி, பிரேமை இல்லாமற் போனால், அவர் பகவானை அடைய முடியாது-என்று கூறுவது தவறு அல்ல.

ஆகவே, மனிதன், சிரத்தை-பக்தியோடு கூட நித்திய நிரந்தரமாக பகவானை சிந்தித்துக் கொண்டிருக்க வேண்டும். உட்காரும்போதும் எழுந்திருக்கும்போதும் தூங்கும்போதும் விழித்துக் கொண்டிருக்கும் போதும்-எல்லாச் சமயத்திலும் பகவானை ஸ்மரித்துக் கொண்டிருத்தல் மிகவும் உயர்வானது. எல்லா நேரத்திலும் பகவானை நினைத்துக் கொண்டிருந்தால், கடைசிக் காலத்தில், இயற்கையாகவே, பகவத் ஸ்மரணை ஏற்பட்டு விடும். இறுதிக் காலத்தில் ஏற்படும் சிந்தனைக்கு பெரும் சிறப்பு உண்டு. பகவான் சொல்கிறார் -

அந்தகாலே ச மாமேவ ஸ்மரந்முக்த்வா கலேவரம் ।
ய: ப்ரயாதி ஸ மத்$_{3}$ப$_{4}$ாவம் யாதி நாஸ்த்யத்ர ஸம்ஶய: ॥

*(கீதை : 8/5)*

*(கடைசிக் காலத்தில் கூட என்னையே நினைத்துக் கொண்டு உடலைத் துறந்து இவ்வுலகிலிருந்து செல்பவன், அவன் சாட்சாத் என் வடிவத்தையே (என்னையே) அடைகிறான். இதில் சிறிதும் சந்தேகமில்லை.)*

பகவானை நினைத்துக் கொண்டே மரணம் அடைபவனை பகவான் கைதூக்கி விடுகிறார் என்றும், அவரை நினைக்காதவரை அவர் கைதூக்கி விடுவதில்லை என்றும் சொன்னால், தன்னைக் கௌரவிக்கும் மனிதர்களின் பக்கமே பகவான் சேர்ந்திருக்கிறார்-என்று நினைத்துக் கொள்வோமேயானால், அது சரியன்று. ஏனென்றால், பகவான் (கீதை : 8/6ல்) ஒரு விதியை வகுத்துக் கூறியுள்ளார் : 'மரணம் ஏற்படும் காலத்தில் விலங்கு, பறவை, புழு, பூச்சி, மனிதன், தேவதை, முன்னோர் முதலானவற்றில் எந்த ஒரு வடிவத்தை சிந்தித்தபடியே உயிர் விடுகிறானோ, அவன் (அடுத்த பிறவியில்) அந்த வடிவத்தையே அடைகிறான்.' இந்த நியாயப்படி, பகவானை எண்ணிக்கொண்டே உயிரை விடுகிறவன், பகவானையே அடைகிறான் (என்பது

பொருத்தம் தானே?) ஆகவே, மேலே சொன்ன வாதத்தில் கூறியபடி, பகவானிடம் ஒரு கட்சியைச் சார்ந்திருத்தல், அல்லது, தாறுமாறாக நடந்து கொள்ளுதல் என்ற குற்றம் ஏற்படாது. பகவான் தானே கூறியிருக்கிறார் -

ஸமோ஽ஹம் ஸர்வபூ₄தேஷு ந மே த்₃வேஷ்யோ஽ஸ்தி ந ப்ரிய:।
யே ப₄ஜந்தி து மாம் ப₄க்த்யா மயி தே தேஷு சாப்யஹம்॥

*(கீதை : 9/29)*

*(நான் எல்லாப் பிராணிகளிடமும் சமபாவத்துடன் வியாபித் திருக்கிறேன்; எனக்குப் பிரியமில்லாதவன் யாரும் இல்லை; பிரியம் உள்ளவன் என்றும் யாரும் இல்லை. ஆனால், என்னைப் பிரேமையுடன் வழிபடும் பக்தர்கள், என்னிடம் இருக்கிறார்கள்; நானும் அவர்களால் நேரில் காணப்படுகிறேன்.)*

ஸ்ரீதுளஸீதாஸரால் இயற்றப்பட்ட ராமசரிதமானஸம் கிஷ்கிந்தா காண்டத்தில், பகவான் ஸ்ரீராமசந்திரன், பக்தனான அனுமனிடம் -

'என்னை எல்லோரும் சமதர்சி (எல்லோரையும் சமமாகப் பார்க்கிறவர்) என்று சொல்கிறார்கள்; ஆனால், என்னிடம் அநன்ய பக்தி செலுத்துபவருக்கு நான் சேவகன்' என்று சொல்லியிருக்கிறார்.

'எனக்கு மிகவும் வேண்டியவர்.' ஏனென்றால், அவருக்கு வேறு கதியில்லை. இந்த இடத்தில் ஒரு விஷயத் தைத் தெளிவாகத் தெரிந்துகொள்வோம். அது என்ன? 'பகவான், சமதர்சி என்று கூறப்படுகிறார். ஆனால், அவரோ, 'என்னை வழிபடுவர் இதயத்தில் நான் இருக்கிறேன்; என் இதயத்தில் அவர் இருக்கிறார்' என்று சொல்கிறார்-என்றால், இது சமமில்லாத பார்வை தானே?' இதற்கு, இப்படித்தான் பதில் கொடுக்கப்படுகிறது : சூரியன், எல்லாப் பொருட்கள் மேலும் சமமாகவே ஒளியைப் பொழிகிறான். ஆனால், கண்ணாடியில் சூரியனின் பிரதிபிம்பம் தெரிகிறது; கட்டை முதலானதுகளில் தெரிவதில்லை. தவிர, சூர்யகாந்தக்கல், சூரியனின் கிரணங்களைத் தன்பால் இழுத்து, பஞ்சு, துணி போன்றவை களைப் பொசுக்கி விடுகிறது. இது அந்தப் பொருளின் தனித் தன்மையைக் காட்டுகிறதே தவிர,

சூரியனின் வேற்றுமை பாராட்டும் தன்மையை அல்ல. அதுபோல, பகவானுடைய பக்தர்களிடம் அமைந்துள்ள பிரேமைக்குத் தான் மேலே கூறப்பட்ட சிறப்புத் தன்மை இருக்கிறதே தவிர, பகவானிடம் வெவ்வேறு மாதிரியாகப் பார்க்கும் குற்றம் ஏற்படாது.

ஆகவேதான், எப்போதும் பகவானுடைய நாமம்-குணம் பற்றி ஸ்மரணம் செய்து கொண்டிருக்க வேண்டும். ஏன் என்றால், உடம்பை ஒருபோதும் நம்புவதற்கில்லை; உயிர் எப்போது போகும் என்பது தெரியாது. எப்போதும் பகவா னையே நினைத்துக் கொண்டிருக்கும் பக்தனுக்கு, கடைசி காலத்தில் பகவானைப் பற்றிய சிந்தனை இயல்பாகவே ஏற் பட்டு விடும். நித்திய நிரந்தரமாக, பரம திவ்விய புருஷரான பரமாத்மாவை நினைத்துக் கொண்டே இருப்பவன், பகவா னிடம் உள்ள பக்தியின் பிரபாவத்தால், கடைசி காலத்தில் பகவானையே நினைத்துக் கொண்டிருந்து, அந்தப் பரமதிவ்ய புருஷரான பரமாத்மாவையே அடைந்து விடுகிறான். இது போலவே, புலன்களையும் மனத்தையும் எல்லாப் பக்கங்களிலிருந்தும் தடுத்து நிறுத்தி, சிரத்தா பக்தியுடன் பரமாத்மாவின் பெயரை உச்சரித்துக் கொண்டும் அவருடைய திருவடிவத்தைத் தியானித்துக் கொண்டும் எவனொருவன் சரீரத்தைத் துறக்கிறானோ, அவன் நிச்சயமாக, பரமகதியை அடைந்து விடுகிறான். (கீதை : 8/8 முதல் 13 வரை)

ஆகவே தான், ஞானயோகம், தியானயோகம், அஷ் டாங்க யோகம், கர்மயோகம் முதலிய பகவானை அடைவதற் கான எத்தனையோ சாதனைகளில், பகவானிடம் பக்தி செலுத் துதல் என்னும் சாதனை மிகச் சிறந்தது. பகவான், ஆறாவது அத்தியாயம் நாற்பத்தேழாவது சுலோகத்தில் கூறுகிறார் -

யோகி$_3$நாமபி ஸர்வேஷாம் மத்$_3$க$_3$தேநாந்தராத்மநா ।
ஶ்ரத்$_3$த$_4$ாவாந்ப$_4$ஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத: ॥

*(யோகிகள் எல்லோரிலும், சிரத்தை மிக்கவுடையவர், என்னிடமே முற்றிலுமாக முழு மனத்துடன் ஈடுபட்டு, என்னையே எப்போதும் வழிபட்டு வருபவர் எவரோ அவர் என்னால் மிக உயர்வாக மதிக்கப்படுவார்.)*

மேலும், அர்ஜுனன் கேட்டதும், பன்னிரெண்டாம் அத்தியாயம் இரண்டாவது சுலோகத்தில், பகவான் தன்னிடம் பக்தி செலுத்துபவர்கள் மற்ற எல்லோரைக் காட்டிலும் உத்தமமானவர்கள் என்று கூறி, பக்தியின் பெருமையை சிறப்பாகக் கூறியிருக்கிறார் -

மய்யாவேஶ்ய மநோ யே மாம் நித்யயுக்தா உபாஸதே।
ஶ்ரத்$_3$த$_4$யா பரயோபேதாஸ்தே மே யுக்ததமா மதா:॥

(என்னிடம் மனத்தை ஒருமுகப்படுத்தி, எப்போதும் என் வழிபாடு-தியானத்தில் ஆழ்ந்துள்ள பக்தர்கள், மிக மேலான சிரத்தையோடு, தன்னிகரற்ற தலைவனான என்னை ஸகுண வடிவில் வழிபடுகிறார்கள்; அவர்கள், யோகிகளுக்குள் மேலான யோகிகள் என்று என்னால் போற்றத் தக்கவர்கள்.)

பக்தி, எளிதாக இருப்பதால், சிறந்தது-என்று நினைத்து விடக் கூடாது. பக்திமார்க்கத்தில் உள்ள ஒரு சிறப்பம்சம் என்னவென்றால், பக்தன், தன் கண்களாலேயே, பகவானைக் காண முடிகிறது (கீதை : 11/54) என்பது தான்; அவ்வாறே, பக்தனால் சமர்ப்பிக்கப்படும் இலை-மலர்-பழம் முதலியவை களை பகவான் நேரில் தோன்றி அருந்துகிறார் (கீதை : 9/26). இந்த அனுபவம், ஞானயோகம், அஷ்டாங்க யோகம் அல்லது கர்மயோக அனுஷ்டானத்தில் கிடைக்கக் கூடியது அல்ல. ஆகவே, பக்தியோகம் மிகச் சிறந்த வழி என்று கூறுவது சாஸ்திரக் கூற்றுக்கு ஒத்து வருவதுடன், தர்க்க ரீதியாகவும் ஒப்புக் கொள்ளத் தக்கதாக இருக்கிறது.

இதைத் தவிர, வேறெங்கும் செல்லாத மனத்துடன் நித்திய நிரந்தரமாக பகவானையே நினைத்துக் கொண்டிருப் பவருக்கு, கடினமான வேறு முயற்சிகள் இன்றியே (அநாயாஸமாகவே) அவர் கிடைத்து விடுகிறார்!

அநந்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ:।
தஸ்யாஹம் ஸுலப$_4$: பார்த$_2$ நித்யயுக்தஸ்ய யோகி$_3$ந:॥

*(கீதை : 8/14)*

*('அர்ஜுனா! எந்த மனிதர் என்னிடமே மனத்தை நிலை நிறுத்தி, சதா காலமும், புருஷோத்தமனான என்னையே நினைத்துக் கொண்டிருக்கிறாரோ, அப்படி நித்திய நிரந்தரமாக என்னிடமே ஈடுபட்டிருக்கும் யோகிக்கு நான்*

*எளியவன் (அதாவது, அவரால், எளிதாகவே நான் அடையப்படுகிறேன்.)*

வேறெங்கும் செல்லாத மனத்துடன் பகவானை சிந்தனை செய்துவரும் பக்தனுக்கு எளிதாகவே பகவான் கிடைத்து விடுகிறார்-இது மட்டுமல்ல; அவனை பகவான், சம்சாரக் கடலிலிருந்து விரைவிலேயே மேலெழவும் செய்து விடுகிறார்!

யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பரா:।
அநந்யேநைவ யோகே$_3$ந மாம் த்$_4$யாயந்த உபாஸதே ।।
தேஷாமஹம் ஸமுத்$_3$த$_4$ர்தா ம்ருத்யுஸம்ஸாரஸாக$_3$ராத் ।
ப$_4$வாமி நசிராத்பார்த$_2$ மய்யாவேஶிதசேதஸாம் ।।

*(கீதை : 12/6,7)*

*(என்னையே சார்ந்திருக்கும் பக்தர்கள், தங்களுடைய எல்லா கர்மாக்களையும் எனக்கு அர்ப்பணித்து, பெருந்தலைவனான என் ஸகுண வடிவத்தை அநன்ய பக்தியோகத்தினால் எப்போதும் சிந்தித்துக் கொண்டு வழிபடுகிறார்கள். அர்ஜுனா! அவ்விதம் என்னிடம் உள்ளத்தை ஈடுபடுத்தி யுள்ள பேரன்புமிக்க பக்தர்களை, நான் விரைவிலேயே சாவு என்னும் சம்சாரக் கடலிலிருந்து கரையேற்றி விடுகிறேன்.)*

ஆகவே, நாம் எல்லோரும் அநன்ய பக்தியோகத்தின் மூலம், நித்திய நிரந்தரமாகப் பகவானை சிந்தித்தவாறே அவரை உபாசிக்க வேண்டும். 'உலகத்தில் ஒரே ஒரு தனிப்பெரும் தலைவரான பகவானைத் தவிர, என் நலனை விரும்புகிறவர் வேறு எவரும் இலர்; அவரே என் அனைத்து உடைமை'-இவ்வாறு எண்ணிக் கொண்டு, பகவானிடம் மிக்க நம்பிக்கையுடன் கூட செலுத்தப்படும் பிரேமை- தன்னலம், கர்வம் என்ற மாசுகள் அணுவளவும் இல்லாத பிரேமை-எப்போதும் பரிபூரணமாக உள்ளது; உறுதி குலை யாமலும் இருப்பது; அதன் கடுகளவு கூட கடவுளைத் தவிர வேறொரு வஸ்துவிடம் செலுத்தப்படாதது; நொடிப்பொழுது கூட பகவானை மறப்பது என்பது சகிக்க முடியாதது- அத்தகைய பக்தியை 'அநன்ய பக்தி' என்கிறார்கள்.

இவ்விதமாக அநன்ய பக்தியுடன் சதா காலமும் பகவானையே சிந்தித்துக் கொண்டிருந்து, அவருடைய

குணங்கள், பிரபாவங்கள் மற்றும் கதைகளைக் கேட்டு கீர்த்தனம் செய்தும், அவருடைய புனிதமான திருப்பெயர்களை உச்சரித்தும் ஜபம் செய்தும், அநன்ய பக்தி பாவத்தின் மூலமாக பகவானை சிந்தித்துக் கொண்டிருந்து அவரை உபாசிக்க வேண்டும். இவ்விதம் அநன்ய பக்தி செய்யும் பக்தனை பகவான் அப்போதே கைதூக்கி விடுகிறார்.

ஒரு மனிதன் எவ்வளவு மகாபாவியாகத் தான் இருக்கட்டுமே? பக்தியினுடைய பிரபாவத்தினால் அவனுடைய பாவங்கள் நசித்துப் போகின்றன என்பதுடன், அவன் மிகவும் தர்மாத்மாவாகவும் ஆகிவிடுகிறான்; பின்னர், அவனுக்கு பரமசாந்தியும் கிடைத்து விடுகிறது-என்பது எவ்வளவு மகிழ்ச்சிக்குரிய விஷயம்!

கீதை ஒன்பதாம் அத்தியாயம் 30, 31வது சுலோகங்களில் பகவான் கூறுகிறார் -

அபி சேத்ஸுது$_3$ராசாரோ ப$_4$ஜதே மாமநந்யப$_4$াக்।
ஸாது$_4$ரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக்$_3$வ்யவஸிதோ ஹி ஸ:॥
க்ஷிப்ரம் ப$_4$வதி த$_4$ர்மாத்மா ஶஶ்வச்ச$_2$ாந்திம் நிக$_3$ச்ச$_2$தி।
கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே ப$_4$க்த: ப்ரணஶ்யதி॥

[மிகவும் தீய ஒழுக்கமுடைய ஒருவன், அநன்ய பாவத்துடன் என் பக்தனாக ஆகி என்னை வழிபட்டானேயானால், அவன் சாது என்றே மதிக்கத்தக்கவன்; ஏனென்றால், அவன் உண்மையை உறுதியாகத் தெரிந்து கொண்டுவிட்டான்; அதாவது, பகவானுக்கும் அவரை வழிபடுவதற்கும் நிகரானது எதுவும் உலகில் இல்லை என்ற தீர்மானமான முடிவுக்கு அவன் வந்து விட்டான். அதனால், அவன் விரைவிலேயே அறவொழுக்கத்தில் ஈடுபட்டு விடுகிறான்; (அதன் பயனாக) எப்போதும் நிலைத்திருக்கும் பரம சாந்தியை அடைந்து விடுகிறான். அர்ஜுனா! என்னுடைய பக்தன் ஒருபோதும் அழிந்து போகமாட்டான் என்பதை நீ உறுதியாகத் தெரிந்து கொள்.]

சம்சாரக் கடலிலிருந்து ஜீவன் கரையேறுவது என்பது மிகவும் கடினமான விஷயம்; ஆனால், பகவானைத் தஞ்சம் அடைவதால், இந்த கடினமான காரியமும் எளிதில் அடையத்தக்கதாகிறது.

தை$_3$வீ ஹ்யேஷா கு$_3$ணமயீ மம மாயா து$_3$ரத்யயா।
மாமேவ யே ப்ரபத்$_3$யந்தே மாயாமேதாம் தரந்தி தே॥
*(கீதை : 7/14)*

*(ஏனென்றால், இந்த உலகில் காணப்படாத, அதாவது, மிக விசித்திரமான முக்குணமாகிற என்னுடைய மாயை மிகவும் கடக்க முடியாதது; ஆனால், என்னையே எப்போதும் வழி பட்டு வருபவர்கள், இந்த மாயையைக் கடந்து செல்கிறார்கள்; அதாவது, உலக வாழ்வைக் கடந்து விடுகிறார்கள்.)*

பகவானிடம் உள்ள பக்தியின் பிரபாவத்தினால் பகவானைப் பற்றிய மெய்யறிவும் ஏற்பட்டு விடுகிறது; மெய்யறிவுடன் கூடவே பகவானும் அவருக்குக் கிடைத்து விடுகிறார். அநன்யபக்தி செலுத்தும் அவருக்கு, பகவான் தானே அந்த மெய்யறிவை அருள்கிறார்; அதனால், அவருக்கு (அந்த பக்தருக்கு) வெகு எளிதாகவே பகவான் கிடைத்து விடுகிறார்.

பகவான் சொல்கிறார் -

அஹம் ஸர்வஸ்ய ப்ரப$_4$வோ மத்த: ஸர்வம் ப்ரவர்ததே।
இதி மத்வா ப$_4$ஜந்தே மாம் பு$_3$த$_4$ா ப$_4$ாவஸமந்விதா:॥
மச்சித்தா மத்$_3$க$_3$தப்ராணா போ$_3$த$_4$யந்த: பரஸ்பரம்।
கத$_2$யந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச॥
தேஷாம் ஸததயுக்தாநாம் ப$_4$ஜதாம் ப்ரீதிபூர்வகம்।
த$_3$தா$_3$மி பு$_3$த்$_3$தி$_4$யோக$_3$ம் தம் யேந மாமுபயாந்தி தே॥
*(கீதை : 10/8-10)*

(வாசுதேவனான நானே அனைத்து உலகங்களின் தோற்றத் துக்குக் காரணன்; என்னிடம் தான் எல்லா உலகங்களும் இயங்குகின்றன-அறிவாளியான பக்தர்கள், இவ்வாறு தெளிவாகத் தெரிந்துகொண்டு, சிரத்தை-பக்தியுடன், தனிப் பெரும் தலைவனான என்னையே நிரந்தரமாக வழிபடுகிறார் கள். எப்போதும் என்னிடமே மனத்தைச் செலுத்தி, என்னிடமே தம்முடைய உயிர்களை அர்ப்பணம் செய்துள்ள அந்த பக்தர்கள், என்னிடம் கொண்டுள்ள பக்தியைப் பற்றி பேசிப் பேசி, தங்களுக்குள் என்னுடைய தத்துவ-ரகசிய-

பிரபாவங்களை அறிவித்துக் கொண்டும், குண-பிரபாவங்கள் நிறைந்த என் கதையை கூறிக் கொண்டும் எப்போதும் மகிழ்ச்சியோடு இருக்கிறார்கள்; வாசுதேவனான என்னிலேயே அவர்கள் ஆழ்ந்து திளைக்கிறார்கள். இவ்விதமாக எப்போதும் பிரேமையோடு வழிபடும் பக்தர்களுக்கு, நான், தத்துவ ஞானவடிவமான யோகத்தைத் தந்தருள்கிறேன்; அதன்மூலம் அவர்கள் என்னையே அடைந்து விடுகிறார்கள்.)

உண்மை என்னவென்றால், பகவானுடைய ஸ்வரூப-பிரபாவங்களைத் தத்துவத்தோடு அறிந்து கொள்பவன் எல்லாப் பாவங்களிலிருந்தும் முற்றிலுமாக விடுபட்டு, பரமாத்மாவை அடைந்து விடுகிறான். (கீதை : 10/3,8) பகவானுடைய ஸ்வரூப-பிரபாவ வருணனை, கீதை ஏழாம் அத்தியாயம் சுலோகம் ஏழிலிருந்து பன்னிரெண்டு வரையிலும், ஒன்பதாம் அத்தியாயம் சுலோகம் பதினாறிலிருந்து பத்தொன்பது வரையிலும், பதினைந்தாவது அத்தியாயம் சுலோகம் பன்னிரெண்டிலிருந்து பதினைந்து வரையிலும், வேறு பல இடங்களிலும் சொல்லப்பட்டுள்ளது. அவை அனைத்தின் சாரத்தையும், பகவான், பத்தாவது அத்தியாயம் சுலோகம் நாற்பத்தொன்று, நாற்பத்திரண்டில் சொல்லியிருக்கிறார்.

யத்$_3$யத்$_3$ விபூ$_4$தி மத்ஸத்த்வம் ஸ்ரீமதூ$_3$ர்ஜிதமேவ வா ।
தத்ததே$_3$வாவக$_3$ச்ச$_2$ த்வம் மம தேஜோம்ஸஸம்ப$_4$வம் ॥

*(கீதை : 10/41)*

*(விபூதியுடன் கூடிய - செழிப்பு, காந்தி, ஆற்றல் மிகுந்துள்ள - எந்தெந்தப் பொருட்கள் இருக்கின்றனவோ, அவை எல்லாம் என்னுடைய பேராற்றலின் ஒரு நுண்ணளவின் வெளிப்பாடு என்பதை உணர்ந்து கொள்.)*

இப்படிக் கூறுவதன் கருத்து என்னவென்றால், பத்தாவது அத்தியாயம் சுலோகம் நாலிலிருந்து ஆறு வரை, சுலோகம் பத்தொன்பதிலிருந்து நாற்பது வரையிலும், அவ்வாறே கீதையின் வேறு சில இடங்களிலும் சொல்லப்பட்ட விபூதிகள்; மற்றும், எல்லா உலகங்களிலுமுள்ள ஜட-சேதன வஸ்துக்கள், ஸ்தாவர-ஜங்கம பொருட்களில் சிறப்பாகக் காணப்படும் சக்தி, புத்தி, தேஜஸ்,

குணம், பிரபாவம் முதலியனவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்துத் திரட்டினாலும், அது பகவானுடைய பிரபாவத்தின் ஒரு சிறு பகுதியின் வெளிப்பாடே ஆகும்-என்பது தான்.

அத₂வா ப₃ஹுனைதேந கிம் ஜ்ஞாதேந தவார்ஜுந।
விஷ்டப்₄யாஹமித₃ம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்த்தி₂தோ ஜக₃த்॥
*(கீதை : 10/42)*

*(அர்ஜுனா! இவ்வாறு, விஸ்தாரமாகத் தெரிந்து கொள்வதால் உனக்கு ஆவது என்ன? நான், இவ்வுலகனைத்தையும் என்னுடைய யோகமாயையின் ஒரு பகுதியினால் தரித்துக் கொண்டிருக்கிறேன்.)*

நீர்க்குமிழி, மாபெரும் சமுத்திரத்தின் ஒரு சிறு அம்சம்-என்பது போல, குண-பிரபாவங்களோடு கூடிய எல்லாப் பிரும்மாண்டங்களும் பரமாத்மாவின் ஒரு நுண்ணிய பகுதியில் நிலைத்திருக்கிறது. இதைப் புரிந்து கொண்டு, பத்தாவது அத்தியாயம் சுலோகம் எட்டு, ஒன்பது, பத்தில் கூறியபடி பரமாத்மாவை உபாசனை செய்பவர், மிக எளிதாகவே பரமாத்மாவை அடைந்து விடுகிறார்.

இதுகாறும் சொல்லப்பட்ட வாதங்களால், பகவானிடம் செலுத்தப்படும் பக்தி, மேலானது, எளிமையானது, சுலப மானது என்பது உறுதியாகிறது. இவ்வளவு மட்டுமில்லை. பக்தியினால், விரைவிலேயே எல்லாப் பாவங்களும் நசித்துப் போய், பகவானுடைய தரிசனத்தையும் மனிதன் அடைந்து விடுகிறான்; அத்துடன், தத்துவத்துடன் பகவானைப் புரிந்து கொண்டு, அவருள் ஐக்கியத்தையும் அவனால் அடைந்து விட முடிகிறது. பகவான் சொல்கிறார் -

ப₄க்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதே₄ऽர்ஜுந।
ஜ்ஞாதும் த்₃ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப॥
*(கீதை : 11/54)*

*(எதிரிகளை வாட்டும் அர்ஜுனா! அநன்யமான பக்தியின் மூலம், இவ்விதம் உருவத்தோடு கூட என்னைப் பார்க்கவும், தத்துவத்தோடு புரிந்து கொள்ளவும், ஐக்கியமாகி விடவும்-அதாவது, ஒன்றிய உணர்வினை அடையவும் முடியும்.)*

இதே போல, ஞானயோகத்தின் மூலமாகவும் பாவங்கள் எல்லாம் நசித்துப் போய் பரமாத்ம ஞானமும் பரம சாந்தியும் கிடைக்கும் (கீதை : 4/34-36, 39) என்றாலும், அதன்மூலம் ஸகுண-ஸாகார பரமாத்மாவின் நேரடி தரிசனம் ஏற்படுவதில்லை. அநன்ய பக்தியினால் தான், பரமாத்ம ஞானமும் பரமாத்மாவிடம் ஒன்றிய உணர்வும் ஏற்படுவதோடு கூட, அதற்கும் மேலாக, பகவானை நேரில் காண்பதும் சாத்திய மாகும். அதனால் தான், பகவானிடம் அநன்ய பக்தி செலுத்துவது என்ற வழி அனைத்து வழிகளிலும் உயர்வானது.

இப்போது, அநன்ய பக்தியின் ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்வதற்காக, அநன்ய பக்தியின் இலக்கணத்தைக் காண்போம்.

மத்கர்மக்ருந்மத்பரமோ மத்₃ப₄க்த: ஸங்க₃வர்ஜித: ।
நிர்வைர: ஸர்வபூ₄தேஷு ய: ஸ மாமேதி பாண்ட₃வ ॥
(கீதை : 11/55)

*(அர்ஜுனா! தான் செய்யவேண்டிய எல்லாக் கடமைகளையும் எனக்காகவே செய்துவருபவன், என்னையே சார்ந்திருப் பவன், என்னுடைய பக்தன், பற்றுதல் இல்லாதவன், எல்லா உயிர்ப் பிராணிகளிடமும் விரோதமில்லாதவன்-இப்படியுள்ள அநன்ய பக்தன் என்னை அடைந்து விடுகிறான்.)*

இந்த சுலோகத்தில் மூன்று விஷயங்கள் கூறப்பட்டிருக்கின்றன-பகவானுக்காகவே கடமைகளைச் செய்தல்; பகவானையே சார்ந்திருத்தல்; பகவானுடைய பக்தனாதல். இந்த மூன்றையும் சேர்ந்து அனுஷ்டித்தால் தான் பகவானை அடைய முடியுமா? அல்லது, மூன்றில் ஏதேனும் ஒரு வழியை கடைப்பிடித்தாலும் கூட பகவானை அடைய முடியுமா?- என்று சிந்தித்துப் பார்க்கலாம்.

இந்த மூன்று வழிகளையும் பின்பற்றி நடந்தால் பகவானை அடைய முடியும் என்பதைச் சொல்ல வேண்டிய தில்லை; ஏன், ஏதேனும் ஒரு வழியைப் பின்பற்றினாலும் கூட பகவானை அடைந்து விட முடியும். பகவானுக்காகவே கர்மாக்களைச் செய்யும் மனிதனுக்கு, பகவத் பிராப்தி என்னும் இறுதிப்பயன் கிடைக்கும் என்ற விஷயத்தை, கீதை பன்னிரெண்டாம் அத்தியாயம் பத்தாவது சுலோகத்தில் பகவான் கூறியிருக்கிறார் -

மத$_3$ர்த$_2$மபி கர்மாணி குர்வந்ஸித்$_3$தி$_4$மவாப்ஸ்யஸி ॥

*(அர்ஜுனா! நீ, என் பொருட்டு கர்மாக்களை செய்து கொண்டிருந்தாலும் என்னை அடைதல் என்னும் இறுதிப் பயனையும் அடையலாம்.)*

அது போன்றே, பகவானையே சார்ந்திருப்பதனாலும் கூட பகவத் பிராப்தி ஏற்பட முடியும். பகவான் கூறியிருக்கிறார் -

மாம் ஹி பார்த$_2$ வ்யபாஶ்ரித்ய யேऽபி ஸ்யு: பாபயோநய: ।
ஸ்த்ரியோ வைஶ்யாஸ்தத$_2$ா ஶூத்$_3$ராஸ்தேऽபி யாந்தி பராம் க$_3$திம் ॥

*(கீதை : 9/32)*

*(அர்ஜுனா! பெண்டிர், வணிகர், வேளாளர் மற்றும் இழிபிறப்பினர்-சண்டாளர் முதலிய யாராக இருந்தாலும் சரி, அவர்கள் என்னைச் சரண் புகுந்தால், பரமகதியை அடைந்து விடுகிறார்கள்.)*

இதேபோல, பகவானைப் பக்தி செய்வதால் மட்டுமேயும் பகவத் பிராப்தி கிடைக்கக் கூடும்.

தே$_3$வாந்தே$_3$வயஜோ யாந்தி மத்$_3$ப$_4$க்தா யாந்தி மாமபி ॥

*(கீதை : 7/23 பின் பாதி)*

*(தேவதைகளை வழிபடுகிறவர்கள் அந்தந்த தேவதைகளை அடைகிறார்கள்; ஆனால், என்னை-எந்த முறையிலாயினும் சரி-வழிபடுகிறவர்கள், கடைசியில் என்னையே அடைகிறார்கள்.)*

பக்தர்கள் எனப்படுவோர், நால்வகையினராக வகுக்கப்பட்டுள்ளார்கள்.

சதுர்வித$_4$ா ப$_4$ஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதிநோர்ऽஜுந ।
ஆர்தோ ஜிஜ்ஞாஸுரர்த$_2$ார்தீ$_2$ ஜ்ஞாநீ ச ப$_4$ரதர்ஷப$_4$ ॥

*(கீதை : 7/16)*

*[பரதகுலப் பெருந்தகையே! நற்செயல்களைச் செய்கின்றவர்களான அர்த்$_2$தார்த்தீ$_2$, ஆர்த்தன், ஜிஜ்ஞாஸு, ஜ்ஞானீ (பொருளாசை உடையவன், துயரப்படுபவன், அறிந்து கொள்ள விழைபவன், ஞானி)-என்ற, நால்வகையான பக்தர்கள் என்னை உபாசிக்கிறார்கள்.]*

இந்நால்வரில், பொருளாசை கொண்ட பக்தனைக் காட்டிலும், துயரப்படுபவன், துயரப்படுபவனைக் காட்டிலும் அறிந்துகொள்ள விழைபவன், அறிந்து கொள்ள விழை பவனைக் காட்டிலும் ஞானி (நிஷ்காமி) மேலானவர். பொருளாசை கொண்ட பக்தனைக் காட்டிலும் துயரத்தில் உழல்பவன் மேலானவன் என்று சொல்வதற்குக் காரணம்- அவன், பெண்டிர், மக்கள், செல்வம் முதலியன ஒருபுறம் இருக்க, அரச போகத்தைக் கூட அவன் பகவானிடம் வேண்டு வதில்லை-துருவனைப் போல. ஆனால், திரௌபதியைப் போல, ஒரு பெரிய இக்கட்டான நிலை ஏற்படும்போது, அது விலக வேண்டும் என்று வேண்டிக் கொள்கிறான். ஆனால், (பகவானைப் பற்றி உண்மையாக) அறிந்துகொள்ள வேண்டும் என்று விரும்புகிறவன், உலக வாழ்வில் பெரிய பெரிய கஷ்டங்கள் வந்தாலும் அந்தக் கஷ்டங்கள் தீர வேண்டும் என்று பிரார்த்திக்காமல், பக்த உத்தவரைப் போல சம்சாரக் கடலிலிருந்து தான் கரையேற வேண்டும் என்பதற்காக, பரமாத்மாவை தத்துவத்தோடு அறிந்து கொள்ள விரும்புகிறான். அதனால் தான், துயரத்தில் உழல்பவனைக் காட்டிலும், பரமாத்மாவை தெரிந்து கொள்ள விழைபவன் மேலானவன். ஆனால், பக்த பிரஹலாதன் போன்ற நிஷ்காம ஞானியான பக்தன், தன்னுடைய முக்தியைக் கூட பகவானிடம் பிரார்த்திப்பதில்லை. அதனால் தான், நிஷ்காம ஞானியான பக்தன், மற்ற மூவரைக் காட்டிலும் சிறந்தவன் என்கிறார்கள்.

இந்த நால்வரில், ஞானியாகிற பக்தன், பகவானுக்கு மிகவும் பிரியமானவன்; ஏனென்றால், ஞானிக்கு பகவான் மிகவும் பிரியமானவன். ஏழாம் அத்தியாயம் பதினேழாம் சுலோகத்தில் பகவானே சொல்கிறார் -

தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகப$_4$க்திர்விஶிஷ்யதே ।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த$_2$மஹம் ஸ ச மம ப்ரிய: ।।

*(இவர்களுள், என்னிடம் ஒன்றிய உணர்வுடன் அநன்ய பிரேமையுடன் கூடிய பக்தன் மிகவும் உத்தமமானவன்; ஏனென்றால், என்னை, தத்துவத்தோடு அறிந்துகொள்ளும் ஞானிக்கு நான் மிகவும் பிரியமானவன்; அதனால், ஞானமுள்ள அந்த பக்தன் எனக்கு மிகவும் பிரியமானவன்.)*

(பகவான் இப்படிக் கூறுவதற்குக் காரணம் என்னவென்றால்) பகவான் தனக்கென்று ஒரு விதி வகுத்துக் கொண்டுள்ளார்-'பக்தன் என்னை எவ்வாறு அணுகுகிறானோ, நானும் அவனை அவ்வாறே அணுகுகிறேன்.' (கீதை : 4/11)

இது மட்டுமில்லை. பகவானைப் பிரேமையோடு வழிபடுபவனை, அவர் தன் இதயத்தில் வைத்துக் கொள்கிறார். ஒன்பதாம் அத்தியாயம் இருபத்தொன்பதாம் சுலோகத்தில், 'என்னைப் பிரேமையோடு வழிபடுபவர்கள் என்னிடமே உள்ளார்கள்; நானும் அவர்களிடம் நேரில் வெளிப்படுகிறேன்' என்று சொல்லியிருக்கிறார்.

அது சரி. ஞானியாகிற நிஷ்காம பக்தனைத் தவிர மற்ற பக்தர்கள் சிறந்தவர்கள் இல்லையா? அவர்களுக்கு கடைத்தேறுதல் ஏற்படாதா?-என்று கேட்டால், 'இல்லை, அது இப்படி இல்லை' என்று பதில் சொல்ல வேண்டியிருக்கும். இவர்கள் எல்லோருமே மேலான பக்தர்கள்; எல்லோருக்கும் கடைத்தேறுதல் கிடைக்கும்; ஆனால், ஞானமுடைய நிஷ்காம பக்தன் அனைவரிலும் தலைசிறந்தவன். ஞானமுடைய நிஷ்காம பக்தனை, தன் வடிவமே என்று பகவான் சொல்லியிருக்கிறார்'-

உத$_3$ாரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம் ।
ஆஸ்த்தி$_2$த: ஸ ஹி யுக்தாத்மா மாமேவாநுத்தமாம் க$_3$திம் ॥
*(கீதை : 7/18)*

*(இவர்கள் எல்லோரும் உதார விசால மனம் படைத்தவர்கள்; ஆனால், ஞானியோவென்றால், சாட்சாத் என் வடிவமே என்பது என் கருத்து. ஏனென்றால், என்னிடமே ஈடுபட்டுள்ள மனம்-புத்தியுடைய, ஞானமுடைய பக்தன், மிக மேலான அடையத்தக்க பொருளான என்னிடமே மிக நன்றாக நிலைத்திருக்கிறான்.)*

உதார-என்றால், மேலானவர்கள். பகவான் இப்படிச் சொல்வதன் பாவம் இது தான் : 'பக்தர்கள் தான் முதலில் என்னை வழிபடுகிறார்கள்; பின்னர் தான், நான் அவர்களைப் போற்றுகிறேன்; அவர்கள், விலைமதிப்பற்ற காலத்தை, என்னிடம் சிரத்தை-விசுவாஸம் வைத்து, தியாகம் செய்கிறார் கள். (நாம சங்கீர்த்தனம், தியானம் முதலான வழிகளில்

நேரத்தைச் சிலவிடுகிறார்கள்.) இது, அவர்களுடைய தாராள குணத்தைக் காட்டுகிறது; ஆகவே, அவர்கள் மேலானவர்கள். என்னிடம் செலுத்தும் பக்தி, ஒரு தேவையைப் பூர்த்தி செய்வதற்காக செலுத்தப்படுகிறதா? அல்லது, நிஷ்காமமாக செலுத்தப்படுகிறதா? அல்லது, வேறு ஏதேனும் நோக்கத்துடன் செலுத்தப்படுகிறதா?-என்றால், எப்படியாகத் தான் இருந்து விட்டுப் போகட்டுமே? என் பக்தனுக்கு மேன்மை ஏற்படத் தான் போகிறது. (கீதை : 7/23). ஆனால், அவர்களிடம் பிரேமையும் நிஷ்காமமும் குறைவாக இருப்பதால், என்னை அடைவதில் கால தாமதம் ஏற்படக் கூடும். என்னையே நேரிடையாக உபாசிப்பது என்பது இருக்கட்டும்; வேறு தேவதைகளை உபாசிப்பவர்களும் கூட என்னையே தான் உபாசிக்கிறார்கள். ஆனால், அவர்கள் தத்துவத்தோடு என்னை அறிந்து கொள்ளாத காரணத்தால் அழியுந்தன்மையுடைய இவ்வுலகம் அல்லது சொர்க்கம் முதலிய மேலுலகங்களையே பலனாக அடைகிறார்கள்.'

அந்தவத்து ப$_2$லம் தேஷாம் தத்$_3$ப$_4$வத்யல்பமேத$_4$ஸாம் ॥
*(கீதை : 7/23 முன்பாதி)*

*(ஏனென்றால், குறை ஞானமுடைய அவர்கள் அடையும் பலன் அழியுந்தன்மையது.)*

ஏழாவது அத்தியாயம் முதலாவது சுலோகத்தில் பகவானின் சமஷ்டி வடிவத்தை அறியவேண்டும் என்ற விஷயம் கூறப்பட்டுள்ளது. அப்படிக் கூறியதன் கருத்து என்னவென்றால், உலகில் எது இருக்கிறதோ, அது என்னிலிருந்து வேறுபட்டது அல்ல (கீதை : 7/7); எல்லாமே என்னுடைய வடிவமே (கீதை : 7/19). இவ்வாறு, இந்தத் தத்துவத்தை அறிந்து கொள்ளும் பக்தன், பாவங்கள் நீங்கி, ராக-துவேஷத்திலிருந்து தோன்றும் மோகத்திலிருந்து விடுபட்டு, பகவானையே சரண் அடைந்து, பகவானுடைய சமஷ்டி ரூபத்தைத் தெரிந்து கொண்டு விடுகிறான். (கீதை : 7/28-30).

பகவானை அடைந்துவிட்ட ஞானியாகிற பக்தமகாத்மாவின் நிலையை, பகவான் மிகவும் விரிவாகப் புகழ்ந்துள்ளார் (கீதை : 12/13-19). பகவான், அப்படிப்பட்டவனை,

தன்னுடைய பிரியமான பக்தன் என்று கூறியிருக்கிறார்; ஆனால், அத்தகைய ஞானி-பக்தனை முன்மாதிரியாகக் கொண்டு, சிரத்தையோடு கூட அவரைப் பின்பற்றி சாதனை புரியும் சாதகனை, தனக்கு மிகவும் பிரியமானவன் என்று சொல்லியிருக்கிறார். ஏனென்றால், அவன், பகவானிடம் சிரத்தை-விசுவாசம் கொண்டு, தன்னுடைய வாழ்க்கையை, பகவானுக்கே அர்ப்பணித்து விட்டிருக்கிறான். பகவான் சொல்கிறார் -

> யே து த₄ர்ம்யாம்ருதமித₃ம் யதோ₂க்தம் பர்யுபாஸதே ।
> ஶ்ரத்₃த₃தா₄னா மத்பரமா ப₄க்தாஸ்தேऽதீவ மே ப்ரியா: ॥
>
> *(கீதை : 12/20)*

*(ஆனால், சிரத்தையோடு கூட என்னையே சார்ந்திருந்து மேலே சொல்லப்பட்ட தர்மமயமான அமுதத்தை நிஷ்காம-பிரேமையுடன் கடைப் பிடிக்கிறவர்கள், எனக்கு மிகவும் பிரியமானவர்கள்.)*

மனம்-புத்திகளை மட்டுமே கூட பகவானிடம் செலுத்துவதால் பகவானை அடைய முடியும் (கீதை : 8/7; 12/8) என்னும்போது, தன்னுடைய எல்லாவற்றையும் பகவானுக்கே சமர்ப்பணம் செய்து, எல்லா வகையாலும் பகவானை வழிபடுகிறவன் கைதூக்கி விடப்படுவான் என்பது சர்வ நிச்சயம்.

## 2. எப்போதும் பகவானை சிந்தித்துக் கொண்டிருப்பதன் மகிமை

பகவானுடைய ஸாகார-நிராகார ஸகுண-நிர்குண ஸ்வரூபங்களில் ஏதேனும் ஒன்றை எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பதற்கு நிகரான சாதனை வேறு ஏதுமில்லை. இந்த சாதனை மிகவும் எளிது. இந்த சாதனையினால் பகவானுடைய தரிசனம் சீக்கிரம் கிடைத்து விடுகிறது. இப்போது கிடைத்துள்ள மனிதப் பிறவியில் பகவானை அடையாவிட்டால், அது மிகப் பெரிய நஷ்டம்; மிகவும் அஞ்சத்தக்க விஷயம்.

இஹ சேத₃வே தீ₃த₃த₂ ஸத்யமஸ்தி ந சேதி₃ஹாவேதீ₃ந் மஹதீ விநஷ்டி: ॥
- என்கிறது, கேனோபநிடதம்.

*(இந்த மனிதப் பிறவியிலேயே பரமாத்மாவை அறிந்து கொண்டு விட்டால், அது பிறவிப் பயனை நல்ல முறையில் அடைந்ததாகும்; அவரை, (பரமாத்மாவை) இந்தப் பிறவியில் அறியவில்லையென்றால், அது மிகப் பெரிய நஷ்டமாகும்).*

ஏனென்றால், பகவானை விட்டுவிட்டு வேறொரு நபர் அல்லது பொருளை நினைத்தவாறே உயிரை விடுவானாகில், அவனுக்கு நல்ல கதி கிடைப்பதில்லை. மரணத்தறுவாயில், தன் பெற்றோர், தெய்வம், பசு, பறவை, புழு-பூச்சி என்பனவற்றை நினைத்துக் கொண்டே உயிர் துறந்தால், அவன் அவ்வவற்றையே அடைகிறான்.

கீதையில் பகவான் சொல்கிறார் -

யம் யம் வாபி ஸ்மரந்ப₄ாவம் த்யஜத்யந்தே கலேவரம் ।
தம் தமேவைதி கௌந்தேய ஸதா₃ தத்₃ப₄ாவப₄ாவித: ॥
(8/6)

*(குந்தீமைந்த! மனிதன் இறுதிக் காலத்தில் எந்தெந்த உணர்வு களை நினைத்துக்கொண்டே உடலைத் துறக்கிறானோ, அவ்வவைகளையே அவன் அடைகிறான்; ஏனென்றால், அவன் எப்போதும் அந்த உணர்விலேயே ஊறி நிற்கிறான்).*

நமக்கு மரணம் எப்போது நேரும் என்பது தெரியாது. திடீரென்று மரணம் சம்பவித்துவிட்டால்? அதனால், எப்போதும் பகவானை நினைவில் வைத்துக் கொண்டே எல்லா வேலைகளையும் நாம் செய்து வரவேண்டும். பகவான், கீதையில், அர்ஜுனனை நோக்கிக் கூறுகிறார்-

தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு மாமநுஸ்மர யுத்₄ய ச ।
மய்யர்பிதமநோபு₃த்₃தி₄ர்மாமேவைஷ்யஸ்யஸம்ஶயம் ॥
(8-7)

*(ஆகவே, அர்ஜுனா! எப்போதும் நீ என்னையே நினைத்துக் கொண்டிரு; யுத்தமும் செய். இவ்விதம் என்னிடமே மனம்-புத்தியை அர்ப்பணித்துவிட்டால், நிச்சயமாக நீ என்னையே அடைவாய்!)*

நாம் எப்போதும் பகவானையே ஸ்மரித்துக் கொண்டிருந்தால், அவசியம் பகவானை அடைந்து விடுவோம். ஆகவே, ஒரு விநாடிப் பொழுது கூட நாம் பகவானை மறக்கக் கூடாது.

உங்கள் உடலாலும் புலன்களாலும் எந்தக் காரியங் களைச் செய்து வருகிறீர்களோ, அவைகளையே செய்து வாருங்கள்; மனத்தில் மட்டும், பகவானைத் தவிர வேறு எதற்கும் இடம் கொடுக்காதீர்கள். மனிதன், உடல் சம்பந்தமான இரண்டு வேலைகளை, இயற்கையாகவே, செய்து கொண்டிருக்கிறான் - மலமூத்திர விசர்ஜனம். நீராடுதல், உண்பது, குடிப்பது - இவை போன்ற வேலைகள் புலன்களாலேயே நடத்தப்படுகின்றன; அப்போது, மனம், வீணான சிந்தனைகளைச் செய்து கொண்டிருக்கிறது, உடல் தூய்மை மற்றும் வாழ்க்கை நடத்துவதற்காக வியாபாரம் முதலிய காரியங்களை - உடலாலும் வாக்கு முதலிய இந்திரியங்களாலும் செய்யப்பட வேண்டிய செயல்களை - வேண்டுமானால் தொடர்ந்து செய்து கொண்டே இருங்கள்; ஆனால், பகவானை ஒருபோதும் மறந்து விடாதீர்கள்- இதுதான் நமது வேண்டுகோள். உலகியல் கடமைகளில் எங்காவது குற்றம் குறை ஏற்பட்டால், பகவானை எப்போதும் நினைத்துக் கொண்டிருக்கும் பிரபாவத்தினால், அதை சீர் செய்து கொள்ளலாம். எப்படியென்றால், எவ்வளவு பெரிய பாவியாக இருந்தாலும், பகவானிடம் ஒன்றிய பக்தி செலுத்தி வந்தால், அவன் செம்மைப்படுத்தப்பட்டு முன்னேறிவிடு கிறான். பகவான், அர்ஜுனனிடம் கூறுகிறார் -

அபி சேத்ஸுது$_3$ராசாரோ ப$_4$ஜதே மாமநந்யப$_4$ாக்।
ஸாது$_4$ரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக்$_3$வ்யவஸிதோ ஹி ஸ:॥

க்ஷிப்ரம் ப$_4$வதி த$_4$ர்மாத்மா ஶஶ்வச்ச$_2$ாந்திம் நிக$_3$ச்ச$_2$தி।
கௌந்தேய ப்ரதி ஜாநீஹி ந மே ப$_4$க்த: ப்ரணஶ்யதி॥

*(கீதை-9/30,31)*

*(மிகவும் துர்நடத்தையுடையவன் ஒன்றிய உள்ளத்தோடு என்னுடைய பக்தனாகி என்னை வழிபட்டால், அவனும் சாது என்றே மதிக்கத் தக்கவன்; ஏனென்றால், அவன் சரியான முடிவுக்கு வந்துவிட்டான். அதாவது, பகவானிடம் பக்தி செலுத்துவதற்கு ஈடான வேறெதுவும் இல்லை என்ற மிக*

*நல்ல முடிவு எடுத்திருக்கிறான். அவன் விரைவிலேயே, தர்மாத்மா ஆகிவிடுகிறான்; அத்துடன், என்றென்றும் நிலைத்திருக்கும் மேலான அமைதி அடைந்து விடுகிறான். குந்தியின் மைந்தனே! என்னுடைய பக்தன் அழிந்து போக மாட்டான் என்ற சத்தியவாக்கை நீ உறுதியாக அறிந்து கொள்.)*

ஆக, நம்மிடமுள்ள குறைகள், பகவானிடம் ஒன்றிய பக்தி செலுத்துவதன் பிரபாவத்தால் தாமாகவே அழிந்து போகின்றன-என்பது, கீதை வாயிலாகத் தெரிய வருகிறது. ஆனால், ஒன்றிய பக்தியில் ஏதேனும் குறைவு ஏற்படுமேயானால், அதன் விளைவு மிகவும் பயங்கரமாக இருக்கும்; ஏனென்றால், அந்தக் குறை தானாகவே தீர்ந்து போய், பக்தி முழுமை அடைந்து விடுவதில்லை.

ஆகவே, எந்தக் காரியத்துக்காக இந்த மனித சரீரம் கிடைத்திருக்கிறதோ, அந்தக் காரியத்திலேயே இதனை ஈடு படுத்த வேண்டும். ஈசுவரன், நமக்கு விவேகம், புத்தி, விசாரம், ஞானம் முதலியவற்றைக் கொடுத்திருக்கிறான். அதைப் பொருள் உள்ளதாகச் செய்ய வேண்டும்; இந்த (மயக்க உறக்கம்) மோக நித்திரையிலிருந்த, விழிப்படைந்து மகாபுருஷர்களை அணுக வேண்டும்; அவர்களிடமிருந்து, அறியத்தக்க பொருளான பரமாத்ம தத்துவத்தை அறிந்து கொண்டு, தனக்கு க்ஷேமத்தைத் தேடிக்கொள்ள வேண்டும். கடோபநிஷத்தில்,

உத்திஷ்ட்ட$_2$த ஜாக்$_3$ரத ப்ராப்ய வராந்நிபே$_3$த$_4$த ।
*(1-3-14)*

- என்று சொல்லப்பட்டிருக்கிறது.

*(எழுந்திரு; விழித்துக் கொள்; மகான்களிடம் சென்று அறியத்தக்க பரமாத்ம தத்துவத்தை அறிந்து கொள்.)*

எனவே, மனித சரீரம் இருக்கும்போதே, பரமாத்மாவை அடைதல் என்ற காரியம் நிறைவேறுவதற்காக விசேஷமான பிரயத்தினங்களை மேற்கொள்ள வேண்டும். பகவான் சொல்லியிருக்கிறார் -

அநித்யமஸுக$_2$ம் லோகமிமம் ப்ராப்ய ப$_4$ஜஸ்வ மாம் ॥
*(கீதை-9/33 பிற்பகுதி)*

*(அர்ஜுனா! அநித்யமானதும் சுகம் இல்லாததுமான மனித சரீரத்தை அடைந்துள்ள நீ, எப்போதும் என்னையே சிந்தித்துக் கொண்டிரு.)*

எப்போதும் பகவானுடைய சிந்தனையே இருக்க வேண்டும் என்று முயற்சி செய்து வரும்போது, உடல் வீழ்ந்துவிட்டாலும், அதுவும் நல்லதே; ஆனால், பகவானைப் பற்றிய நினைவில்லாமலே சரீரம் விழுந்துவிட்டால், பின்னர் இரக்கப்படுவதால் எந்தப் பயனும் ஏற்படப் போவதில்லை.

ஆக, சரீரம் இருந்து கொண்டிருக்கும்போதே, தன்னுடைய முக்கிய காரியத்தை (பகவத் பிராப்தியை) நிறைவேற்றிக் கொள்ள வேண்டும். இல்லையென்றால், தீப்பிடித்து வீடு எரியத் தொடங்கியதும் கிணறு வெட்டப் புறப்பட்ட கதையாகி விடும்!

'சரீரம் என்ற இந்த வீடு கட்டுக் குலையாமல் இருக்கும்போதே, முதுமை என்பது தூரத்தில் உள்ள போதே, புலன்கள் சக்தி குறையாதிருக்கும் போதே, ஆயுள் குறையா திருக்கும் போதே, அறிவு படைத்த மனிதன் தன்னுடைய ஆன்மலாபத்துக்காக மிகப் பெரிய முயற்சி செய்து விடவேண்டும்; இல்லையென்றால், வீடு தீப்பற்றி எரியத் தொடங்கியபின் கிணறு தோண்டத் தொடங்கிய கதையாகி விடும்'-என்று கவிஞர் பர்த்ருஹரி, வைராக்ய சதகத்தில் கூறியிருக்கிறார். போஜ மன்னனும், 'மனத்தை மயக்கும் மனைவிகள், அனுகூலமான நண்பர்கள், நல்லமனம் படைத்த உறவினர்கள், அன்போடு பேசிப்பழகும் பணியாளர்கள், ஏராளமான யானைகளின் பிளிறல், குதிரைகளின் கனைப்பு-கண் இமை மூடிவிட்டால், இவையெல்லாம் எங்கே?' என்று கேட்கிறார்.

மனம் என்பது சஞ்சலமானது; குற்றம் புரிவது, அறிவில்லாதது. ஒரு பையன் கல்வி கற்காமல் வேடிக்கை-விளையாட்டுகளில் ஈடுபடுகிறான். ஏனென்றால், அவனுக்கு வேடிக்கை-விளையாட்டில் தான் சுவை இருக்கிறது! அவன் வளர்ந்து பெரியவனானவுடன், புத்தி அடைந்து,-நான் பால பருவத்தில் வேடிக்கை-விளையாட்டில் பொழுதைப் போக்கி விட்டேன்; கல்வி கற்கவே இல்லை; எவ்வளவு பெரிய

முட்டாள்தனம்!-என்று, தன்னிரக்கம் கொள்வான். ஆனால், அதனால் எந்தக் காரியமும் நடக்கப் போவதில்லை. இவ்விதமே, பகவானைப் பற்றி நினைவு கொள்ளாமல், புலனுகர்ச்சியிலும், வெற்று வேலைகளிலும் பாவச் செயல்களிலும் சுவையை அனுபவிக்கிறானே, அவனும் பின்னர், மிகவும் பச்சாதாபப்பட வேண்டியிருக்கும்.

நாம் இது விஷயமாகக் கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தோமேயானால், ஓர் உண்மை தெரியவரும். நம்முடைய மனத்தில் பகவானுடைய திருநாமம், உருவம், குணம், பிரபாவம் பற்றிய சிந்தனை; இவ்வாறே சாஸ்திரம் படித்தல், சத்சங்கத்தில் சேருதல் மூலம் பக்தி-ஞானம். வைராக்கியம்-நல்லொழுக்கம் முதலிய ஆன்மிக விஷயங்களைப் படித்து சிரவண-மனனம் செய்தல் முதலிய ஸாத்விக செயல் வடிவான பரமார்த்தத்தில் மிகவும் குறைவான நேரமே கழிகிறது. ஆனால், நம்முடைய நேரத்தில் சிறிது பாகம், சுசி-ருசி, சுக-சௌக்கியம், இன்பக் கேளிக்கை, சுயகௌரவத்தை வளர்த்து நிலை நாட்டுவது ஆகிய ராஜஸத் தன்மையுடைய (ஸ்வார்த்த) சுயநலச் செயல்களில் கழிகிறது; அதிகமான நேரம், அறியாமை காரணமாக தூக்கம், சோம்பல், தவறுதல், பாவம் முதலிய தாமஸ செயல்வடிவான அனர்த்தத்தில் கழிகிறது. ஆகவே, பகவான் நமக்கு அளித்திருக்கும் புத்தி-விவேகம்-ஞானத்தைக் கொண்டு, மனத்துக்கு அறிவுறுத்த வேண்டும்; அதை ராஜஸ-தாமஸ வடிவமான ஸ்வார்த்தம்-அனர்த்தம் (சுயநலம், பயனில்லாச் செயல்) என்னும் செயல்களிலிருந்து விலக்கி, சிரத்தை-பக்தியோடும் நிஷ்காம பாவத்தோடும் எப்போதும் பரமாத்மாவைப்பற்றி சிந்தித் திருத்தல் என்னும் பரமார்த்த விஷயத்திற்குத் திருப்பிக் கொண்டு வரவேண்டும். இவ்விதம் பரமார்த்த விஷயத்தில் மனத்தை ஈடுபடுத்துவது தான் அதை நல்ல முறையில் உபயோகப்படுத்துவதாகும்; இதற்கு மாறாக ஈடுபடுத்துவது அதைத் தவறான முறையில் உபயோகப்படுத்துவதாகும். மனம், மிகவும் கீழ் இறங்கிவிட்டது; அதைச் செம்மைப் படுத்த வேண்டுமானால், பகவானை அடைக்கலம் புகுந்து, தீவிரமான நோக்கத்துடன் பிரயாசை செய்து பகவானுடைய அருளைப் பெற்றால் மட்டுமே நடக்கக் கூடியதாகும்.

இந்தக் காலத்தில் நமக்கெல்லாம் எல்லாவித சௌக்கி யங்களும் கிடைத்திருக்கின்றன. அத்யாத்ம (ஆன்மிக)த் துறையில் மேம்பாடு அடைவதற்கு இந்தப் பாரத நாடு மிகவும் உகந்தது; அத்துடன், இது உயர்ந்ததான கலிகாலம்-இங்கே, இப்போது செய்யப்படும் சிறிது சாதனை கூட விரைவிலேயே பலனைக் கொடுத்து விடும். இப்படிப்பட்ட உத்தமமான தேச-காலத்தில், பகவான் தயை கொண்டு நமக்கு மனித சரீரத் தைத் தந்திருக்கிறார்; பஜனை-தியானம் செய்வதற்கு உதவி யாக மனம்-புத்தி மற்றும் புலன்களையும் அளித்துள்ளார். இந்தக் காலத்தில் அத்யாத்மிக விஷயங்களைப் பற்றிய புத்தகங்களும் குறைந்த விலையில் கிடைக்கின்றன. சான்றோர்களுடைய கூட்டமும் நடைபெறுகிறது. பலனில் பற்றில்லாமல் சிறிதளவு தர்மானுஷ்டானம் செய்தாலே, மேன்மை உண்டாகி விடும். இப்படியெல்லாம், உகந்த சூழ்நிலை கூடியிருந்தும், நாம் பரமாத்மாவை அடைய முயற்சிக்காமல் இருப்பது, நமக்கு மிகவும் வெட்கத்தையும் துக்கத்தையும் சோகத்தையும் தரக்கூடிய விஷயம்.

நாம் இதுகுறித்து ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க வேண்டும். நம்முடைய வீழ்ச்சிக்குக் காரணமான காம-க்ரோதம், லோப-மோஹம், அச்சம், கர்வம், பொறாமை, வெறுப்பு, மமதை, பற்று, அறியாமை முதலியவற்றின் வசப்பட்டு மிகவும் பாசமுடைய நண்பரான பகவானை ஒரு விநாடியும் கூட மறக் காமல் இருக்க வேண்டும். வைராக்ய பாவத்துடன், மூன்று உலக ஐஸ்வர்யங்களையும் தூள் தூளாக்கி விட்டு, பகவா னிடம் மட்டுமே பக்திகொண்டு நித்திய நிரந்தரமாக தியானித் துக் கொண்டிருக்க வேண்டும். இதற்கு ஈடான நமக்கு உபயோகமான வேறு காரியம் ஏதுமில்லை. அப்படியிருக்கும் போது, வேறு வேலைகளில் நமது சித்தத்தை ஏன் ஈடுபடுத்த வேண்டும்? ஆகவே, அங்கே-இங்கே சுற்றுவது, எழுந்திருப் பது-உட்காருவது; உண்பது-குடிப்பது; விழித்திருப்பது-உறங் குவது; இப்படியாக வேலை செய்யும் போதெல்லாம் பகவானை நினைவு வைத்துக் கொள்வதற்கு, மூச்சு உள்ள வரையில் முயற்சி செய்ய வேண்டும். ஜப-தியானம், ஸந்த்யா -காயத்ரி, பூஜை-பாராயணம், துதி-பிரார்த்தனை செய்யும் போது அவற்றின் பொருளையும் உள்ளுணர்வையும் நன் றாகத் தெரிந்துகொண்டு, சிரத்தை- நம்பிக்கை-பக்தியோடு

நிஷ்காமமாக குணப் பிரபாவங்களோடு கூடிய பகவானுடைய உருவத்தை மனத்தில் எப்போதும் சிந்தித்துக் கொண்டே செய்ய வேண்டும். இரவில் படுக்கச் செல்லும்போதும் பகவானுடைய நினைவுடனேயே இருந்து உறங்கவேண்டும். இப்படிச் செய்தால், இரவு படுக்கை வேளையும் கூட, சாதனை செய்யும் காலம் என்றாகி விடும்; ஏனென்றால், மனிதன் பதினெட்டு மணி நேரம் எந்தக் காரியத்தைச் செய்து வருகிறானோ, அதையே, இரவு ஆறு மணி நேர கனவு-உறக்கத்திலும் அநேகமாகக் கழித்து விடுகிறான். எனவே, லட்சோபலட்சம் வேலைகளை ஒதுக்கி வைத்து விட்டு, பகவானை மறக்கமாட்டேன்-என்ற ஒரே ஒரு காரியத்தைச் செய்வோம். பகவானை நிரந்தரமாகத் தியானித்துக் கொண்டிருப்பதால், தீயகுணம், தீயொழுக்கம், கவலை, உறக்கம், சோம்பல், தவறிழைத்தல் முதலிய குறைகளும் துக்கமும் முற்றிலுமாக, எப்போதைக்குமாக அழிந்து போகின்றன; பகவானை அடைதல் என்ற பரமசாந்தி-பேரானந்தம் விரைவிலேயே கிடைத்து விடுகிறது.

ஸ்ரீமத் பாகவதத்தில்,

அவிஸ்ம்ருதி: க்ருஷ்ணபத$_4$ாரவிந்த$_3$யோ:<br>
க்ஷிணோத்யப$_4$த்ராணி ஶமம் தநோதி ச।<br>
ஸத்த்வஸ்ய ஶுத்$_3$தி$_4$ம் பரமாத்மப$_4$க்திம்<br>
ஜ்ஞாநம் ச விஜ்ஞாநவிராகயுக்தம்॥

(12-12-54)

*(பகவான் ஸ்ரீகிருஷ்ணனின் திருவடித் தாமரைகளை சஞ்சலமின்றி தியானிப்பதால், எல்லா பாப-தாபங்களும் அமங்களங்களும் அழிந்து போகின்றன; பரமசாந்தியை வளப்படுத்துகிறது. அதன்மூலம் அந்தக்கரண தூய்மையும், பகவானிடம் பக்தியும் ஏற்பட்டு விக்ஞான-வைராக்யத்தோடு கூடிய (பகவானுடைய தோற்றத்தின் உண்மையான) மெய்யறிவு உண்டாகிறது.)*

தஸ்மாத் ஸர்வாத்மநா ராஜந் ஹரி: ஸர்வத்ர ஸர்வத$_3$ா।<br>
ஶ்ரோதவ்ய: கீர்த்திதவ்யஶ்ச ஸ்மர்த்தவ்யோ ப$_4$க$_3$வாந் ந்ருணாம்॥

(2-2-36)

*(ஆகவே, பரீட்சித் மன்னா! மக்கள் எல்லோரும் எல்லாக் காலத்திலும் எல்லாச் சூழ்நிலையிலும் எல்லா விதத்திலும் பகவான் ஸ்ரீஹரியைப் பற்றிய சிரவண-கீர்த்தன-ஸ்மரணம் செய்து வரவேண்டும்.)*

– என்று, ஸ்ரீமத் பாகவதத்தில் அழுத்தமாகக் கூறப்பட்டிருக்கிறது.

## 3. ஈசுவரன் மற்றும் மகான்களின் பேராற்றல்

பலம், ஐஸ்வர்யம், தேஜஸ், சக்தி, சாமர்த்தியம் ஆகியவற்றை முழுமையாகப் பெற்றுள்ளவரும் நிகழ முடியாததை நிகழ்த்திக் காட்ட வல்லவருமான பகவானுடைய பேராற்றலுக்கு எல்லையே இல்லை. உண்மையில், ஈசுவரனுடைய திருவடிவம், பேராற்றல் ஆகியவற்றை வெறும் சொற்களால் வர்ணிக்கவே முடியாது. ஈசுவரனை கண்களால் கண்டவர் மட்டுமே, அவரை உள்ளபடி அறிந்தவராவார். சொற்களினால் அவரை ஒருபோதும் விளக்கிக்கூற இயலாது. இது சம்பந்தமாக ஓர் உதாரணம் பார்ப்போம்.

இந்த மண்ணுலகைச் சேர்ந்த ஒரு மனிதன், பூமிக்குக் கீழே கீழே சென்று பாதாள லோகத்தை அடைந்தான். அவ்விடத்தில் சூரிய-சந்திர-நட்சத்திரங்கள் தோன்றுவதே இல்லையாதலால், ஒரே கும்மிருட்டு. அங்கு சென்று சிறிது காலம் ஆனபின்னர், அங்கிருந்த மக்களிடம், 'அட, இங்கே என்ன, பகல் பொழுதே கிடையாதா?' என்று கேட்டான்.

'பகல் பொழுதா?... அப்படீன்னா, என்ன?'

'அது வந்து ... சூரியன் உதித்ததும், ரொம்ப வெளிச்சம் வரும். அது தான், பகல் பொழுது ...'

'சூரியன்னா ... என்ன?'

'ஆகாயத்தில், ஒளிப்பிழம்பான, உருண்டையான ஒரு பொருள் உதிக்கிறதே, அது தான் சூரியன்...'

உடனே அங்குள்ள மக்கள் பதினாயிரம் வாட்ஸ் சக்தியுள்ள ஒரு மின்சார பல்பை ஆகாயத்தில் நிறுத்தி

எரியவிட்டுப் பின் கேட்டார்கள்: 'சூரியன் இப்படித் தானே இருக்கும்?'

மனிதன் சொன்னான் : 'பூ! இதுவா? ... சூரியனுக்கு எதிரே இது ஒண்ணுமே இல்லை!'

அங்குள்ளவர்கள் சொன்னார்கள் : 'அட, போய்யா. இதைக் காட்டிலும் பிரகாசமான வஸ்து இருக்கவே முடியாது!...'

மண்ணுலக மனிதன் சொன்னான் : 'நீங்கள் என்னுடன் ஓர் ஆசாமியை மண்ணுலகுக்கு அனுப்பி வையுங்கள். நான் அங்கே சூரியனைக் காட்டி அவனைக் கண்களால் காணச் செய்கிறேன்'.

இதைக் கேட்டதும், அவனுடன் ஓர் ஆசாமியை அனுப்பி வைத்தார்கள். மண்ணுலக மனிதன், பாதாள லோக ஆசாமியுடன் மனித உலகுக்கு வந்தான். அவர்கள் மண்ணுலகம் வந்தடைந்தபோது, அமாவாசை நள்ளிரவு நேரம். கும்மிருட்டு. என்றாலும், அந்த உலகத்தைப் போலில்லாமல் இங்கே கொஞ்சம் வெளிச்சம் இருந்தது. இதைப் பார்த்ததும், ஆசாமி கேட்டான் : 'என்ன, இது தான் பகலா?'

'இல்லை, இல்லை. இது நள்ளிரவுப் பொழுது ...'

அந்த நேரத்தில் ஆகாயத்தில் கண்சிமிட்டிக் கொண்டிருந்த நட்சத்திரங்களைப் பார்த்து, 'இது என்ன?' என்று ஆசாமி கேட்டான்.

'இவைகள் நட்சத்திரங்கள் ...'

சிறிது நேரத்தில், அருணோதயம் ஆனவுடன் நட்சத்திரங்கள் ஒளியிழந்து போய் விட்டன; விஸ்தாரமாக ஒளி படர்வதைப் போல் தோன்றிற்று. ஆசாமி கேட்டான் : 'இதுவா, பகல்?'

'இல்லை. இது, விடியற்காலம்; அருணோதய நேரம். இன்னும் இரண்டு நாழிகையில் சூரியன் உதயமாகும்; அந்த வேளை, பகல் பொழுது எனப்படும்.'

'ஆகாயத்தில் மினுக்கி கொண்டிருந்த நட்சத்திரங்களின் ஒளி எப்படிக் குறைந்து போயிற்று?'

'சூரியனுடைய ஒளி இங்கே பரவத் தொடங்கியதால், நட்சத்திரங்களின் ஒளி குறைந்து போய் விட்டது. சூரியன் உதயமானவுடன், அதிலிருந்து பரவிவரும் பேரொளிப் பிரகாசத்தில், இந்த நட்சத்திரங்கள் ஆகாயத்தில் அதனதன் இடத்தில் அப்படி அப்படியே இருந்தாலும், கண்ணில் படமாட்டா ...'

சூரிய உதய காலம் இன்னும் நெருங்கி வரவே, சுக்கிரன், வியாழனைத் தவிர மற்றெல்லாத் தாரகைகளும் மறைந்து விட்டன; சூரியன் உதயமானவுடன் சுக்கிர-வியாழன்களும் கண்ணிலிருந்து மறைந்தன. கீழ் உலகிலிருந்து வந்திருந்த ஆசாமிக்கு சூரியனைப் பார்க்கவே முடியவில்லை. சூரிய கிரஹணத்தின் போது, சூரியனை நேரில் பார்க்க முடியாததால், அபிரகத்தில் விளக்கின் கரு மையைத் தடவி அதன் மூலம் சூரியனைப் பார்ப்பது போல, இந்த ஆசாமியும் பார்த்தான். சூரியன், இரவு, பகல் ஆகியன, அவனுக்கு நன்றாகப் புரிந்துவிட்டன. பின்னர், அந்த ஆசாமியை அழைத்துக் கொண்டு அவன் உலகுக்கே போனான், மனிதன். அங்கிருந்த மனிதர்கள், அந்த ஆசாமியைக் கேட்டார்கள் : 'என்ன, சூரியனை நேரில் உன் கண்களால், பார்த்தாயா? இரவு, பகலை கண்களால் பார்த்தாய்?'

'ஆமா. நான் நேரிலே கண்ணால் பார்த்துட்டேன் ...'

'அப்படீன்னா ... நீ பார்த்த விவரத்தை அப்படி அப்படியே சொல்லு ...'

'அது என்னாலே முடியாது! நான் எவ்வளவு சொன்னாலும் புரிய வைக்க முடியாது. நீங்க தெரிஞ்சுக்கணு மானால், அங்கே போய் தெரிஞ்சுங்கோ. அதைத் தவிர வேறு வழியே இல்லே!' என்றான், அந்த ஆசாமி.

இந்த உதாரணத்தை, இப்போது, தீவிரமாகச் சிந்தித்துப் பார்ப்போம்.

சூரியனோ, பகலோ இல்லாத நாட்டு மக்களுக்கு அவைகளை நேரில் கண்டு அனுபவித்த ஆசாமி,

சூரியனையும் பகலையும் பற்றி விளக்கமாகத் தன் வார்த்தை களால் எடுத்துக் கூறி புரியவைக்க முடியவில்லை என்னும் போது, பரமாத்மாவின் தோற்றத்தையும் பிரபாவத்தையும் மனிதச் சொற்களால் விளக்கிக் கூற முடியுமா, என்ன? பரமாத்மாவை அடைந்தவர் தான், பரமாத்மாவின் உருவம்-பிரபாவங்களை உள்ளபடி அறிந்து கொள்ள முடியும். ஆனால், அவரும், அதைப் பிறருக்கு எடுத்துக் கூறி அறியச் செய்ய முடியாது. ஆக, அறநூல்களாலும் மகான்களாலும் எடுத்துக் கூறப்பட்டிருப்பவை, பரமாத்மாவின் ஒரு சிறு ஒளித்துகள் மாத்திரமே. பகவான், கீதையில், ஆங்காங்கே, தன்னுடைய பிரபாவத்தை விளக்கிக் கூறி அறிவுறுத்தியிருக்கிறார். ஆயினும், கீதையின் பொருளை அறிந்து கொண்டாலும் பகவானுடைய தோற்றத்தையும் பிரபாவத்தையும் சரியாக அறிந்து கொள்ள இயலாது. கீதையில் பகவான் சொல்கிறார் -

யத்$_3$யத்$_3$விபூ$_4$திமத்ஸத்த்வம் ஸ்ரீமதூ$_3$ர்ஜிதமேவ வா।
தத்ததே$_3$வாவக$_3$ச்ச$_2$ த்வம் மம தேஜோம்ஶஸம்ப$_4$வம்॥
(10-41)

*(உலகில் எவைகள் விபூதியுடன் (செல்வம், ஒளி, ஆற்றல்) விளங்குகின்றனவோ, அவைகள் எல்லாம் என் ஆற்றலின் ஒரு துகளின் வெளிப்பாடு என்பதை அறிந்துகொள்.)*

எனவே, உலகில், விபூதி-காந்தி-பலம்-பிரபாவம் நிறைந்த எல்லாப் பொருட்களையும் ஒன்றாகக் கூட்டிப் பார்த்தாலும், அவையெல்லாம், பகவானுடைய பிரபாவத்தின் ஒரு துளி பாகத்தின் வெளிப்பாடு என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

ஆக, பகவானுடைய பிரபாவம் கட்டுக்கடங்காதது; கடக்க முடியாதது; எல்லையற்றது; அத்துடன், விளக்க முடியாதது. பகவானுடைய குணங்களோடு கூடிய ஒரு தோற்றத்தை, சிரத்தையோடு, பார்த்து, தொட்டு, பேசி, சிந்தித்து வருவதால், மிகப் பெரிய பாவியும் கூட சீக்கிரத்திலேயே க்ஷேமத்தை அடைகிறான். நாம், பகவானை நினைத்தாலும், பகவான் நம்மை நினைத்தாலும் நமக்கு மிகவும் நன்மை தான். நாம் பகவானை நினைத்தால், நமது உள்ளம் புனிதமடைந்து, நாம் முன்னேற முடிகிறது; பகவான் நம்மை நினைத்துக் கொண்டால் அருங்குணங்கள் நிரம்பிய

பகவானுடைய இதயத்தில் நாம் பிரவேசிப்பதால், மிகவும் புனிதம் ஏற்பட்டு நாம் முன்னேற முடிகிறது. அதனால் தான், (ராமசரித மானஸம் உத்தரகாண்டத்தில்) அங்கதன், ஹனுமானிடம், 'நீங்கள் அடிக்கடி பகவான் ஸ்ரீராமனை எனக்கு நினைவுபடுத்திக் கொண்டிருங்கள்' என்று கூறுகிறான்.

ஆகவே, நாம் ஒவ்வொரு சமயத்திலும் பகவானுடைய உருவ தியானம் செய்துகொண்டே இருக்கவேண்டும். ஏனென்றால், பகவானை நினைப்பவனை, பகவானும் நினைத்துக் கொள்வார். இது அவருடைய சட்டம்.

யே யத$_2$ா மாம் ப்ரபத்$_3$யந்தே தாம்ஸ்ததை$_2$வ ப$_4$ஜாம்யஹம் ॥

(கீதை-4/11)

*(பக்தன் என்னை எவ்வாறு வழிபடுகிறானோ, நானும் அவனை அவ்வாறே வழிபடுகிறேன்.)*

இதன்படி, பகவான் நம்மீது பார்வையைச் செலுத்தினால் நாம் மிகப் புனிதமாகி விடுவோம்; நாம் பகவானை தரிசித்தால் நாம் மிகப் புனிதமாகி விடுவோம்; நாம் மேலே மேலே செல்ல முடியும். ஆக, எவ்விதமாகப் பார்த்தாலும் நமக்கு லாபம் தான். எனவே, பகவானுடன் பேசுவது, அவருடைய திருவடிகளைத் தீண்டுவது-இதைப் பற்றிச் சொல்ல வேண்டுமா, என்ன!

ஆனால், சிரத்தை இல்லாவிட்டால், இவை ஒன்றும் நடைபெறா. ஸ்ரீகிருஷ்ணனை நேரில் தரிசித்தும் கூட துர்யோதனனுக்கு உயர்வு கிடைக்கவில்லையே? சிரத்தை இல்லாவிட்டால், பகவானுடைய வார்த்தைகளான கீதோபதேசத்தைப் படித்துப் புரிந்து கொண்டாலும் மேன்மை ஏற்படாது.

அஶ்ரத்$_3$த$_3$த$_4$ானா: புருஷா த$_4$ர்மஸ்யாஸ்ய பரந்தப ।<br>
அப்ராப்ய மாம் நிவர்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மநி ॥

(கீதை-9/3)

***(எதிரிகளை மாய்ப்பவனே! மேலே சொல்லப்பட்ட அறநெறிகளில் நம்பிக்கை இல்லாத மனிதன், என்னை அடையாமல், இறப்பு என்னும் சம்சாரத்தில் சுழன்று கொண்டேயிருப்பான்.)***

ஆனால், பகவானிடம் நம்பிக்கை வைப்பவன், தெய் விகமான அவருடைய பிறப்பு-செயல்களின் தத்வ-ரகசியங் களை அறிந்து கொண்டு, மேன்மையை அடைகிறான்.

ஜந்ம கர்ம ச மே தி$_3$வ்யமேவம் யோ வேத்தி தத்த்வத:।
த்யக்த்வா தே$_3$ஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந ॥

*(கீதை-4/9)*

*(அர்ஜுனா! என்னுடைய பிறப்பும் செயல்களும் திவ்விய மானவை; அதாவது, மாசு மருவற்றவை; மண்ணுலகுக்கு வேறாக உயர்ந்த தன்மையுள்ளவை. இவ்விதம், தத்துவத்தை அறிந்து கொள்ளும் மனிதன், சரீரத்தைத் துறந்து விட்டுச் சென்ற பிறகு மீண்டும் பிறப்பை அடைவதில்லை; அவன் என்னையே அடைந்து விடுகிறான்.)*

பகவான், அர்ஜுனன் போன்ற சிரத்தை மிக்கவர்களுக்குத் தான், தன்னுடைய அவதார ரகசியத்தைக் கூறுகிறார்.

அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூ$_4$தாநாமீஸ்வரோऽபி ஸந்।
ப்ரக்ருதிம் ஸ்வாமதி$_4$ஷ்ட்ட$_2$ாய ஸம்ப$_4$வாம்யாத்மமாயயா ॥

*(கீதை-4/6)*

*(நான் பிறப்பில்லாதவன்; அழிவில்லாதவன்; எல்லாப் பிராணி களையும் ஆட்டிப் படைக்கும் மேலாண்மை பெற்றவன். எனினும், என்னுடைய பிரகிருதியை மேற்கொண்டு, என்னுடைய யோகமாயையால் வெளிப்படுகிறேன்.)*

ஆனால், ராட்சஸ-அரக்க-மோஹினி இயல்புடைய மூட மனிதர்கள், அவநம்பிக்கை கொண்டவர்களாகவும் தகுதியற்ற வர்களாகவும் இருப்பதனால், பகவானுடைய சூட்சுமத்தை அறியாமல், பகவானை நிராகரிக்கிறார்கள். (பகவத் கீதை-9/11,12 சுலோகம் பார்க்க.) அந்த அவநம்பிக்கையாளர்கள், பகவானுடைய பிரபாவத்தை அறியாதவர்களாக இருக்கிறார் கள்; அதனால், பகவான் அவர்கள் முன் தோன்றுவதில்லை; தனக்கு மேலே யோக மாயை என்ற திரையைப் போட்டு மூடிமறைத்துக் கொள்கிறார்! பகவானே சொல்லியிருக்கிறார் -

நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய யோக$_3$மாயாஸமாவ்ருத:।
மூடே$_4$ाऽயம் நாபி$_4$ஜாநாதி லோகோ மாமஜமவ்யயம் ॥

***(கீதை-7/25)***

*(என்னுடைய யோகமாயையில் ஒளிந்து கொண்டிருக்கும் நான், எல்லோர் கண்களிலும் படுவதில்லை. அதனால், அறியாமையில் மூழ்கியிருக்கும் மக்கள் கூட்டம், பிறப்பில்லாத, அழிவில்லாத பரமேசுவரரான என்னை அறிந்து கொள்ளவில்லை; அதாவது, இறப்பும் பிறப்பும் உடைய சாதாரண மனிதனாகக் கருதுகிறார்கள்.)*

அர்ஜுனன், பகவானிடம் நம்பிக்கை கொண்டவனாகவும் ஆழ்ந்த அன்புடையவனாகவும் இருந்ததால், பகவான் அவன் எதிரே காட்சி தந்தார். அதற்கு மேலும், 'நான் தான் சாட்சாத் பரமாத்மா' என்றும் தன்னை அறிவித்துக் கொண்டார். 'என்னையே சரணடைந்து, என்னிடம் பக்தி செலுத்தி வா; இதனால் நீ என்னை அடைவாய்.' கீதை பதினெட்டாவது அத்தியாயத்தில் உபதேச நிறைவிலும்,

ஸர்வகு₃ஹ்யதமம் பூ₄ய: ஶ்ருணு மே பரமம் வச: ।
இஷ்டோऽஸி மே த்₃ருட₄மிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் ॥
மந்மநா ப₄வ மத்₃ப₄க்தோ மத்₃யாஜீ மாம் நமஸ்குரு ।
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜாநே ப்ரியோऽஸி மே ॥
*(கீதை-18/64,65)*

*(ரகசியமாக மறைத்து வைக்கத் தக்க எல்லாவற்றைக் காட்டிலும் ரகசியமான என் சொற்களை மறுபடியும் கேள். நீ எனக்கு மிகவும் வேண்டப்பட்டவன். அதனால் தான், பரம சௌக்கியத்தைக் கொடுக்கக் கூடிய தத்துவங்களை உனக்குக் கூறப் போகிறேன். அர்ஜுனா, என்னிடமே மனத்தைச் செலுத்து; என் பக்தனாக ஆகு; என்னைப் பூஜிப்பாயாக; என்னை வணங்கு. இப்படிச் செய்து வந்தால், நீ என்னையே அடைந்து விடுவாய்-என்று நான் உனக்கு வாக்குறுதி அளிக்கிறேன். நீ எனக்கு மிகவும் நெருக்கமானவன்.)*

பகவான், ஆங்காங்கே, தன் உருவ விளக்கத்தையும் கூறியிருக்கிறார். நிர்குண-நிராகார வடிவத்தைப் பன்னிரெண்டாம் அத்தியாயம் மூன்றாவது சுலோகத்திலும், ஸகுண-நிராகார வடிவத்தை எட்டாம் அத்யாயம் ஒன்பதாவது சுலோகம்; ஒன்பதாம் அத்யாயம் நாலு, ஐந்து, ஆறு, பதினெட்டாவது சுலோகங்களிலும்; ஸகுண-ஸாகார

விசுவரூபத்தை பதினோராம் அத்யாயம் ஐந்து, ஆறு, ஏழாவது சுலோகங்களிலும் வர்ணித்திருக்கிறார். அர்ஜுனன், ஸகுண-ஸாகார நான்கு கரங்களோடு கூடிய தோற்றத்தைக் காட்டியருளும்படி பகவானை வேண்டினான். (கீதை-11/46) அப்போது பகவான் நான்கு கைகளோடு கூடிய தன் தோற்றத்தை அர்ஜுனனுக்குக் காட்டினார். (கீதை-11/50) ஆகவே, ஸகுண-நிர்குண, ஸாகார-நிராகாரக் காட்சிகள் எல்லாமே பகவானுடைய வடிவங்களே. இவற்றினுடைய தத்துவ-ரகசியங்களை அறிந்து கொள்ளும் மனிதன் நிச்சயமாக மேன்மையை அடைகிறான்.

இவ்விதமே, உலகத்தின் நன்மைக்காக, பகவான் தன் அதிகாரத்தைக் கொடுத்து இவ்வுலகுக்கு அனுப்பி வைக்கும் பக்தர்களை, அல்லது, இங்கேயே உள்ள மகான்களில் ஒருவருக்குத் தன் அதிகாரத்தை வழங்கிக் கௌரவிப்பவரை, நம்பிக்கையோடு கூட தரிசனம் செய்தல், பாத கமலங்களில் சேவித்தல், உரையாடுதல், தியானம் செய்தல் மூலம் மனிதன் மிகவும் புனிதமடைந்து அதனால் அவன் மேல்நிலை அடைய முடியும். ஏனென்றால், ஈசுவரனாலும் அவருடைய அதிகாரத்தைப் பெற்றவர்களாலும் பார்க்கப்பட்டாலும், தொடப்பட்டாலும், மனத்தில் நினைத்துக் கொள்ளப் பட்டாலும், எல்லாம் புனிதமடைந்து விடுகிறது. அந்த மகாபுருஷர்களின் பிரபாவம் மிகவும் மாறுபட்டது; தெய்விக மானது; உலகில் காணக் கிடைக்காதது; எல்லையற்றது. ஆனால், இத்தகைய மகாத்மா, கோடியில் ஒருவராகத் தான் இருப்பார். பகவான் சொல்கிறார்-

மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஶ்சித்$_3$ யததி ஸித்$_3$த$_4$யே ।
யததாமபி ஸித்$_3$த$_4$நாம் கஶ்சிந்மாம் வேத்தி தத்த்வத: ।।
*(கீதை-7/3)*

*(ஆயிரக்கணக்கான மனிதர்களில், யாரோ ஒருவன் என்னை அடைவதற்காக முயல்கிறான். அப்படி முயற்சி செய்யும் யோகிகளில் யாரோ ஒருவர் என்னையே உபாசித்து, என்னை யதார்த்த வடிவில் அறிகிறார்.)*

ஆகவே, முதலாவதாக, பரமாத்மாவை அடைந்த மேன்மக்கள், உலகில் மிகக் குறைவு. அவர்களிலும்

(பகவானுடைய) அதிகாரத்தைப் பெற்றவர்கள் இன்னும் குறைவு. அந்த மகாத்மாக்களின் சங்கத்தை அடைவது மிகவும் கடினம். அப்படி அவர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டாலும் அவர்களை (ஸித்த புருஷர்களாக) அடையாளம் காண்பது மிகவும் கஷ்டம். ஏனென்றால், அவர்களுக்குத் தங்களை காட்டிக் கொள்ள வேண்டும் என்ற அவசியம் ஏதும் இல்லை; சாமான்ய மக்களுக்கு அவர்களை இனம் கண்டுகொள்ளும் தகுதி இருப்பதில்லை. 'மகா புருஷர்களின் லட்சணம் தான் கீதையில் பல இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறதே? நாம் அப்படிப்பட்ட லட்சணம் கொண்டவர்களை அடையாளம் கண்டு கொள்ளலாமே?' என்றால், அதுவும் கஷ்டம் தான்! ஏனென்றால், அந்த லட்சணங்கள் எல்லாம் நாமாக அறிந்து கொள்ள வேண்டியவை; பிறரால் அறிவுறுத்தக் கூடியவை அல்ல. 'சரி, அப்படியானால் அவர்களை எப்படித் தான் அறிந்து கொள்வது?' என்றால், எவருடைய தரிசனம்-பேச்சு முதலியவற்றால், நம்மிடம், 'மகாபுருஷர்களுடைய லட்சணங்கள் இவரிடம் பொருந்தியிருக்கின்றன'-என்ற எண்ணம் தோன்றுகிறதோ, அவரே நம்மைப் பொறுத்த வரையில் மகாத்மா!

மகான்களுக்குத் தொண்டு செய்தல், உரையாடுதல், நமஸ்காரம் செய்தல் முதலியவற்றால் ஒரு மகாத்மாவிட மிருந்து பல மகாத்மாக்கள் தோன்ற முடியும்-ஒரு தீபத்தில் எண்ணெயும் திரியும் போட்டால், அதிலிருந்து பல தீபங்களை ஏற்றுவதற்கு முடியும் அல்லவா? நம்முடைய சிரத்தை-விசுவாசம் தான், இங்கு எண்ணெய்-திரி ஆகும். மகான்களுடைய ஆணையை சிரமேற்கொண்டு நடப்பது, சிரத்தை; அவர்களுடைய சமிக்ஞைகளுக்கு ஏற்றவாறு நடப்பது, விசேஷமான சிரத்தை. இதைக் காட்டிலும் அதிக சிரத்தை என்னவென்றால், அவருடைய சித்தாந்தங்களை அறிந்துகொண்டு, அவருடைய மனத்துக்கு அனுகூலமான முறையில், அதாவது அவருடைய விருப்பத்துக்கு ஏற்றபடி, பொம்மலாட்ட பொம்மையைப் போல நடப்பது தான். அவரிடமிருந்து ஒரு விஷயத்தைக் கேட்டு அறிய வேண்டும் என்றால், அவருக்கு எதிரில் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து, அறிந்துகொள்ள விழையும் பாவத்துடன், தூய

இயல்பு-சிரத்தை-அடக்கம்-பக்தியுடன் கேட்கவேண்டும். பகவான், அர்ஜுனனிடம் கூறுகிறார் -

> தத்₃வித்₃தி₄ ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா।
> உபதே₃க்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்த்வத₃ர்ஶிந: ॥
>
> *(கீதை-4/34)*

*(அந்தப் பரமாத்மாவைப் பற்றிய உண்மையான ஞானத்தை, தத்துவதர்சிகளான ஞானிகளிடம் சென்று அறிந்து கொள். அவர் எதிரில் தண்டம் போல் வீழ்ந்து, அவருக்குப் பணிவிடை செய்து, கபடமில்லாமல் தூய மனத்துடன் கேள்வி கேட்டால், பரமாத்ம தத்துவத்தை நன்றாக உணர்ந்துள்ள ஞானிகள், உனக்கு தத்துவ ஞானத்தை உபதேசம் செய்வார்கள்.)*

பகவான், ஞானத்தை அடைய விரும்பும் ஆர்வமுடையவரின் (வணங்குதல், சேவை செய்தல் முதலிய) கடமைகளைக் கூறியிருக்கிறார்; ஆனால், மகாத்மாக்கள் இவைகளையெல்லாம் அங்கீகரிக்க வேண்டும் என்று சொல்லவில்லை. ஆர்வமுடையவர்கள் இவ்வாறு நடந்து கொண்டாலும் மகாத்மா அவைகளை ஏற்காமல் போகலாம். ஏனென்றால், அவருக்குத் தன் சரீரத்தைப் பற்றிய நினைவே இல்லாததால், மனம் எப்போதும் பகவானிடமே லயித்து விட்டதால், இவைகளை ஏற்பதற்கு யார் இருக்கிறார்? ஆனால், இவ்வாறு சேவை செய்து கொண்டு ஞானத்தை அடைய விரும்பும் நபர், ஒரு தகுதி வாய்ந்த பாத்திரமாக இருந்தால், அவர் இவருடைய தொண்டுகளை நிராகரிப்பதும் இல்லை. அமைதியோடு இருத்தல் என்பது அவருடைய இயல்பாகி விட்டது. ஏனென்றால், அவருடைய சாதனை காலத்திலேயே விவேகம்-வைராக்யம்-சாந்தம் முதலியன அவருக்குக் கைகூடி விட்டன.

மிக உயர்ந்த நிலையில் உள்ள மகாத்மாக்கள், தங்களை ஒரு நபராக ஆக்கிக் கொண்டு, தங்களைப் பூஜிக்கும்படி யாரையும் கேட்டுக் கொள்ள மாட்டார்கள்; ஏனென்றால், அவருக்கு சரீரத்தைப் பற்றி மமதையும் அபிமானமும் (தன்னுடையது என்ற எண்ணமும் பற்றுதலும்) இருப்பதில்லை. எவனொருவன் தன்னை மகாத்மாவாக எண்ணிக் கொண்டு, தன்னைப் பூஜித்தல், மரியாதை செய்தல்,

பெருமைப்படுத்துதல், புகழ்தல் முதலியவற்றால் பிறருக்கு முன்னேற்றம் ஏற்படும் என்று அறிவுறுத்துகிறாரோ அவர் உண்மையில் மகாத்மாவாக இருக்க முடியாது. ஏனென்றால், தன்னை உயர்வாகவும் மற்றவர்களை இழிவாகவும், தன்னை மகாத்மாவாகவும் பிறரை அக்ஞானிகளாகவும் கருதுவது மிகவும் கீழ்த்தரமான நிலை. மகாத்மாவுக்குத் தன் சரீரத்தில் அகந்தை-மமதை இருக்காது; சரீரத்தில், அதை நடத்திச் செல்கிற 'நான்' இருக்காது-என்னும்போது, மரியாதை-கௌரவம்-போற்றுதல்-புகழ்தல் ஆகியவற்றுக்கு ஆசைப்படு பவர் அங்கே யாருமே இல்லை. கௌரவம்-மரியாதை-புகழ்ச்சிக்கு ஆசை வைத்திருப்பவரை உயர்ந்த நிலை யிலுள்ள சாதகர் என்று கூடக் கூற முடியாது; மாறாக, கௌரவம்-மரியாதை-புகழ்ச்சியின் அடிமைகள், அவர்கள்.

தன்னிடம் நம்பிக்கை வைக்காத மனிதர்கள் முன், யோகமாயை என்ற மேலங்கியை போட்டுக் கொண்டு வளைய வருகிறார், பகவான்-என்று முன்னே சொல்லப் பட்டது. மகாத்மாக்களும் அப்படித்தான்.

பகவானைப் பற்றிய ரகசியத்தை உணர்ந்து, அவரைப் பின்பற்றி நடக்கும் உண்மையான மகாத்மாவும், தன்மேல் மாயை என்னும் போர்வையை போர்த்திக் கொண்டு சாதாரண மனிதன் போல் காணப்படுவார். ஆனால், உண்மையான ஞானத் தேட்டையுடைய, தகுந்த பாத்திரமான ஒரு மனித ரிடம், தன்னுடைய அங்க அசைவுகள் மூலம் பகவானை அடைந்து விட்ட தன்னுடைய இயல்பை, கர்வமில்லாமல், தெரிவிக்க முயன்றால் அதில் ஒன்றும் பெரிய குற்றம் இல்லை. அவர்கள் உண்மையில் மகாத்மாக்களாக இருந்தும், உலக நன்மை என்ற குறிக்கோளுடன், பேரார்வமுடைய சாதகனைப் போல பொதுவாக ஆத்ம விசாரணை செய்தாலும், பரமாத்மாவை அடைந்து விட்ட அவருடைய நிலையில் எந்தக் குறைவும் ஏற்பட்டு விடாது. ஆனால், சாமானிய மனிதன், மகாத்மாவாகத் தன்னைக் காட்டிக் கொண்டு, மாலை-மரியாதை ஏற்றுக் கொண்டால், அவனுக்குத் தான் சுமை. ஏனென்றால், பலனில் விருப்பம் கொண்டு சாஸ்திர முறைப்படியான கர்மாக்களை அக்ஞானிகள் செய்து வருபவைகளையே மகாத்மாக்கள் நிஷ்காமமாகவும்

பற்றின்றியும், உலக நன்மையை முன்னிட்டுச் செய்து வருகிறார்கள். பயனை விரும்பும் அக்ஞானி செய்து வரும் சாஸ்திர முறைப்படியான கர்மாக்களை, ஞானிகளும் ஏன் பின்பற்றிச் செய்ய வேண்டும்?-என்ற கேள்வி எழக்கூடும். பயனை விரும்பும் மனிதன் மனத்தில் என்ன எண்ணம் இருக்கிறது? 'நாம் செய்யும் கர்மாக்களில், விதி-நியமங்கள் சரிவர அனுசரிக்கப் படாவிட்டால், பலன் இல்லாமல் போய் விடுமே?' என்ற அச்சத்தில், பலனில் பேராசை கொண்டு, சாஸ்திர விதிகளை கடுமையாக அனுசரிக்கிறார்கள்; ஆதலால், அந்தக் கர்மா பலன் கொடுக்காமல் போவது; விபரீத பலனைக் கொடுப்பது என்ற சந்தேகம் எழுவதற்கு இடமே இல்லை. ஆகவே, பலனில் விருப்பமுடைய அக்ஞானிகள் செய்யும் சாஸ்திர விதிப்படியான கர்மாக்களை மகாபுருஷர்கள், பலனில் விருப்பமின்றியும் பற்றின்றியும் செருக்கின்றியும் உலக நன்மைக்காகவும் செய்து வருவார்கள்.

ஈசுவரனுடையவும், மகாத்மாக்களுடையவும் ஸ்வரூப பிரபாவத்தின் உண்மையான அறிவு அவர்களுடைய அருளினாலேயே கிடைக்கிறது. ஆகவே, அவர்களுடைய அருளைப் பெறுவதற்காக, சிரத்தை-பக்தியுடன், நிஷ்காம பாவத்துடன், முற்றிலுமாக அவர்களையே சார்ந்து அடைக்கலம் புக வேண்டும்.



## 4. பகவானின் எழில் வடிவ தியானம்

உலக நல்வாழ்வைக் கொடுக்கக்கூடிய, ஸ்ரீபகவானைத் தியானிப்பதற்கு ஈடான வேறொரு சாதனை இல்லை. அதனால், பகவத் தியானத்தை சிரத்தை-பிரேமை-நிஷ்காம பாவத்தோடு, எப்போதும் மனிதன் செய்து வரவேண்டும். தனித்திருத்தல்; சான்றோர் சங்கம்; சாஸ்திர நூல்களைக் கற்று சிந்தித்தல்; நாமஜபம்; திருவடித் தியானம், லீலை-குணம்-பிரபாவம் பற்றிய சிந்தனை; தத்வ-ரகசியங்கள் பற்றிய அறிவு; பகவானிடம் பெருநம்பிக்கையும் பிரேமையும் கொண்டிருத்தல்; உலகாயத இன்ப நுகர்ச்சியை ஒதுக்கி ஓய்வு கொள்வது-இவையெல்லாம் பகவானைத் தியானிப்பதில்

உறுதுணையாக இருக்கக்கூடியவை. ஏனென்றால், பகவானுடைய திருநாமஜபம் செய்யும்போது, பகவானின் திருவடிவ நினைவு உண்டாகிறது; திருவடிவ நினைவு உண்டாகும் போது, லீலைகளின் நினைவு வருகிறது; லீலைகளைப் பற்றிய நினைவு உண்டானதும் பகவானின் குணபிரபாவங் களின் அனுபூதி ஏற்படுகிறது; இவை எல்லாவற்றையும் நினைத்துப் பார்த்து ஆலோசிக்கும் போது பகவானுடைய தத்வ-ரகசியங்கள் தெரிய வருகின்றன; அதன் வாயிலாக, சிரத்தையும் பக்தியும் வளர்கின்றன; அதே நிலையில், உலகாயத சுகபோகங்களில் வைராக்கியமும் நிறைவும் ஏற்பட்டு, பகவத் தியானத்திலேயே ஆழ்ந்த நிலை ஏற்பட்டு விடுகிறது.

ஆகவே, உருவம்-அருவம், குணத்தோடு கூடியது-குணங்கள் அற்றது என்பதான வடிவங்களில், எந்தத் தோற்றத்தில் நமக்கு ஈடுபாடு உண்டாகிறதோ, அதனையே நமது இஷ்டதெய்வமாகக் கொண்டு தியானம் செய்து வரவேண்டும். பரமாத்மாவின் குணங்களற்ற, உருவமற்ற தன்மையோடு, கணக்கிலடங்காத தெய்விக குணங்களோடு கூடிய ஸகுண-ஸாகார வடிவத்தை தியானம் செய்து வருவது, மேலும் உத்தமமானது. இவ்விதம் தியானிப்பது தான், புருஷோத்தமனான பகவானின் (உலகம் முழுவதுமே பகவத் ஸ்வரூபம் - என்று அறிந்து கொள்வது) தோற்றத் தியான மாகும். இதனை சரியானபடி உணர்த்துவதற்குத் தகுந்த உபமானம், கற்பனை, உதாரணம், உபமேயம் போன்ற எதுவுமே உலகத்தில் இல்லவே இல்லை. சூரியனே இல்லாத காரிருள் சூழ்ந்த நாட்டிலுள்ளவர்களுக்கு, எந்தவித உபமானத்தைக் கூறினாலும் கூட சூரியனைப் பற்றி அறிவுறுத்த முடியாது. ஏனென்றால், சூரியனைப் போன்ற இன்னொரு வஸ்துவே இல்லை என்னும்போது, எதைக் கூறி, எப்படி அறிவுறுத்த முடியும்? அதுபோலவே, மிகவும் மாறுபட்டதான, அறிய முடியாததான பரமாத்ம ஸ்வரூபத்தை, எந்த ஒரு உதாரணத்தையும் கூறிப் புரிய வைப்பது மிகவும் கஷ்டமான செயல்.

ஆகாயத்தில், சூரிய கிரணங்களில், அடிப்படைக் காரணமான பரமாணு வடிவில், கண்களுக்குப் புலனாகாத, தெளிவாக வெளிப்படாத நிலையில் உள்ள தண்ணீர்,

தொலைநோக்கி, அல்லது, அது போன்ற எந்த ஓர் இயந்திரக் கருவியைக் கொண்டு பார்த்தாலும் கண்ணுக்குப் புலப்படாது; அதே நீர், ரஸமயமாகி ஆகாயத்தில் இருக்கும்போதும் கண்ணுக்குத் தெரிவதில்லை என்றாலும், ஆராய்ந்து பார்க்கும் போது அனுபவத்துக்கு வருகிறது. அதே நீர், மேகங்களாகி, திவலைகளாக வடிவம் தாங்கி, ஆலங்கட்டி மழையாகப் பெய்யும்போது அதை நேரடியாகக் கண்ணால் காண முடிகிறது; கைகளால் பிடிக்க முடிகிறது. இவ்விதம் வெளிப் படையாகத் தோற்றம் கொண்டுள்ள தண்ணீரை, எவ்வா றெல்லாம் தண்ணீரைப் பயன்படுத்துகிறோமோ, அவ்வா றெல்லாம் பயன்படுத்த முடியும். இந்தத் தண்ணீர் உதாரணம், உயிர்ப்புடைய பரமாத்மாவுடன் ஒப்பிட்டுப் பார்க்கத் தகுந்தது அல்ல. ஏனென்றால், தண்ணீர் என்பது ஜடப்பொருள்; அளவுக்கு உட்பட்டது; அழியக் கூடியது; சிற்சில இடங்களில் காணப்படுவது; மிகக் குறைந்தது. ஆனால், பரமாத்மாவோ, தண்ணீரிடமிருந்து எல்லா வகையிலும் வேறானது; நித்தியமானது; உயிர்ப்புடையது; மாறுதலற்றது; எல்லை யற்றது. ஆகவே, உபமானமே இல்லாத, அளவே இல்லாத பரமாத்மாவை விளக்குவதற்குத் தகுந்த உதாரண வஸ்து இல்லவே இல்லை. என்றாலும், மகாத்மாக்கள், பரமாத்மாவைப் புரிய வைப்பதற்காக, ஏதோ ஒரு உதாரணத்தைக் கூறி, முடிந்தவரையில் ஒரு மாதிரியாக, அதன் தத்துவத்தை சிறிதளவு உணர்த்துகிறார்கள்.

வெளிப்படாத (அவ்யக்த) காரண வடிவிலுள்ள, உருவமில்லாத நீர், நீர்மை என்ற வடிவினைப் பெறுவதைப் போலவே, நிர்குண-நிராகார பிரம்மம், பக்தர்களுடைய பிரேமை-உணர்வுகள் காரணமாக அறிவானந்தமயமான ஸகுண-நிராகார வடிவத்தில் வெளிப்படுகிறது. பின்னர், அதே நீர், மேகம்-மழைத்துளி என்ற வடிவங்களைக் கொண்டு, ஆலங்கட்டியாக உருவம் ஏற்பதைப் போல, திவ்ய-சின்மய-நிரதிசய-மங்களமயமான நற்குணக் கூட்டங் களின் மாபெரும் கடலான ஸகுண-நிராகார பரமாத்மா, எல்லையில்லாத பேரொளி வடிவில் வெளிப்போந்து, நித்ய-திவ்ய-ஒளித்திரளான ஸகுண-ஸாகார வடிவத்தில் வெளிப்பட்டு கண்களுக்குப் புலனாகிறது. மிகவும் பக்தியும்

சிரத்தையும் உடைய அடியார்க்கு பகவானுடைய அந்த தெய்விக வடிவ தரிசனம் கிடைக்கிறது; அந்த பக்தரின் பார்வையும் கூட தெய்விகமாகி விடுகிறது. பகவானிடம் பேரன்பு செலுத்துபவன், பகவானுடைய கருணையினால், இந்த மானுடக் கண்களைக் கொண்டே, பகவானுடைய வடிவத்தைத் தரிசிக்க முடியும். பகவானைத் தரிசித்தபின், அவன் தன்னையே மறக்கும் அளவுக்குப் பேரானந்தப் பெருவெள்ளத்தில் மூழ்கி விடுகிறான். அவனுக்கு பகவானைத் தவிர வேறு எதைப் பற்றிய சிந்தனையும் இருப்பதில்லை. அவன் தன்னையே கூட மறந்து விடுகிறான். பேரெழில் படைத்த பகவானைக் கண்டு விட்ட கண்கள் இமை கொட்டுவதில்லை. அவன் இமையாத கண்களுடனே எப்போதும் தெய்விகமான அழகு வடிவத்தைப் பார்த்துக் கொண்டேயிருக்கிறான். பின்னொரு சமயம், அவனுக்கு உணர்வு ஏற்பட்டாலும் கூட, தான் கண்டு களித்த பேரெழில் தோற்றத்தை அவனால் விளக்கிக் கூறமுடிவதில்லை; ஏனென்றால், எல்லையே காணமுடியாத, உபமானமே இல்லாத தெய்விக இயல்புகள் நிறைந்த சுவைமிக்க ரூப லாவண்யத்தை வருணிக்கும் சக்தி, சொற்களுக்குக் கிடை யாது. அப்படியிருக்கும்போது, என்னைப் போன்ற சாதாரண மனிதன், அந்த அதிலாவண்யக் காட்சியின் அற்புதத்தில் நூற்றில் ஒரு பகுதியையாவது எடுத்துக் கூற எவ்வாறு இய லும்? என்றாலும், சில அன்புச் சகோதரர்கள் விடாப்பிடியாகக் கேட்டு வருவதால் சிறிது சொல்கிறேன். இந்தத் துணிச்சலான காரியத்துக்காக, அறிஞர்கள் என்னை மன்னிப்பார்களாக.

பகவான் தன்னை வெளிப்படுத்திக் கொண்டு காட்சி தருவதற்கு முன்னதாகவே, சாதகனின் வெளிப்புறச் சூழ்நிலையிலும், சரீரத்துக்கு உள்ளே ஒவ்வோர் அணுவிலும் எல்லைகாண முடியாத அதிசயமான தெய்விகம்-உலகில் அனுபவித்தறியாத உயிர்ப்பு-திருப்தி, சாந்தி-சமத்துவம்-ஆனந்தம் முதலியன நிரம்பி விடுகின்றன. பின்னர், பரமாத்மாவின் ஸகுண-நிராகார வடிவமே, ஸகுண-ஸாகார வடிவத்தை ஏற்று அவன் கண்ணெதிரே காட்சி தருகிறது. நிரதிசய பிரேமானந்த வடிவமான பகவானுடைய இந்தத் தோற்றம், மிகவும் கவர்ச்சிகரமானது; அன்புமயமானது;

அமிர்தமயமானது; மிகவும் சுவையுடையது; மேலும், மிக மிக ஆனந்த மயமானது. மிக்க கவர்ச்சி பொருந்திய இந்தத் தோற்றத்தை, திருவடிகளிலிருந்து சிரசு வரையில் தியானம் செய்யும் பக்தன், தானும் ரஸமய-பிரேமமய-அமிர்தமய-ஆனந்தமயமாகி விடுகிறான். ஆகவே, பிரேமானந்தமயமான பகவானுடைய மூர்த்தியை தரிசிக்க வேண்டுமானால், பக்தன், தன் எதிரே வெட்டவெளியில் இனி சொல்லப் போகிறவிதத்தில் தியானம் செய்ய வேண்டும்.

தான் அமர்ந்திருக்கும் இடத்திலிருந்து ஏறத்தாழ ஒரு மீட்டர் தூரத்தில், ஆகாயத்தில், அறிவானந்தத் திரட்சியான பூர்ணபிரம்ம பரமாத்மாவின் தெய்விய உயிர்ப்பு, பேரொளி பொருந்திய ஸகுண-ஸாகார ஸ்ரீவிஷ்ணுவின் உருவத்தில் விளங்கிக் கொண்டிருப்பதாகக் கருதிக் கொள்ள வேண்டும். அவர், சௌந்தரியப் பொக்கிஷம்; தன்னுடைய எல்லையற்ற பெருமையால் எப்போதும் பெருமை குடிகொண்டிருப்பவர். அவர் நீலமணியைப் போல பசுமையோடு இருந்தாலும், மாசு மருவற்ற தெய்விச் சுடர்விடும் ஒளியின் காரணமாக, கொஞ்சம் போல நீலம் கலந்த, மிக மிகத் தூய வெண்மை யான தோற்றமுடைய எண்ணிறந்த சூரியன்களைக் காட்டிலும் மேலாக ஒளியை உமிழ்ந்து பிரகாசித்துக் கொண்டிருக்கிறார்; என்றாலும், பேரொளி படைத்த அந்தப் பிரகாசம், குளிர்ச்சிக் குவியலான சந்திரனைக் காட்டிலும் மிகவும் மனச்சாந்தியை அளிப்பதாக இருக்கிறது. அவருடைய திருஉருவம், பதினாறு ஆண்டு நிரம்பிய அழகிய அரசகுமாரனுடையதைப் போல, ஏறக்குறைய மூன்றே கால் முழ உயரமும், ஒரு முழ அகலமும் உடையதாக இருக்கிறது. அவருடைய திருப்பாதங்களின் அடிப்புறங்களில் (உள்ளங்காலில்) ரோஜா மலரின் செம்மை ஒளிர்கிறது. அத்துடன், அவற்றில், கொடி-யவம்-அங்குசம்-சங்கு-சக்கரம்-தாமரை-வஜ்ரம்-ஸ்வஸ்திகம் முதலிய சின்னங் கள் அற்புதமாக மிளிர்கின்றன. அவருடைய திருப்பாதங் களும், பாத விரல்களும் மிகவும் மினுமினுப்பாக, மிருதுவாக, வழுவழுப்பாக மிகவும் அழகாக இருக்கின்றன. விரல்களில் இணைந்துள்ள ஒளிவீசும் நிலவினைப் போன்று தண்ணொளி வீசும் நக வரிசைகளின் காந்தி ஒரு சிறப்பான தன்மையுடன்-தெய்விக ரத்தினக் கற்கள் மின்னலடிப்பதைப் போல-விளங்கு

கிறது. பகவானுடைய திவ்ய சரணங்களில் திகழும் சிலம்பு களின் ஒலி அமுதமயமாகவும் இனிமையாகவும் இருக்கிறது; அதைச் செவிமடுத்த சாதகன் அதிலேயே ஒன்றிப் போய், மந்திரத்தால் கட்டுண்டவன் போல் செயலிழந்து போகிறான். அவருடைய கோமளமான சரணங்களைத் தீண்டினால், அது விலக்ஷணமாகவும் முற்றிலும் அமுதமயமாகவும், மயிர்கூச்சத் தைத் தோற்றுவிப்பதாகவும், பேரானந்தத்தைத் தரவல்லதாக வும் இருக்கிறது. பகவான், மிக மிருதுவான பளீரிடுகிற பீதாம் பரம் அணிந்திருக்கிறார்; அதன் உள்ளிருந்து பகவானுடைய பேரொளி பொருந்திய திவ்விய சரீர காந்தி மினுமினுக்கிறது. அவருடைய கணுக்கால்கள், முழங்கால்கள், தொடைகள், ஆகியனவும் மிகவும் கோமளமாக, வழுவழுப்பாக, மினுமினுப் பாக அழகாக இருக்கின்றன. பகவான் தன்னுடைய சிறுத்தும் அழகாகவும் விளங்கும் இடுப்பில் திவ்வியமான நவரத்ன மணிகள் கோர்த்த அரைஞாண் அணிந்திருக்கிறார். பிரும்ம தேவரின் உற்பத்தி ஸ்தானமாகிய பகவானுடைய தாமரை யன்ன கொப்பூழ் ஆழமாக இருக்கிறது; வயிறு, மூன்று மடிப்புள்ளதாக கவினுறத் தோற்றமளிக்கிறது. பகவானுடைய திருமார்பு விசாலமாகவும், மிகவும் செழுமையாகவும் கவர்ச்சி யுடையதாகவும் அகன்றும் இருக்கிறது. பகவானுக்கு நான்கு திருக்கரங்கள் இருக்கின்றன-இரண்டு மேல்நோக்கி உயர்ந் துள்ளன; இரண்டு முழங்கால் வரை நீண்டு தொங்கிக் கொண்டிருக்கினறன. புஜங்கள் நீண்டு, மிருதுவாக, வழவழப் பாக, மினுமினுக்கி, செழுமையாக, பலம் பொருந்தி, உருளையாக, மேற்பகுதி பருத்தும், கீழே வரவர சிறுத்தும், மனத்தைக் கொள்ளை கொள்ளும் விதமாகவும் அமைந் துள்ளன. பகவானுடைய உள்ளங்கைகள் கொஞ்சம் போல செம்மை படர்ந்து மிக அழகாக, சங்கு-சக்கரம்-தாமரை- யவ தானியம்-அங்குசம்-கொடி-ஸ்வஸ்திகம் முதலான சின்னங் கள் பொறிக்கப்பட்டு மிக்க சோபையோடு விளங்குகின்றன. அவருடைய கை விரல் நகவரிசைகளின் ஒளி, மனத்தை இழுக்கும் வண்ணம் நவரத்தின மணிவரிசைகள் போல் திகழ்கிறது. நான்கு கைகளின் விரல்களிலும் ரத்தினக் கற்கள் பதிக்கப் பெற்ற சுவர்ண மோதிரங்களும், வளையல்களும், தோடாக்களும் அலங்காரமாக விளங்குகின்றன.

பகவானுடைய வலது கீழ்க்கையில் மிக்க ஒளிபடைத்த கௌமோதகீ என்ற கதையும், இடது கீழ்க்கையில் கவின்மிகு தாமரையும் விளங்குகின்றன. வலது மேல் கையில் தேசுமிக்க சுதர்சன சக்கரமும், இடது பக்க மேல்கையில் மிக்க சுடரொளி வீசும் வெண்மையான பாஞ்சஜன்யமும் விளங்குகின்றன. அவர், செழுமையான கழுத்தில் அற்புத ஒளிவீசுகின்ற திவ்வியமான முத்து-ரத்தின-தங்க மாலைகளை அணிந்திருக் கிறார்; மேலும், துளசி மற்றும் மண்ணுலகில் கிடைக்காத பல்வகை மலர்களின் மாலைகள் அவருடைய முழங்கால் வரை தொங்கிக் கொண்டிருக்கின்றன. மிருதுவான இளந் தளிர்கள், மலர்களால் தொடுக்கப்பட்ட மாலைகளால் மனத்தைக் கவரும் சங்கு போன்ற கழுத்து பேரழகு படைத் ததாக காணப்படுகிறது. அவருடைய திருமார்பில் ரத்தினம் கோத்த சந்திரஹாரமும் பரமதிவ்வியமான கௌஸ்துப மணியும் இளஞ்சூரியனைப் போல் ஒளிபரப்பிக் கொண் டிருக்கின்றன. மார்பின் நடுப்பாகத்தில் தூய கண்ணாடியில் முகம் பார்க்கலாம் போல் ஸ்ரீலட்சுமியின் (ஸ்ரீவத்ஸ) சின்னம் காணப்படுகிறது; அதற்கு மேலே ஸ்ரீப்ருகுலதையின் சின்னம் இருக்கிறது. பகவானுடைய திருத்தோள்கள் உயர்ந்தும், செழிப்புடனும் மிருதுவாகவும் இருக்கின்றன. தோள்களில் தங்கமயமான முப்புரியையும், மஞ்சள் நிற உத்தரீயத்தையும் அணிந்திருக்கிறார். பகவானுடைய கழுத்து நீண்டு காணப் படுகிறது; தொண்டைப் பகுதியும், முகவாய்க்கட்டையும் மிகவும் அழகாக உள்ளன. பகவானுடைய உதடுகள் கொவ்வைக் கனி, செம்மையான ரத்தினம் போல் ஒளிசிந்திக் கொண்டிருக்கின்றன. பகவான் மிகமிக அடக்கமாகப் புன்முறுவல் செய்து கொண்டிருக்கிறார். அவருடைய திருமுகம், அலர்ந்த தாமரை மலர் போல மனத்தைக் கவரும்படியாக மலர்ச்சி, அற்புத சோபை, ஒளிரும் அழகு மற்றும் உலகில் கண்டறியாத, தூயதான உல்லாசத்துடன் கூடியதாக இருக்கிறது; அவருடைய முகமண்டலத்திலிருந்து அதிசயமாகவும் தூயதாகவும் உள்ள பல்வரிசைகள், முத்துக் களின் வரிசை போன்று திவ்வியமான பொருந்தியவை யாகவும் மனத்தைச் சுண்டி இழுக்கும் வகையிலும் காட்சி தருகின்றன. பகவானுடைய குரல் மிக அழகாக, தெளிவாக,

மென்மையாக, இனிமையாக இருக்கிறபடியால், செவிகளுக்கு அமிழ்தமாக இருக்கிறது. நாசி மிகவும் கவர்ச்சிகரமாக உள்ளது. பகவானுடைய கன்னங்கள் பிரகாசமாகவும், வழவழப்பாக வும், மிருதுவாகவும், மாசுமருவற்றும் ரோஜா மலர் போன்று இளஞ்சிவப்பான ஒளிவீச்சுடனும் கூடி மிக்க காந்தியுடன் விளங்குகின்றன; அவைகள் மேல், செவிகளிலிருந்து தொங்கும் குண்டலங்களின் ஒளிச் சிதறல்கள் அழகைக் கூட்டுகின்றன. மிகவும் அழகிய, விசாலமான செவிகளில் மகரமீன் வடிவில் அமைந்த ரத்தினம் கோர்க்கப்பட்ட தங்க மயமான குண்டலம் வைகறை ஆதவனைப் போல் ஒளியைப் பொழிகிறது. பகவானுடைய கண்கள் அகலமாக, தாமரை இலை போன்று மிகவும் அழகாகவும் அகன்றும், ஒளிவீசிக் கொண்டும், மலர்ந்த தாமரை போல வெகுவாக மலர்ந்தும் ஒளிபொருந்தியும் விளங்குகின்றன. பகவான் தன்னுடைய எல்லையற்ற பிரேமை மற்றும் தயையால், என்னை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கிறார். அப்படிப் பார்ப்பது, பிரேமை-தயை-ஆனந்தம்-சாந்தி-சமத்துவம்-மெய்யறிவு முதலிய குணங்களை என்மேல் எப்போதும் வருஷித்துக் கொண்டிருப்பது போலவும், பூரண கலைகளுடன் விளங்கும் சந்திரனின் அமுதமயமான கிரணங்களால் எல்லாத் தாவரங் களிலும் அமுதமயமான ரஸம் பரிபூரணமாகப் பரவுவதைப் போலவும், பகவானுடைய நயனங்களிலிருந்து பெருகிவரும் திவ்வியமான அமுதத் தன்மைகளின் தொடர்ப் பிரவாகம் என்னுடைய மனம், புத்தி, புலன்கள் மற்றும் உடலின் ஒவ்வொரு அணுவிலும் புகுந்து பாய்ந்து வியாபித்து எல்லா இடத்தையும் நிரப்பிக் கொண்டிருப்பது போலவும், அதனால் அந்தத் தெய்விகத் தன்மைகள் என்னுள் புகுந்து ஒவ்வொரு மயிர்க் காம்பிலும் மிக ஆழமாகப் பரவி, உயிர்ப்பு-ஆனந்தம்-சாந்தி-பிரேமையின் சுவைமிக்க ரஸத்தை ஊட்டிக் கொண்டிருப்பதைப் போலவும் இருக்கிறது. ஆகா, எல்லை இல்லாத என்ன பேரானந்த அனுபவம்! நான், பகவானுடைய முழுமையான செளந்தரிய அமுதரஸப் பொக்கிஷமான முககமலத்தைப் பார்த்துப் பார்த்துப் பரவசப்பட்டுக் கொண்டிருக்கிறேன்; இமைகொட்டாமல், கண்கள் விரிய, அவருடைய திருவடிவத்தையே நோக்கிக் கொண்டிருக்

கிறேன். அவருடைய கண்களின் நடுவிலுள்ள கருவட்டம் வண்டுகளின் நிறத்தை ஒத்திருக்கிறது; புருவங்கள் நீண்டு, அகன்று, பேரழகுடன் விளங்குவதைப் பார்க்கும்போது, எல்லா ஜீவராசிகளின் பேரிலும் உள்ள பேரருளை சூசிப்பது போல் இருக்கிறது. பகவானுடைய நெற்றிப் பிரதேசம் மினுமினுப்புடனும், வழுவழுப்புடனும், மிக விசாலமாகவும், பேரொளி வீசுவதாகவும் அமைந்துள்ளது; அதில் மிக அழகாக திருநாமத்திலகம் காட்சி தருகிறது. முன்னுச்சிப் பகுதி மினுமினுப்புடனும், பட்டுப் போன்றும் கருமையான, சுருண்ட முடிவரிசையால் சோபித்துக் கொண்டிருக்கிறது; கேசத்தில் பாரிஜாதம் முதலிய தேவலோக புஷ்பங்கள் சூட்டப்பட்டுள்ளன. தலையில் நவரத்தினகசித பொன்மய மான, ஒளிமிக்க தெய்விக மகுடம் ஒளிவீசிக் கொண்டிருக் கிறது. பகவானுடைய முகாரவிந்தத்தின் நாற்புறங்களிலிருந் தும் சூரிய கிரணங்களைப் போன்ற திவ்வியப் பிரகாசம் பொருந்திய ஒளிச் சிதறல்கள் வீசிக் கொண்டிருக்கின்றன. அவருடைய தாமரைத் திருவதனம் சரத்கால பூர்ண சந்திரனைக் காட்டிலும் ஒளியும் அழகும் பொருந்தியும் வசீகரமாகவும் இருக்கிறது. பகவானுடைய திருவடிவத்திலி ருந்து மிகவும் சுவையுடைய, நறுமணம் பொருந்திய வாசம் வெளிவந்து கொண்டிருப்பது போலவும், அதனை நான் என் நாசிகளால் ஏற்று, அமுதபானம் செய்து கொண்டிருப்பது போலவும் பூரித்துப் போகிறேன். பகவானை தரிசிப்பது, அவருடன் பேசுவது, தொடுவது, சிந்திப்பது, உரையாடுவது- எல்லாமே பிரேமமயமாக, ரஸமயமாக, ஆனந்தமயமாக உள்ளது!

பகவானுடைய திருவடிவம், ஆடைகள், அணிகலன் கள், அலங்காரம், ஆயுதங்கள், மாலைகள் முதலிய அனைத்துமே திவ்விய சின்மயமானவை. பகவானுடைய திருத்தோற்றத்தின் பேரழகில் பறவைகள்-விலங்குகள் கூட மனத்தைப் பறிகொடுக்கின்றன என்றால், மனிதனைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? அவருடைய வாளிப்பான வடிவ அமைப்பையும், லாவண்யத்தையும் கண்டு காமதேவன் கூட வெட்கமடைகிறான். கோடிக்கணக்கான மன்மதர்களின் அழகுகூட, பகவானுடைய அதிசயமான பேரழகுக்கு

முன்னால், சின்னஞ்சிறு புள்ளியாகப் போய்விடுகிறது! ஒரு மந்திரவாதியின் சக்திக்குக் கட்டுப்படுவதைப் போல பகவானுடைய ரூப சௌந்தரியம், பக்தனைக் கட்டிப் போட்டு விடுகிறது. அந்தத் திருவடிவத்தின் கவர்ச்சியைக் கண்டு களித்தபின், அதனை விடவே முடியாதபடி ஈர்ப்பு உண்டாகி விடுகிறது. எல்லா உலகங்களில் உள்ள எல்லா அழகுகளும் ஒன்று சேர்ந்தாலும், பகவானுடைய பேரழகின் ஒரு துளிக்குக் கூட ஈடாகாது. அவருடைய பிரேமை நிரம்பிய அழகின் பெருமையை யாராலும் இசைக்க முடியாது. பகவானுடைய பிரேமை பொங்கி வழியும் கண்பார்வையில் பட்டு விட்டவன் அதிலேயே ஒன்றிப்போய், பகவானை ஒருபோதும் மறக்க இயலாதவனாகி விடுகிறான்; மேலும், அவன் எப்போதும் பகவானுடைய திருவடிவத்தின் இன்சுவையையே பருகிக் கொண்டிருக்கிறான். பகவானுடைய திருவடிவத்தின் இன்சுவையை நேரில் பார்த்து மயங்கும் விஷயம் ஒருபுறம் இருக்கட்டும்; கனவில் காணும் பேறு ஏற்பட்டு விட்டால் கூட மனிதன் தன் வாழ்வில் ஒருபோதும் கூட மறக்க முடியாதபடி அதில் ஆழ்ந்து போகிறான்; அது மட்டுமா? அவருடைய திருஉருவத்தை ஒரு தடவையாவது தியானத்தின்போது தரிசனம் செய்துவிட்டால், அவனால் ஒருபோதும் மறக்க முடியாத அளவுக்கு அதனிடம் ஆச்சரியமான வசீகரம் இருக்கிறது; அதைக் கண்டு களித்தும் திருப்தி அடையாமல் தன்னைத் தானே மறந்து விடுகிறான்; அவருடைய தெய்விக குணங்களை எண்ணி எண்ணி ஆனந்தத்தில் மூழ்குகிறான்.

பகவானிடம் எல்லையற்றதும் மிகவும் மாறுபட்டது மான சௌம்யம், சாந்தி, பிரேமை, நல்லிதயம், இன்சுவை, எழில், கவர்ச்சி, அழகு, மனத்தைக் கொள்ளை கொள்ளும் தன்மை, எப்போதும் புதுமை, விசால மனம், வீரம், அகங்கார மின்மை, விரோதமின்மை, அடியார்களிடம் பேரன்பு, பிரேமைக்கு வசப்படுதல், கீழோரையும் புனிதப்படுத்தும் இயல்பு, எல்லாவற்றையும் மங்களமாகச் செய்தல், சச்சிதானந்த வடிவுடைமை, எல்லோராலும் வழிபடப்படும் மேன்மை, நன்றி மறவாமை, தாராளமாக வழங்கும் வண்மை, அறநெறி ஒழுக்கம், எல்லாவற்றைக் காட்டிலும் உன்னதம், தத்துவ ஞானம், அறிவாற்றல், பேச்சாற்றல், அறநூல் புலமை,

அனைத்து மொழிகளையும் அறியும் தன்மை, அன்பு மீதூரப் பேசுதல், தாராள மனம், செயல் திறமை, எல்லோருடைய மனத்தையும் கவர்ந்திழுக்கும் இனிய சொல்லாற்றல், அடைக்கலம் புகுந்தோரைக் காப்பாற்றுதல், மேலோர்களைக் காப்பாற்றுதல், பக்தர்களிடம் இனிய நட்புறவு, நீதி உறுதி யான சங்கல்பம், பேரறிவு, மேதாவிலாசம், பேரானந்தம், மேலான துணை, அனைத்து சித்திகளையும் பெற்றிருத்தல், செழிப்பு, எங்கும் நிறைந்திருத்தல், அசாதாரணமான அற்புதமான சோபை, அனைவரையும் ஈர்த்தல் மற்றும் அற்புதமாகப் பிரமிக்க வைக்கும் தன்மை முதலிய தெய்விக குணங்கள் உள்ளன. இவற்றைத் தவிர, பாகவதத்தில் சத்தியம், புனிதம், தயை, மன்னிக்கும் இயல்பு முதலிய பற்பல குணங்களைப் பற்றிய விவரமும் இருக்கிறது. பூமாதேவியானவள், தருமதேவதையிடம் கூறுகிறாள்:

ஸத்யம் ஶௌசம் த$_3$யா க்ஷாந்திஸ்த்யாக$_3$: ஸந்தோஷ ஆர்ஜவம் ।
ஶமோ த$_3$மஸ்தப: ஸாம்யம் திதிக்ஷோபரதி: ஶ்ருதம் ॥

க்ஞாநம் விரக்திரைஶ்வர்யம் ஶௌர்யம் தேஜோ ப$_3$லம் ஸ்ம்ருதி: ।
ஸ்வாதந்த்ர்யம் கௌஶலம் காந்திர்தை$_4$ர்யம் மார்த$_3$வமேவ ச ॥

ப்ராக$_3$ல்ப்$_4$யம் ப்ரஶ்ரய: ஶீலம் ஸஹ ஓஜோ ப$_3$லம் ப$_4$க: ।
கா$_3$ம்பீ$_4$ர்யம் ஸ்த்$_2$தைர்ய மாஸ்திக்யம் கீர்த்திர்மாநோऽநஹங்க்ருதி: ॥

ஏதே சாந்யே ச ப$_4$கவந் நித்யா யத்ர மஹாகு$_3$ணா: ।
ப்ரார்த்$_2$யா மஹத்த்வமிச்ச$_2$த்பி$_4$ர்ந வியந்தி ஸ்ம கர்ஹிசித் ॥

*(ஸ்ரீமத் பாகவதம் : 1-16-26 முதல் 29 வரை)*

*('பகவன்! பரமேஸ்வரரான அந்தப் பகவானிடம் சத்தியம், புனிதம், தயை, மன்னிப்பு, தியாகம், மனநிறைவு, எளிமை, மனஅடக்கம், புலனடக்கம், தவம், சமத்வம், பொறுத்துக் கொள்ளுதல், மேலான மனஅமைதி, அறநூல் அறிவு, ஞானம், வைராக்கியம், ஐஸ்வர்யம், வீரம், தேஜஸ், ஆற்றல், நினைவாற்றல், சுதந்திரம், செயல்திறன், காந்தி, தைரியம், கோமளம், அச்சமின்மை, அடக்கம், நல்லொழுக்கம், துணிச் சல், உற்சாகம், மனவலிமை, மங்களம், நிமிர்ந்து நிற்றல், உறுதி, எப்போதும் நிலைத்திருத்தல், புகழ், கௌரவம் மற்றும் அகம்பாவமின்மை-ஆகிய முப்பத்தொன்பது அப்ராகிருத*

*இயல்புகளும், மேலும் பெரிய பெரிய மகான்களால் விரும்பப் படும் இன்னும் பல குணங்களும் அவருக்குப் பணி செய்வ தற்காக அவருடனேயே இருந்து வருகின்றன; அவைகள் ஒரு விநாடி நேரம் கூட அவரிடமிருந்து விலகிப் போவதில்லை'.)*

சாஸ்திர நூல்களில், பகவானுடைய இன்னும் பல குணங்கள் கூட கூறப்பட்டிருக்கின்றன; ஆனால், குணங்கள் கணக்கிட முடியாத அளவுக்கு இருப்பதால், அவை எல்லா வற்றையும் இங்கே விவரிக்க முடியவில்லை. இயற்கைக்கு மாறுபட்டதான (அப்ராக்ருத) இவையெல்லாம் பகவானிடம் அதிக அளவிலும் முழுமையாகவும் விளங்குகின்றன. எல்லா உலகங்களிலும் உள்ள பிராணிகளின் இதயத்தில் இருக்கும் தயையையும் பிரேமையையும் ஒன்றாகத் திரட்டி வைத்தால் கூட பகவானுடைய எல்லையற்ற, அளவிட முடியாத தயை-பிரேமை சங்கமக் கடலின் ஒரு திவலைக்குக்கூட சமமாகாது. அதுபோலவே, எண்ணில்லாத பிரம்மாண்டங்களின் எல்லா குணக் கூட்டங்களையும் ஒன்றாக்கினாலும், குணப் பெருங் கடலான பகவானின் ஒரு துளிக்குக் கூட ஈடாகாது; ஏனென்றால், எண்ணித் தொலையாத பிரம்மாண்டங்கள், பரமாத்மாவின் சங்கல்பத்தின் ஏதோ ஒரு சிறுபாகத்தில் நின்று நிலவுகின்றன. திவ்விய சின்மயமான பரமாத்மாவின் நிர்குண-நிராகார வடிவமே, ஸகுண-நிராகார வடிவமாக மாறுகிறது; ஆகவே, இந்த குணங்கள் எல்லாமே திவ்விய மானவை; சின்மயமானவை. இத்தகைய திவ்ய-சின்மய குணங்களின் ஒரு சிறு பகுதியின் நிழலுருவம் தான் அனைத்துப் பிரம்மாண்டங்களின் எல்லையற்ற குண வடிவில் ஒளிவீசிக் கொண்டிருக்கிறது. ஆகவே, உலகிலுள்ள எல்லா குணங்களும் ஒன்று சேர்ந்தாலும், பரமாத்மாவின் குணங்களின் ஒரு திவலைக்குக் கூட சமமாகாது.

ஸகுண-ஸாகார வடிவம், இரண்டு வகையானது-ஒன்று, மாயையோடு கூடியது; மற்றது, மாயையைக் கடந்தது. மாயையைக் கடந்த வடிவத்தில் சத்வ-ரஜஸ்-தமஸ் ஆகிய மூன்று குணங்களும் முற்றிலும் இருக்கவே மாட்டா; ஆகவே, அந்தப் பரமாத்மாவின் குணங்கள், ஸ்வரூபம், பிரபாவம் முதலிய எல்லாமே சின்மயமானவை; ஆனால், உலகில் அவதாரம் எடுத்து எல்லோர் பார்வையிலும் படுகிறதே, அது

மாயையோடு கூடிய பகவானுடைய உருவம். *மாயையைக் கடந்த உண்மையான வடிவம் எல்லோருக்கும் காணப்படு வதில்லை. ஏனென்றால், அவரைக் கட்டுப்படுத்தக்கூடிய எவருமே இல்லாததால், பகவான் தன்மேல் மாயை என்னும் போர்வையை போர்த்திக் கொள்கிறார். கீதையில் பகவான் கூறுகிறார்-

நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய யோக₃மாயா ஸமாவ்ருத:।
மூடோ₄ऽயம் நாபி₄ஜாநாதி லோகோ மாமஜமவ்யயம்॥

(7/25)

('நான் என்னுடைய யோகமாயையில் ஒளிந்து கொள் வதால், எல்லோருக்கும் புலப்படுபவனாக இல்லை. அதனால், அக்ஞானம் நிறைந்த மனிதக்கூட்டம், பிறப்பும் அழிவும் இல்லாத என்னை அறிந்து கொள்வதில்லை; அதாவது, என்னைப் பிறப்பும் இறப்பும் உடையவனாகவே எண்ணுகிறது'.)

ஆனால், பகவானுடைய தத்வ-ரகசியங்களை அறிந்து கொண்டுள்ள பக்தனுக்கு, அவர் தன்னுடைய திரையை விலக்கிக் கொண்டு உண்மையான, மாயை கடந்த சொரூபத்தைக் காட்டுகிறார். அதைக் கண்டவுடன் மனிதன், வாழ்க்கையில் தான் செய்யவேண்டிய எல்லாவற்றையும் செய்து முடித்து விட்டவனாக ஆகிவிடுகிறான்.

உண்மையில், பரமாத்மாவானவர், தெய்வங்களுக்கெல் லாம் ஈசனாகவும், பிறப்பற்றவராகவும், அழிவற்றவராகவும்

---

* *கீதையில் பகவான் சொல்கிறார் -*

*அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூ₄தாநாமீஶ்வரோऽபி ஸந்।*
*ப்ரக்ருதிம் ஸ்வாமதி₄ஷ்ட₂ாய ஸம்ப₄வாம்யாத்மமாயயா॥*

*(4/6)*

*(நான் பிறப்பில்லாதவன், அழிவில்லாதவன் என்ற போதிலும், அதேபோல எல்லாப் பிராணிகளுக்கும் ஈசனாக இருந்தபோதிலும், என்னுடைய பிரகிருதியை கட்டுப்படுத்தி, என்னுடைய யோக மாயையால் வெளிப்படுகிறேன்.)*

இருக்கிறார்; அவருக்குப் பிறப்பும், இறப்பும் இல்லை. அவர், உலக நலனை முன்னிட்டுத் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறார்; மறைத்துக் கொள்கிறார்-அதாவது, அவருடைய ஆவிர்பாவமும் திரோபாவமும் ஏற்படுகிறது என்றும் கூறலாம். பரமாத்மாவின் பிறப்பில், மேலே சொல்லப்பட்ட தெய்விகத் தன்மைகளையும் உலக இயற்கைக்கு மேம்பட்ட தன்மை யையும் எவன் உண்மையாகத் தெரிந்து கொள்கிறானோ, அவன் பரமாத்மாவையே அடைந்து விடுகிறான் (கீதை 4/9).

பகவானுடைய பிரபாவமும் உவமையற்றதாகவும் இயற்கைக்கு மேம்பட்டதாகவும் இருக்கிறது. முழுமையான பலம், ஐசுவரியம், தேஜஸ், ஆற்றல், பராக்கிரமம், பிரதாபம், செயல் நுண்ணறிவு, வளமை, மேன்மை, காந்தி, அனைத் தையும் அறியும் அறிவு, எல்லாவற்றுக்கும் காரணமாக இருக்கும் இயல்பு, எல்லாவற்றுக்கும் ஆதாரமாக இருக்கும் தன்மை, எல்லாவிடத்திலும் பரவியிருத்தல், எல்லாவற்றை யும் கட்டுப்பாட்டில் வைத்திருத்தல், அனைத்துக்கும் ஈசனாக இருத்தல், எல்லார் இதயத்திலும் அந்தர்யாமியாக விளங்குதல் முதலிய எண்ணிறந்த, எல்லையில்லாத சிறப்புத் தன்மை கொண்டது பகவானுடைய பிரபாவம் ஆகும். சூரியோதயம் ஆனவுடன், இருளானது முற்றிலுமாக மறைந்து விடுவதைப் போல, பகவானுடைய ஸ்வரூப சிந்தனை மற்றும் தியானத் தின் பிரபாவத்தினால் எல்லா துர்குணங்கள், துர்நடத்தை, தீயபொருட்களில் நாட்டம், சோம்பல், தவறுதல் முதலிய எல்லா மனோவிகாரங்களும் துக்க-துயரங்களும் மறைந்தே போய்விடுகின்றன; பின்னர், மனிதன் நற்குணம்- நல்லொ ழுக்கம் நிரம்பியவனாகி, பிறப்பு-இறப்பு என்னும் உலகவாழ் வாகிற பெருங்கடலைக் கடந்து எளிதாகவே பரமாத்மாவை அடைந்துவிடுகிறான். பரமாத்மா தானே எல்லையற்றவராக் வும், உவமையற்றவராகவும், சின்மயராகவும் இருக்கும் காரணத்தால், அவருடைய பிரபாவமும், சின்மயமாகவும், எல்லையற்றதாகவும் உவமையற்றதாகவும் இருக்கிறது. அவருடைய சங்கல்பத்தினாலேயே எண்ணித் தொலையாத பிரம்மாண்டங்கள் வெகு எளிதாகத் தோன்றி, நிலைநின்று மறைந்து போகின்றன; அவருடைய நொடிநேர அருட்பார் வையால் லட்ச-கோடிக்கணக்கான பிராணிகள் மேன்மை

அடைய இயலும்; நிகழமுடியாதவைகளை நிகழ்த்திக் காட்டவும், நிகழக் கூடியவைகளை நிழாதவாறு செய்யும் ஆற்றலுமுடையவர்; ஜடப் பொருளில் சேதனத்தையும் சேதனப் பொருளில் ஜடத்தன்மையையும் செலுத்த வல்லவர்; ஒரு கொசுவை நான்முகப் பிரம்மாவாகவும், பிரும்மாவைக் கொசுவாகவும் மாற்ற வல்லவர்-இப்படிப் பட்ட, நினைத்துப் பார்க்க முடியாத எல்லையில்லாத பிரபாவகாரியான பரமாத்மாவின் பிரபாவத்தின் பெருமைகளை முழுமையாக வருணிப்பது நடைபெறமுடியாத காரியம். எல்லாப் பிரம்மாண்டங்களிலும் உள்ள செழுமை, பலம், ஐசுவரியம் முதலிய பிரபாவம் மிக்க பொருட்களை ஒன்று சேர்த்தாலும், பகவானுடைய பிரபாவத்தின் ஒரு துகளின் ஒரு தோற்றமே; ஏனென்றால், எல்லாப் பிரம்மாண்டமும் ஒன்று சேர்ந்து பகவானுடைய சங்கல்பத்தின் ஒரு பகுதியில் நிலைத்து நிற்கின்றன. *பகவானுடைய தத்வ-ரகசியத்தை அறிந்து கொள்ளும் மனிதன், அந்த விநாடியிலேயே அவரை அடைந்து விடுகிறான்.

ஆகவே, பகவானுடைய தத்வ-ரகசியங்களை அறிந்து கொள்வதற்காக, குண-பிரபாவங்களோடு கூடிய அவருடைய உருவத்தை, நிஷ்காம பாவத்துடன், சிரத்தை-பிரேமையுடன், நித்திய நிரந்தரமாகத் தியானம் செய்து வரவேண்டும்.

உலகில் பேராண்மை படைத்த, அதாவது செழுமை-பிரகாசம்-ஆற்றல் படைத்த பொருட்கள் எவை எவை உள்ளனவோ, அவையெல்லாம் என்னுடைய தேஜஸின் ஒரு பகுதியின் வெளிப்பாடு என்று அறிந்து கொள். ஆனால், அர்ஜுனா! இவ்வாறு விரிவாகத் தெரிந்து கொள்வதால் என்ன ஆகப்போகிறது? (இதை மட்டும் தெரிந்து கொண்டாலே

---

* *கீதையில் பகவான் கூறியிருக்கிறார் -*

*யத்$_3$ யத்$_3$விபூ$_4$திமத்ஸத்த்வம் ஸ்ரீமதூ$_3$ர்ஜித$_3$மேவ வா ।*
*தத்ததே$_3$வாவக$_3$ச்ச$_2$ த்வம் மம தேஜோம்ऽஶஸம்ப$_4$வம் ॥*

*அத$_2$வா ப$_3$ஹுநைதேந கிம் ஜ்ஞாதேந தவார்ஜுந ।*
*விஷ்டப்$_4$யாஹமித$_3$ம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்$_2$திதோ ஜக$_3$த் ॥*
(10-41, 42)

போதும்) இவ்வுலகம் முழுவதையும் என்னுடைய யோக சக்தியின் ஒரு பகுதியினால் நான் தாங்கிக் கொண்டிருக்கிறேன்.

## 5. நாமஜபத்தின் மகிமை

இந்த மனிதப் பிறவியின் லட்சியம் பகவானை அடைவது தான். பகவானிடம் பக்தி உண்டானால் பகவானை அடையலாம்-என்று, கீதை, ராமாயணம், பாகவதம் முதலிய நூல்களில் பற்பல இடங்களில் கூறப்பட்டிருக்கிறது. கீதையில், பகவான் ஸ்ரீகிருஷ்ணன் கூறுகிறார் -

ப$_4$க்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதே$_4$ாऽர்ஜுந ।
ஜ்ஞாதும் த்$_3$ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥
*(11/54)*

*(அர்ஜுனா! ஒன்றிய பக்தியின் மூலம், என்னுடைய இந்தத் தோற்றத்தைக் கண்களால் நேரில் காணமுடியும்; உண்மையாக அறிய முடியும்; என்னுள் புக முடியும்-அதாவது, என்னுடன் ஐக்கியமாகி விட முடியும்.)*

ஸ்ரீமத் பாகவதத்தில் ஸ்ரீகபில தேவர் கூறுகிறார் -

வாஸுதே$_3$வ ப$_4$கவதி ப$_4$க்தியோக: ப்ரயோஜித: ।
ஜநயத்யாஶு வைராக்$_3$யம் ஜ்ஞாநம் யத்$_3$ ப்$_3$ரஹ்மத$_3$ர்சநம் ॥
*(3-32-23)*

*(பகவான் வாசுதேவனைக் குறித்து செய்யப்படும் பக்தியோகம், விரைவிலேயே, உலகவாழ்க்கையில் வைராக்கியத்தையும் பிரம்ம சாட்சாத்காரம் என்ற மெய்யறிவையும் கூட்டி வைக்கிறது.)*

இது மட்டுமல்ல; பகவான் தானே பக்தரான உத்தவரிடம் கூறியிருக்கிறார் -

ந ஸாத$_4$யதி மாம் யோகே$_3$ா ந ஸாங்க்$_2$யம் த$_4$ர்ம உத்$_3$த$_4$வ ।
ந ஸ்வாத்$_4$யாயஸ் தபஸ்த்யாகே$_3$ா யத$_2$ா ப$_4$க்திர்மமோர்ஜிதா ॥
ப$_4$க்த்யாஹமேகயா க்$_3$ராஹ்ய: ஶ்ரத்$_3$த$_4$யாऽऽத்மா ப்ரிய: ஸதாம் ।
ப$_4$க்தி: புநாதி மந்நிஷ்ட$_2$ா ஶ்வபாகாநபி ஸம்ப$_4$வாத் ॥
*(ஸ்ரீமத் பாகவதம் : 11-14-20,21)*

*(உத்தவரே! யோக-சாதனை, ஜ்ஞான-விஜ்ஞானம் தர்மானுஷ்டானம், ஜப-பாராயணம், தவம்-தியாகம்-இவை யெல்லாம் என்னை அடைவிப்பதில் அத்தனை சாமர்த்தியம் உடையவை அல்ல. நாளுக்கு நாள் பெருகிவரும் ஒன்றிய பக்திக்குத் தான் அந்த வல்லமை உண்டு. நல்லோர்களின் மிகவும் அன்புக்குரிய ஆத்மா, நான்; ஒரே லட்சியத்தோடு, ஒன்றிய சிரத்தை-பக்தியினால் அடையத் தக்கவன், நான். சண்டாளர்களாகவே பிறந்தவர்களையும் கூட, என்னிடம் ஒன்றிய பக்தி, புனிதப்படுத்தி விடுகிறது.)*

புலனுகர் போகப் பொருட்களையே மனம் சிந்தித்து வந்தால், அப்பொருட்களின் மேல் பற்று ஏற்பட்டுவிடு வதைப் போல, பகவானைப் பற்றியே சிந்தித்து வந்தால் பகவானிடம் பேரன்பு தோன்றி விடும். பகவானிடம் ஒன்றிய, தூய அன்பு ஏற்பட்டு விட்டால், பகவானுடைய திருவடித் தியானமும் பகவானுடைய திருநாமஜபமும் தாமாகவே நிகழ்ந்து கொண்டிருக்கும். பின், அவன், பகவானை மறக்கவே முடியாது. கோபிகைகளுக்குப் பகவானிடம் ஒன்றிய பிரேமை இருந்தது; அதனால், அவர்கள் பகவானை ஒருபோதும் மறக்காமல் இருந்தார்கள். ஸ்ரீமத் பாகவதத்தில் -

யா தே$_3$ாஹநேऽவஹநநே மத$_2$நோபலேப
ப்ரேங்க்$_2$கேங்க்க$_2$நார்ப$_4$ருதி$_3$தோக்ஷண மார்ஜநாதெ$_3$ள।
க$_3$ாயந்தி சைநமனுரக்த தி$_4$யோऽஶ்ருகண்ட்$_2$யோ
த$_4$ந்யா வ்ரஜஸ்த்ரிய உருக்ரமசித்தயாநா:॥
*(10-44-15)*

*(பசுவைக் கறக்கும் போதும், தானியங்களைப் புடைக்கும் போதும், தயிர் கடையும் போதும், முற்றத்தைக் கழுவும் போதும், குழந்தைகளைத் தூளியில் போட்டு ஆட்டும் போதும், அழும் குழந்தைகளை சமாதானப் படுத்தும் போதும், வீட்டில் தண்ணீர் தெளிக்கும் போதும், துடைப்பத்தால் பெருக்கும் போதும், உள்ளத்தில் அன்பு நிறைந்திருந்ததால் கண்களில் நீர் பெருக, குரல் தழதழக்க, வாயினால் ஸ்ரீகிருஷ்ணனின் நாமத்தையும் குணங்களையும் இசைத்த வண்ணம் இருந்தார் களே!-ஸ்ரீகிருஷ்ணனிடமே சித்தத்தைப் பறிகொடுத்த அந்த வ்ரஜமங்கைகள் மிகவும் புண்ணியசாலிகள்!)*

ஸ்ரீதுளசீதாசர், தன்னுடைய நூல்களில் ராமநாமத்தின் தனிச் சிறப்பைக் கூறியிருக்கிறார். அது போலவே, வேத-யோகதர்சன நூல்களில் ஓம் என்ற பிரணவம்; பாகவதம் போன்ற நூல்களில், 'கிருஷ்ண'; சிவ புராணங்களில், 'சிவ'; விஷ்ணுபுராணங்களில், 'விஷ்ணு, ஹரி'; கீதையில் 'ஓம், தத், ஸத்'; குரானில் 'அல்லாஹ், குதா'; பைபிளில் 'காட்'; ஜைன நூல்களில் 'அர்ஹந்த், ஓம்'; ஆரிய சமாஜ நூல்களில் 'ஓம்'- இப்படி விசேஷமான பெருமை கூறப்பட்டிருக்கிறது. இப்படியே வெவ்வேறான மற்றெல்லா சம்பிரதாயப் பெரியோர்கள் தத்தம் இஷ்ட தேவதையின் சிறப்பான பெருமைகளை எடுத்துக் கூறியிருக்கிறார்கள். ஆகவே, ராம-கிருஷ்ண-கோவிந்த-வாசுதேவ-ஹரி-விஷ்ணு-சிவ-ஓம்-தத்-ஸத்-அல்லாஹ்-குதா-காட் முதலிய பரமாத்மாவைக் குறிக்கிற எந்த ஒரு பெயரில் ஒருவனுக்கு ருசி, சிரத்தை, நம்பிக்கை ஏற்படுகிறதோ, அதுவே அவனைப் பொறுத்தவரையில் மேலானது. ஆகவே, அந்தப் பெயரையே சிரத்தை அன்பு-நிஷ்காமத்தோடு ஒரே சிந்தனையாய் அவன் ஜபம் செய்து வருவது நல்லது.

வாயினால் இறைந்து சத்தம் போட்டுக் கொண்டு செய்யப்படும் ஜபம், வாசிகம் ஆகும்; இதைக் காட்டிலும் உபாம்சு ஜபம் சிறந்தது. இந்த ஜபத்தில், பிறர் செவிகளில் விழாவண்ணம், உதடு-நாக்கு மட்டும் அசைந்து மிக மெல்லிய குரலில் ஜபம் செய்யப்படுகிறது; ஆனால், இதைக் காட்டிலும் மானஸ ஜபம் உயர்ந்தது.

ஸ்ம்ருதி எழுதிய மனு, வேள்வியைக் காட்டிலும் நாமஜபம் மிகவும் மகிமை வாய்ந்தது என்று கூறியிருக்கிறார்.

விதி$_4$யஜ்ஞாத் ஜபயஜ்ஞோ விசிஷ்டோ த$_3$ஶபி$_4$ர்குணை:।
உபாம்ஶு: ஸ்யாச்ச$_2$தகு$_3$ண: ஸாஹஸ்ரோ மாநஸ: ஸ்ம்ருத:॥

*(மனு-2/85)*

*(வேதங்களில் கூறப்பட்டுள்ள அக்னிஹோத்ரம் முதலிய யஜ்ஞங்களைக் காட்டிலும், வாய்விட்டு மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு செய்யப்படும் ஜபயஜ்ஞம், பத்து மடங்கு உயர்வானது; பிறர் செவியில் விழாதபடி உதட்டசைவுடன் செய்யப்படுவது, (உபாம்சுஜபம்) நூறு*

*மடங்கு உயர்வானது; மனத்தால் செய்யப்படுவது (மானஸ ஜபம்) ஆயிரம் மடங்கு உயர்வானது.)*

கீதையில், பகவான், யஜ்ஞம் என்ற பெயரில் பல சாதனை களைக் கூறியிருக்கிறார்; அவற்றில், ஜபயஜ்ஞத்தைத் தன்னுடைய வடிவம் (அதாவது, சாதகனால் அடையத்தக்க லட்சியம்) என்று சொல்லியிருக்கிறார். 'யஜ்ஞானம் ஜபயஜ்ஞோऽஸ்மி' -'வேள்விகளுள் நான் ஜப வேள்வியாக இருக்கிறேன்'.

மனத்திற்குள் - மனம் தோய - செய்யப்படும் ஜபம், மானஸ ஜபம் எனப்படும். மானஸ ஜபத்திலும் பல வகைகள் இருக்கின்றன. அவையாவன -

1) மனிதனுக்கு எதனிடம் அதிகமான அன்பு ஏற்பட்டு விட்டதோ, அந்தப் பொருளைப் பற்றி நினைவுபடுத்தப் படாமலே, அது அவனுக்கு நினைவு வந்துவிடுகிறது; அவன், அதை மறக்க விரும்பினாலும், அது மறந்து போவதில்லை. இவ்வாறு, பகவானுடைய நாமத்தின் நினைவு பலவந்தமாக மனத்திற்குள் புகுந்து எப்போதும் இருந்து வரும் நிலை-இது, எல்லாவற்றைக் காட்டிலும் உயர்ந்த மானஸ ஜபம்.

2) பகவானுடைய ஸ்வரூபம், குணம், பிரபாவம், சரித்திரம், லீலை முதலியவற்றின் நினைவு, மனத்தில் அவ்வப்போது ஏற்படுவதுபோல, பகவானுடைய நாமம் மனத்தில் அடிக்கடி நினைவுக்கு வருகிற நிலை- இதுவும் மானஸ ஜபம் தான்.

3) சுவரில் எழுதப்பட்டுள்ள எழுத்துக்களைப் போல பகவானுடைய நெற்றியில் பகவானுடைய பெயர் எழுதப் பட்டிருக்கிறது என்று எண்ணி, மனத்துக்குள்ளேயே, அதை அடிக்கடி படிப்பது-இதுவும் மானஸ ஜபம் தான்.

4) இருதயம், கழுத்து, புருவம் முதலிய இடங்களில் நாடித் துடிப்புடன் நாமஜப பாவனையும் செய்து வந்தால், அதன் மூலமும் நாமஜபம் நடந்து கொண்டிருக்கிறது என்ற தோற்றம் ஏற்படும்; அதை மனத்திற்குள் அடிக்கடி அனுபவித்துப் பார்ப்பது-இதுவும் மானஸ ஜபம் தான்.

5) இரவில் தூங்கும்போது இயற்கையாகவே, செவிகளில் ஒரு வகையான ஒலி கேட்டுக் கொண்டேயிருக்கிறது; அதில்,

சிறு சொற்களான ராம, சிவ, ஓம் என்ற பகவந் நாமத்தைக் கலந்து விட்டால், அந்த நாமம் தானாகவே கேட்டுக் கொண்டிருக் கும். இதுவே உறுதியாகப் பயிலப்பட்டு விட்டால், பின்னர், சுற்றும் போதும் நடக்கும் போதும் எழுகிற போதும் உட்காரும் போதும், விழித்திருக்கும் போதும் உறங்கும் போதும் கூட மனத்திற்குள் அந்த நாமம் கேட்டுக் கொண்டே இருக்கும்- இதுவும் கூட ஒரு வகையான மானஸ ஜபம் ஆகும்.

இவைகளைத் தவிர, நாக்கையும் உதடுகளையும் மூடிக்கொண்டு, உள்மூச்சு-வெளிமூச்சு வழியாக நாமஜபம் செய்யும் முறையைப் பயின்றுவிட்டால், நாளடைவில், நாமத்தின் உச்சாரணம் தொண்டையிலிருந்து இயல்பாகவே நடக்கத் தொடங்கி விடுகிறது. இப்படி மூச்சினால் செய்யப்படும் ஜபம், உபாம்சு ஜபத்தைக் காட்டிலும் மேலானது; ஏனென்றால், இது, மரணம் ஏற்படும் காலம் வரையிலும், பேச்சும் நாடி ஓட்டமும் அடைபட்டுப் போனாலும், நடந்து கொண்டேயிருக்கும். ஆனால், இத்துடன் மனத்தையும் சேர்த்துக் கொண்டால், இந்த வகை ஜபமும் மானஸ ஜப வகையில் ஏற்கப்படும்.

பகவானுடைய திருநாமஜபம் செய்யும்போது, அந்த நாமத்துக்குரிய பகவானின் நினைவும் இருந்து கொண்டிருந் தால், அந்த ஜபம் மிகவும் மதிப்புள்ளது; க்ஷேமத்தைத் தரவல்லது. 'யோகதர்சன்' என்னும் நூலில் சொல்லப் பட்டிருக்கிறது -

தஸ்ய வாசக: ப்ரணவ: ॥

(1-27)

*(அந்த ஈசுவரனைக் குறிக்கும் சொல் (நாமம்) பிரணவம் (ஓங்காரம்)*

தஜ்ஜபஸ்தத$_3$ர்த்த$_2$ ப$_4$ாவநம் ॥

*(ஓங்கார ஜபமும், அதன் பொருள் வடிவான பரமேசுவர தியானமும் செய்ய வேண்டும்.)*

தத: ப்ரத்யக்சேதநாதி$_4$க$_3$மோऽப்யந்தராயாப$_4$ாவஶ்ச ॥

*(இந்த சாதனை செய்து வரும்போது, இடையூறுகள் விலகுகின்றன; பரமாத்ம ஸ்வரூபம் அடையப்படுகிறது.)*

கீதையில் பகவானும் சொல்கிறார் -

ஓமித்யேகாக்ஷரம் ப்₃ரஹ்ம வ்யாஹரந்மாமனுஸ்மரந்।
ய: ப்ரயாதி த்யஜந்தே₃ஹம் ஸ யாதி பரமாம் க₃திம்॥

*(ஓம் என்ற ஓரெழுத்து வடிவான பிரம்மத்தை உச்சரித்துக் கொண்டு, அதன் பொருள்வடிவான நிர்குண பிரம்மமான என்னை சிந்தித்தவாறே உடலைத் துறப்பவன், மேலான கதியை அடைந்து விடுகிறான்.)*

மிகவும் அன்பு-விசுவாஸத்தோடு நாமஜபம் செய்யப்படு மானால், அதன் மகிமையை யாராலும் சொல்லி மாளாது; ஏனென்றால், அன்பு-விசுவாஸம் ஏற்பட்டு விட்டால், ஜபம் இடைவிடாது தனக்குத் தானாகவே நடந்து கொண்டிருக்கும். அத்துடன், எவ்விதமான ஆசையையும் வைத்துக் கொண்டி ராமல், சுயநல எண்ணம் இல்லாமல், 'இது என் கடமை' என்று எண்ணி நாமஜபம் செய்யப்படுமானால், அதற்கு நிகரான சாதனை வேறு எதுவும் இல்லை. இம்மாதிரி நாமஜபம் செய்யும் சாதகனுக்கு வெகு விரைவில் பகவானின் தரிசனம் கிடைத்து விடுகிறது. நிஷ்காமபாவம் (பலனில் பற்றில்லாமை) ஏற்பட்டால் தான், மிக உயர்தரமான தூய அன்பு உண்டாகும். இதனையே, ஒன்றிய, தூய ஆழமான அன்பு என்கிறார்கள். இந்த நிலையை அடைந்து விட்டால், பகவானை நேரடியாகக் காண்பதில் ஒரு விநாடி கூட கால தாமதம் ஆவதில்லை.

ஆனால், அப்படிப்பட்ட உண்மையான பிரேமையில் வெறும் பகட்டு ஒருபோதும் இருக்காது என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். உண்மையான அன்பன், 'நான் அன்பன்' என்று சொல்லவோ, சொல்லப்படவோ மாட்டான்; ஆனால், அவன் தானாக அப்படியே ஆகிவிடுகிறான். 'நான் பக்தன்' என்று உலகத்தில் விளம்பரப்படுத்திக் கொள்பவன், உண்மையில் தூய பக்தன் அல்லன்; ஏனென்றால், மாலை-மரியாதை, பொருள்-பெண்டிர், சுகம்-இன்பம் ஆகியவற்றை விரும்பும் மனிதன் தான் பகட்டுக்காக பக்தி செய்து வருவான். ஆனால், இப்படி ஓர் ஆசையை உள்ளே வைத்துக் கொண்டு பக்தி செலுத்துவது கூட, பக்தி செலுத்தாமலே இருப்பதைக் காட்டிலும், மேலானது; ஏனென்றால், மனத்தில் ஆசையோடு பக்தி செலுத்துபவன் (நாளடைவில்) ஆசையைத் துறந்து

நிஷ்காம பக்தனாக ஆகலாம். நிஷ்காமமான, ஒன்றிய பிரேமை ஏற்பட்ட பின்னர் தான், அவனுக்குத் தரிசனம் கொடுக்க வேண்டிய கடமை பகவானுக்கு ஏற்படும்-என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். நிஷ்காம பிரேமை ஏற்படாமல், ஒன்றிய பக்தியாலேயே மகிழ்ந்து பகவான் தரிசனம் கொடுத்தார்-என்றால், இது அவருடைய சிறப்பான கொடைத் தன்மை ஆகும்.

தனியாகவோ, பலர் சேர்ந்தோ, தாள-ஸ்வரத்துடனோ, தாள-ஸ்வரமின்றியோ, உரத்த குரலில், கூட்டு வழிபாடாகச் செய்யப்படுமானால், அதை கீர்த்தனம் என்கிறார்கள். இத்தகைய நாம-கீர்த்தனத்தின் மகிமையும் எல்லையில்லாதது. ஆனால், இதிலும் முக்கியமாக கவனிக்கப்பட வேண்டிய விஷயம், சிரத்தை-அன்பு தான். எவ்வளவு அதிகமாக சிரத்தை-பிரேமை-நிஷ்காமம் இருக்கிறதோ அந்த அளவு அதிக மதிப்புடையது, அது. ஸ்ரீநாரதர், ஸ்ரீதுளசீதாஸர், ஸ்ரீசூர்தாஸர், ஸ்ரீநரஸிம்ம மேத்தா, ஸ்ரீகௌராங்க மகாப்ரபு, மீராபாயீ முதலிய அநேக பக்தர்கள் கீர்த்தன்-பிரேமி என்று மதிக்கப்படுகிறார்கள்.

ஸ்ரீமத் பாகவதத்தில் -

அஜ்ஞாநாத$_3$த$_2$வா ஜ்நாது$_3$த்தமஶ்லோகநாம யத் ।
ஸங்கீர்த்திதமக$_4$ம் பும்ஸோ த$_3$ஹேதே$_3$தே$_4$ா யத$_2$ாநல: ॥
*(6-2-18)*

*(அக்னியானது விறகுக்கட்டையை எரித்துப் பொசுக்கி விடுவதைப் போல, உத்தமமான புகழ்படைத்த ஸ்ரீஹரியின் நாம சங்கீர்த்தனம், தெரிந்தோ-தெரியாமலோ, செய்து வருபவனின் பாவங்களைப் பொசுக்கிப் பொடியாக்கி விடுகிறது.)*

- என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஸ்ரீசுக்ராசாரியார், பகவானிடம் கூறுகிறார் -

மந்த்ரதஸ்தந்த்ரதஶ்சி$_2$த்$_3$ரம் தே$_3$ஶகாலார்ஹவஸ்துத: ।
ஸர்வம் கரோதி நிஶ்சி$_2$த்$_3$ரம் நாமஸங்கீர்த்தநம் தவ ॥
*(ஸ்ரீமத் பாகவதம்-8-23-16)*

*(ப்ரபூ! மந்திரங்களின் அனுஷ்டான முறை, இடம், காலம், பாத்திரம், பொருள் ஆகியவற்றால் ஏற்படும் எல்லாக்*

*குறைகளையும் தங்களது நாம ஸங்கீர்த்தனம் போக்கி விடுகிறது; தங்கள் திருநாமம் எல்லாக் குற்றங் குறைகளையும் நிறைவாக்கி விடுகிறது.)*

இது மட்டுமல்ல. பகவானுடைய நாமஜபத்துக்கு இதைக் காட்டிலும் மேலான மகிமை இருக்கிறது. நாம ஜபத்தின் மகிமையினால் பகவான், தானே, அந்த ஜபகர்த்தா வின் வசப்பட்டு விடுகிறார்! பக்த ஹனுமானுக்கு பகவானுடைய திருநாமத்தின் பேரில் திடமான நம்பிக்கை இருந்தது. அத்யாத்ம ராமாயணத்தில், சமுத்திரத்தைத் தாண்டும் சமயத்தில் அவர் கூறுகிறார் -

ப்ராணப்ரயாண ஸமயே யஸ்ய நாம ஸக்ருத் ஸ்மரந்।
நரஸ் தீர்த்வா ப$_4$வாம்பே$_4$ாதி$_4$மபாரம் யாதி தத்பதம்॥
*(சுந்தரகாண்டம்-1/4,5)*

*(உயிர்போகும் வேளையில் பகவானுடைய நாமத்தை ஒரு தடவை நினைத்துக் கொண்டாலும், அந்த மனிதன் கடக்க முடியாத சம்சார சாகரத்தைக் கடந்து, அவருடைய பரமபதத்தையே அடைந்து விடுகிறான்.)*

பட்டாபிஷேகம் முடிந்து, ஹனுமானுடைய பக்தி யினால் பெருமகிழ்ச்சி கொண்ட ஸ்ரீராமசந்திரன், ஹனுமானைப் பார்த்து வரம் கேட்கும்படி கூறியபோது மிகவும் புல்லரித்துப் போன ஹனுமான், பின்வரும் வரனைக் கோருகிறார் -

த்வந்நாம ஸ்மரதோ ராம ந த்ருப்யதி மநோ மம।
அதஸ்த்வந்நாம ஸததம் ஸ்மரந் ஸ்த்த$_2$ாஸ்யாமி பூ$_4$தலே॥
*(யுத்தகாண்டம்-16/12,13)*

*('ஹே, ராம! தங்கள் பெயரை சொல்லிச் சொல்லி எனக்கு இன்னும் மனத்திருப்தி ஏற்படவில்லை. ஆகவே, தங்கள் பெயரை ஜபித்துக் கொண்டு நான் நிரந்தரமாக மண்ணுலகிலேயே இருக்கிறேன்.)*

பகவான் ஸ்ரீராமன், அவர் விரும்பியபடியே வரம் கொடுத்தார்.

ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது -

யந்நாமதே₄யம் ம்ரியமாண ஆதுர: பதந் ஸ்க்க₂லந்
வா விவஶோ க்₃ருணந் புமாந்।
விமுக்த கர்மார்கல உத்தமாம் க₃திம் ப்ராப்நோதி
யக்ஷ்யந்தி ந தம் கலௌ ஜநா:॥
*(12-3-44)*

*(மனிதன் இறக்கும் தறுவாயிலோ, தவிக்கும் போதோ, கீழே விழும்போது அல்லது கால் பிறழும்போது, தன் முயற்சி இல்லாமலே பகவானுடைய நாமத்தைச் சொன்னால், அவன் எல்லா கர்மபந்தங்களிலிருந்தும் விடுபட்டு, உத்தம கதியை அடைகிறான். இவ்வளவு சுலபமாக இருந்தும், கோரமான கலியுகத்தில் மனிதன் அந்த பகவானை மனம் ஒன்றி உபாசிப்பதில்லை!)*

அபி சேத்ஸுது₃ராசாரோ ப₄ஜதே மாமநந்யபா₄க்।
ஸாது₄ரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக்வ்யவஸிதோ ஹி ஸ:॥
க்ஷிப்ரம் ப₄வதி த₄ர்மாத்மா ஶஶ்வச்ச₂ாந்திம் நிக₃ச்ச₂தி।
கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே ப₄க்த: ப்ரணஶ்யதி॥
*(9-30,31)*

*(மிகவும் தீய ஒழுக்கம் கொண்ட ஒருவன், ஒன்றிய மனத்துடன் என்னிடம் பக்தி பூண்டு என்னை வழிபட்டு வருவானேயானால், அவனும் சாது என்றே மதிக்கத்தக்கவன்; ஏனென்றால், உண்மையை அவன் உறுதியாக அறிந்து கொண்டு விட்டான்-பரமேசுவரனை வழிபடுவதற்கு நிகரானது வேறு எதுவும் இல்லை என்று அவன் நன்றாக நிச்சயித்துக் கொண்டு விட்டான். அவன் விரைவிலேயே தர்மாத்மாவாகி, நிலைத்து நீடிக்கும் பரம சாந்தியை அடைகிறான். அர்ஜுனா! என்னுடைய பக்தன் அழிய மாட்டான்-என்ற சத்தியத்தை உறுதியாக அறிந்து கொள்.)*

ஸ்ரீமத் பாகவதத்தில் பகவானுடைய பார்ஷதர் (அணுக்கத் தொண்டர்)களின் கூற்று -

ஸர்வேஷாமப்யக₄வதாமித₃மேவ ஸுஷ்க்ருதம்।
நாம வ்யாஹரணம் விஷ்ணோர்யதஸ் தத்₃விஷயா மதி:॥
*(6-12-10)*

*(எல்லாப் பாவிகளுக்கும், இதுவே மிகப் பெரிய பிராயச்சித்தம்-பகவானுடைய நாமத்தை உச்சாரணம் செய்வது தான். ஏனென்றால், பகவானுடைய திருநாமத்தை உச்சரித்துக் கொண்டு வந்தால், மனிதனுடைய புத்தி பகவானுடைய குணம், லீலை, ஸ்வரூபங்களில் களிப் படைகிறது; பகவானுக்கும் அவனிடம் தன்னுடையவன் என்ற எண்ணம் ஏற்படுகிறது.)*

சுகப்ரும்மம், பரீட்சித்திடம் கூறுகிறார் -

ம்ரியமாணோ ஹரேர்நாம க்$_3$ருணந் புத்ரோபசாரிதம்।
அஜாமிளோऽப்யகாத்$_3$ த$_4$ாம கிம் புந: ஶ்ரத்$_3$த$_4$யா க்$_3$ருணந்॥
*(ஸ்ரீமத் பாகவதம்-6/2/49)*

*(அஜாமிளன் போன்ற பெரிய பாவி, இறக்கும் தறுவாயில், புதல்வனை அழைக்கும் நிமித்தமாகப் பகவானின் திரு நாமத்தைக் கூறினான்; அதனாலேயே அவனுக்குப் பரமபதம் கிடைத்தது-என்னும்போது, சிரத்தை-நம்பிக்கையுடன் பகவானுடைய நாமத்தைச் சொல்கிறவர்கள் அடையும் பெரும்பேற்றைச் சொல்ல வேண்டுமா, என்ன!)*

ஸ்ரீசூதர் கூறுகிறார் -

பதித:ஸ்க்க$_2$லிதஶ்சார்த்த: க்ஷுத்வா வா விவஶோ ப்$_3$ருவந்।
ஹரயே நம இத்யுச்சைர்முச்யதே ஸர்வபாதகாத்॥
*(ஸ்ரீமத் பாகவதம்-12/12/46)*

*(கீழே விழும்போது, கால் இடறும்போது, துக்கத்தை அனுபவிக்கும்போது, அல்லது , தன் முயற்சி இல்லாமலே எவனொருவன் உரத்த குரலில் 'ஹரயே நம:' என்று சொல்கிறானோ, அவன் எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுதலை பெறுகிறான்.)*

ஸ்ரீநாரத புராணத்தில், ஸனக முனிவர், நாரதரைப் பார்த்துச் சொல்கிறார் -

ஹரே கேஶவ கே$_3$ாவிந்த$_3$ வாஸுதே$_3$வ ஜக$_3$ந்மய।
இதீரயந்தி யே நித்யம் ந ஹி தாந் ப$_4$ாத$_4$தே கலி:॥

*(தினந்தோறும், கேசவ, கோவிந்த, வாசுதேவ, ஜகன்மய என்பதான பகவானுடைய நாமாக்களை ஜபித்து வருபவர்களை கலியுகத்தின் துன்பங்கள் தீண்டுவதில்லை.)*

மேலும் கூறுகிறார் -

அஹோ சித்ரமஹோ சித்ரமஹோ சித்ரமித$_3$ம் த்$_3$விஜ ।
ஹரிநாம்நி ஸ்த்தி$_2$தே லோக: ஸம்ஸாரே பரிவர்த்ததே ॥

*(நாரதரே! பகவான் விஷ்ணுவினுடைய திருநாமம் இருந்தும் கூட, மக்கள் ஜனன-மரண வடிவமான சம்சாரச் சுழலில் சிக்கித் தவிக்கிறார்கள்-இது எவ்வளவு ஆச்சரியமான விஷயம்! விசித்திரமான விஷயம்! வியப்பான விஷயம்!)*

ஸ்வபந் பு$_4$ஞ்ஜந் வ்ரஜம்ஸ்திஷ்ட்ட$_2$ந்னுத்திஷ்ட்$_2$டம்ஶ்ச வத$_3$ம்ஸ்தத$_2$ா ।
சிந்தயேத்$_3$யோ ஹரேர்நாம தஸ்மை நித்யம் நமோ நம: ॥

*(உறங்கும்போதும், உண்ணும்போதும், நடக்கும் போதும், நிற்கும்போதும், எழுந்திருக்கும்போதும், பேசும்போதும் எவனொருவன் பகவான் விஷ்ணுவின் திருநாமத்தை ஸ்மரிக்கிறானோ, அவனுக்கு ஆயிரமாயிரம் நமஸ்காரங்கள்.)*

ஹரேர்நாமைவ நாமைவ நாமைவ மம ஜீவநம் ।
கலௌ நாஸ்த்யேவ நாஸ்த்யேவ நாஸ்த்யேவ க$_3$திரந்யத$_2$ா ॥

*(பகவான் விஷ்ணுவின் திருநாமமே, திருநாமமே, திருநாமமே எனது வாழ்வு. கலியுகத்தில் அதைத் தவிர வேறு கதியில்லை; கதி இல்லை; கதி இல்லவே இல்லை.)*

உபநிஷத்தும் -

ஏதத்$_3$த்$_4$யேவாக்ஷரம் ப்$_3$ரஹ்ம ஏதத்$_3$த்$_4$யேவாக்ஷரம் பரம் ।
ஏதத்$_3$த்$_4$யேவாக்ஷரம் ஜ்ஞாத்வா யோ யதி$_3$ச்ச$_2$தி தஸ்ய தத் ॥
*(கடோபநிஷத்-1/2/16)*

*(இந்த அட்சரம் (ஓம்) தான் பிரம்மம்; இதுவே பரப்ரம்மம். இந்த அட்சரத்தை அறிந்து கொண்டு, எவன் எதை அடைய விரும்பினாலும் அவன் அதை அடைகிறான்.)*

இவ்விதமாக, அறநூல்களில் பற்பல இடங்களில் திருநாமத்தின் பெருமை மிக விரிவாகப் பேசப்பட்டுள்ளது. உண்மையில், நாம மகிமையை யாராலும் பேச முடியாது;

ஏனென்றால், பேச்சு என்பது வாக்கினால் நிகழ்வது; வாக்கு, எல்லைக்கு உட்பட்டது; பகவானுடைய நாம மகிமையோ எல்லையில்லாதது. ஆக, அதன் பெருமையை மனிதன் எவ்வாறு எடுத்துக் கூற முடியும்? பகவானுடைய நாமத்தின் பெருமையை, பகவானாலும் கூட சொல்ல முடியாது-என்று சொன்னால், அது மிகையாகாது.

ஆகவே, பகவானிடம் ஆழ்ந்த அன்பு தோன்றுவதற்காக, ஒன்றிய-தூய-சிரத்தை-பிரேமை கூடிய மனத்தோடு, எல்லா நேரத்திலும் பகவானுடைய திருநாமஜபத்தைச் செய்வதற்கான முயற்சியை நாம் செய்து வர வேண்டும்.

## 6. பகவானை அடைவதற்கான எளிய உபாயம்-சரணாகதி செய்தலே

தனிப்பெரும் பொருளான பகவானையே முற்றிலுமாக சரணாகதி அடைவதுதான் எல்லா மனிதர்களுக்கும், பகவானை அடைவதற்கான மிகவும் சுலபமான முறை. ஆனால், ஞானயோகம், கர்மயோகம், அஷ்டாங்க யோகம் முதலிய சாதனைகளைப் பயில இயலாதவர்களுக்கு, பகவானுடைய திருவடிகளைப் பற்றிக் கொள்வது தான் எல்லா விதத்திலும் லாபகரமானது; ஏனென்றால், பகவான், மிகவும் பிரேமை உடையவர்; சிநேகிதர்; காரணமில்லாமலேயே தயை புரிபவர். அவர், தன் அடியார்களுடைய குற்றங்குறைகள்பால் ஒருபோதும் பார்வை செலுத்துவதில்லை. பரதன் கூறுகிறார்-

'பிரபு, அடியாரின் அவலங்களை நினைக்க மாட்டார்; அவர், ஏழை பங்காளர்; மிகவும் மென்மையான இயல்பு உடையவர்.'

ஆகவே, பகவானை சரணம் அடைந்து விட்ட மனிதனுக்கு அவர் எல்லாவற்றிலிருந்து (அனைத்து வகையான துன்பங்களிலிருந்தும்) அபயம் அளிக்கிறார். பகவானே சொல்லியிருக்கிறார் -

ஸக்ருதே$_3$வ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே।
அப$_4$யம் ஸர்வபூ$_4$தேப்$_4$யோ த$_3$த$_3$ாம்யேதத்$_3$ வ்ரதம் மம ॥
*(வால்மீகி ராமாயணம்-யுத்த-18/33)*

*('நான் தங்களுடையவன்-என்ற உணர்வுடன், ஒரே ஒரு தடவை, முற்றிலுமாகத் தன்னை என்னிடம் அர்ப்பணித்து, மிக உயர்ந்த நல்லுணர்வுடன் பிரார்த்தனை செய்யும் அந்த பக்தனை நான் ஏற்றுக் கொண்டு, எல்லாப் பிராணிகளிட மிருந்தும் எப்போதும் அச்சமில்லாமல் செய்து விடுகிறேன்; இதுவே என் விரதம்.')*

ஒருவன் எவ்வளவு பெரிய பாவியாகத்தான் இருந்து விட்டுப் போகட்டுமே?-அவனையும் பகவான் நிராகரித்து விடுவதில்லை. ராமசரிதமானஸத்தில், பகவான் கூறுகிறார் -

'ஒருவன் கோடி அந்தணர்களைக் கொன்றவனானாலும் சரி, அவன் என்னைச் சரணடைந்து விட்டால், நான் அவனை ஒதுக்கிவிட மாட்டேன்.'

ஆக, எந்த விதமான ஆன்மிக சாதனையையும் செய் யாத மனிதன், மேன்மை அடைய வேண்டுமானால் பகவானை அடைக்கலம் அடைவது தான் கைக்கொள்ளக் கூடிய, எளிய உபாயம். பகவான், கீதையிலும் சொல்லியிருக்கிறார் -

மாம் ஹி பார்த$_2$ வ்யபாஶ்ரித்ய யேऽபி ஸ்யு: பாபயோநய:।
ஸ்த்ரியோ வைஶ்யாஸ்தத$_2$ா ஶூத்ராஸ்தேऽபி யாந்தி பராம் க$_3$திம் ॥
*(9-32)*

*('அர்ஜுனா! மகளிர், வணிகர், வேளாளர் மற்றும் பாவத்தின் காரணமாக சண்டாளர் முதலிய கீழ்க்குடிகளில் பிறந்தோரும், என் திருவடிகளைப் பற்றிக் கொண்டுவிட்டால், மேலான நிலையை அடைந்து விடுகிறார்கள்.')*

மிகவும் கீழ்ப்பட்ட ஜாதியில் பிறந்தவராக இருந்தாலும், பகவானை சரண் புகுந்தால் (பக்தி செய்தால்), அவர் பரம பதத்தை அடைந்து விடுகிறார். பகவான், உத்தவரிடம் கூறுகிறார்-

ப$_4$க்த்யாஹமேகயா க்$_3$ராஹ்ய: ஶ்ரத்$_3$த$_4$யாऽऽத்மா ப்ரிய: ஸதாம்।
ப$_4$க்தி: புநாதி மந்நிஷ்ட்ட$_2$ா ஶ்வபாகாநபி ஸம்ப$_4$வாத் ॥
*(ஸ்ரீமத் பாகவதம் : 11-14-21)*

*('உத்தவரே! நான் பக்தர்களின் ஆத்மாவாக உள்ளேன். நான், வேறிடஞ்செல்லாத சிரத்தை-பக்தியினால் கைவசப்படுவேன். பிறவியிலேயே சண்டாளர்களாக உள்ளவர்களையும், என்னிடம் செலுத்தப்படும் உறுதியான பக்தி, புனிதமாக்கி விடுகிறது.')*

இவ்விதமே, நல்ல ஆசாரங்களில்லாதவர் கூட நெறிமுறையான வாழ்க்கையை ஏற்று பரமசாந்தியை அடைந்து விடுகிறார். பகவான், அர்ஜுனனிடம் கூறுகிறார் -

அபி சேத்ஸுது$_3$ராசாரோ ப$_4$ஜதே மாமநந்யப$_4$ாக்।
ஸாது$_4$ரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக்$_3$வ்யவஸிதோ ஹி ஸ:॥

*(கீதை : 9/30)*

*('மிகவும் தீய நடத்தையுடைய ஒருவன், வேறெங்கும் செல்லாத மனத்துடன் என்னிடம் பக்தி செலுத்தினால், அவனும் நல்லொழுக்கம் கொண்டவனாகவே மதிக்கத் தக்கவன்; ஏனென்றால், அவன் உண்மையை உறுதியாக அறிந்து கொண்டு விட்டவனாகிறான். அதாவது, பகவானைப் பணிந்து வழிபடுவதற்கு இணையாக வேறு எதுவும் இல்லை என்கிற நல்லவிதமான முடிவுக்கு வந்து விட்டான்.')*

க்ஷிப்ரம் ப$_4$வதி த$_4$ர்மாத்மா ஶஶ்வச்ச$_2$ாந்திம் நிக$_3$ச்ச$_2$தி।
கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே ப$_4$க்த: ப்ரணஶ்யதி॥

*(கீதை : 9/31)*

*('அவன் விரைவிலேயே நன்னெறியாளனாக ஆகி, என்றென்றும் நிலைத்திருக்கும் உத்தமமான சாந்தியை அடைகிறான். அர்ஜுனா! என்னுடைய பக்தனுக்கு ஒரு போதும் அழிவு ஏற்படாது-உறுதியான இந்த சத்திய வாக்கியத்தை நீ அறிந்துகொள்.')*

இப்படியிருக்கும்போது, கீழோரும், முறையான பக்தி செய்தால் உயர்நிலை அடைவார்கள் என்றால், உயர்ந்த குடிப்பிறப்பும் ஆசாரமும் கொண்ட பக்தர்களுக்கு மேன்மை ஏற்படும் என்பதைக் கூறவும் வேண்டுமா?

ஆகவே, காரணமில்லாமலே பிரேமை செலுத்துபவரும் மிகுந்த தயை நிறைந்தவருமான தனிப்பெரும் பகவானிடம் எல்லா வகையாலும் அடைக்கலம் புகுந்து விட வேண்டும்.

'எல்லா வகையாலும் அடைக்கலம் புகுதல்' என்பது, கீதையில் பின் வருமாறு விளக்கப்பட்டிருக்கிறது -

மந்மநா ப$_4$வ மத்$_3$ப$_4$க்தோ மத்$_3$யாஜீ மாம் நமஸ்குரு ।
மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்மாநம் மத்பராயண: ॥
(9-34)

*('என்னிடமே மனத்தைச் செலுத்து; என் பக்தனாக ஆகு; என்னை வழிபடுபவனாக ஆகு; என்னை வணங்கு. இவ்விதம் தன்னை என்னிடமே செலுத்தி என்னை அண்டி நிற்பவனாகிவிட்டால், நீ என்னையே அடைந்து விடுவாய்.')*

இந்தச் செய்யுளில், தஞ்சம் புகுதல் என்பதன் நான்கு முறைகளைக் குறிப்பிட்டிருக்கிறார், பகவான். இவற்றைப் பற்றி நாம் தெரிந்துகொள்ள வேண்டும். நம்மிடம் முக்கிய மான நான்கு சாதனங்கள்-மனம், புத்தி, புலன்கள், உடல்- இருக்கின்றன. 'மந்மநா ப$_4$வ' என்பதன் மூலம், மனத்தைப் பகவானிடம் செலுத்த வேண்டும் என்பது சொல்லப் பட்டிருக்கிறது. விரஜபூமியின் கோபிகைகள் எப்போதும் பகவானைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தார்களே, அது போல. ஸ்ரீமத் பாகவதத்தில் -

யா தோஹநேऽவஹநநே மத$_2$நோபலேப
ப்ரேங்கே$_2$ங்க$_2$நார்ப$_4$ருதி$_3$தோக்ஷணமார்ஜநாதெ$_3$ள ।
க$_3$ாயந்தி சைநமநுரக்ததி$_4$யோऽஶ்ருகண்ட்யோ
த$_4$ந்யா வ்ரஜஸ்த்ரிய உருக்ரமசித்தயாநா: ॥
(10-44-15)

*(எவர்களுடைய உள்ளம் எப்போதும் பகவான் ஸ்ரீகிருஷ்ணனிடமே ஈடுபட்டிருக்கிறதோ, எவர்களுடைய புத்தி பகவானிடமே ஒட்டிக் கொண்டிருக்கிறதோ, எவர் களுடைய குரல் அன்புக்கண்ணீர் வழியும் காரணத்தால் தழ தழத்துப் போயிருக்கிறதோ, மேலும், எவர்கள், பால் கறக்கும் போதும், தயிர் கடையும்போதும், தானியம் புடைக்கும் போதும், வீட்டை மெழுகும்போதும், குழந்தைகளைத் தூளியில் இட்டு ஆட்டும் போதும், அழுது கொண்டிருக்கும் குழந்தைகளை சமாதானப்படுத்திக் கொண்டிருக்கும் போதும், அவர்களைக் குளிப்பாட்டி உடை அணிவிக்கும் போதும்,*

*வீட்டைத் துடைப்பத்தால் கூட்டிப் பெருக்கும் போதும்-இப்படி எந்தக் காரியம் செய்யும் போதும், பகவானுடைய குணங்களையே பாடிக் கொண்டிருந்தார்களோ, அந்த விரஜபூமிப் பெண்டிர் மிக்க பேறு பெற்றவர்கள்.)*

இவ்விதம், மனத்தைப் பகவானிடம் ஈடுபடுத்துதல் என்பது, மனத்தால் பகவானை சரண் அடைதல் ஆகும்.

'மத்$_3$ப$_4$க்தோ ப$_4$வ' (என் பக்தனாக ஆகு) — என்று சொல்லியதன் மூலம், முக்கியமாக, புத்தியை பகவானிடம் ஈடுபடுத்துவது குறிப்பிடப்படுகிறது. பகவான் தான் என்னுடைய சிறந்த நண்பன், பெரும் தயை உடையவர், மிக்க அன்புடையவர், என் நலன்விரும்பி; அவருக்கு ஈடானவர் வேறு எவரும் இலர். சரண் அடையும் தகுதி உடையவர், தன்னுடையவர் என்று கருதத் தக்கவர், பிரேமை செலுத்தும் தகுதி படைத்தவர் தனிப்பெரும் பகவான் மட்டுமே-இவ்வாறு புத்திபூர்வமாக பகவானுடைய குண-பிரபாவங்களின் தத்துவ-ரகசியத்தை அறிந்து கொண்டு, பகவானை மட்டுமே தன்னுடையவராக்கிக் கொண்டு, பகவானிடமே அநன்யமான, தூய்மையான பிரேமை செய்ய வேண்டும்-பக்த சிரோமணியான பிரகலாதனுக்குப் பகவானிடம் அநன்யமான, தூய பிரேமை இருந்ததே, அது போல. பகவானிடம் அநன்யமான பிரேமை (வேறு எங்கும் செல்லாத மனத்தோடு செலுத்தப்படும் தூய அன்பு) கொள்வது தான், உண்மையான பக்தி ஆகும். சாண்டில்ய பக்தி சூத்திரத்தில், 'ஸா பரானுரக்திரீஶ்வரே' (சூத்.2) (ஈசுவரனிடம் மிகவும் அன்பு கொள்ளுதல் தான் பக்தி) என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வாறாக, புத்தியை, பகவானிடம் ஈடுபடுத்துதலே, புத்திபூர்வமாக பகவானைச் சரண் அடைதல் ஆகும்.

'மத்$_3$யாஜீ ப$_4$வ' — எல்லா வேள்வி-விரதம் முதலான கர்மாக்களை அனுபவிப்பவன், நானே-'பே$_4$ாக்தாரம் யஜ்ஞ தபஸாம்' (கீதை : 5/29); 'நான் தான் எல்லாப் பிராணிகளுடைய இதயத்திலும், ஆத்மாவாக இருந்து கொண்டிருக்கிறேன்' - **'அஹமாத்மா குு$_3$டா$_3$கேஶ ஸர்வபூ$_4$தாஶயஸ்த்தி$_2$த:'** (கீதை : 10/20); 'நான் தான் எல்லாவற்றிலும் வியாபித்திருக்கிறேன்' - **'மயா ததமித$_3$ம்**

**ஸர்வம்'** (கீதை : 9/4) - இவ்வாறு அறிந்துகொண்டு என்னைப் பூஜிக்க வேண்டும்-என்பதான உணர்வுகளைப் பகவான், 'என்னை வேள்விப்பவனாக ஆகு' என்று சொல்லியதன் மூலம் சுட்டிக் காட்டியிருக்கிறார்.

இதற்கு மேல், பூஜை செய்யும் முறையையும் பகவான் தானே சொல்லியிருக்கிறார் -

யத: ப்ரவ்ருத்திர்பூ$_4$தாநாம் யேந ஸர்வமித$_3$ம் ததம்।
ஸ்வகர்மணா தமப்$_4$யர்ச்ய ஸித்$_3$தி$_4$ம் விந்த$_3$தி மாநவ:॥
*(கீதை : 18/46)*

*(எந்தத் தனிப்பெரும் தலைவனிடமிருந்து எல்லா உயிர்களின் உற்பத்தியும் உண்டாகியிருக்கிறதோ, எந்தப் பேராற்றலினால், எல்லா உலகங்களும் வியாபிக்கப் பட்டிருக்கிறதோ, அந்தப் பகவானை, தனக்கு இயல்பாகக் கிடைத்துள்ள கர்மாக்கள் மூலமாக பூஜை செய்யும் மனிதன் மேலான சித்தியை அடைந்து விடுகிறான்.)*

இங்கு, 'பூஜை செய்தல்' என்பதன் தாத்பரியம் என்னவென்றால், எல்லாப் பிராணிகளையும் பகவானாகவே கருதி, பகவத்பாவத்துடன் விநயம்-பிரேமையோடு கூட, எல்லோருடைய நலனுக்காக, தன் புலன்கள் மூலம் எல்லோரையும் பாராட்டிக் கௌரவித்து, அகம்பாவம்-தன்னலம் தவிர்த்து, சேவை செய்து எல்லோருக்கும் சுகம் ஏற்படச் செய்ய வேண்டும்-என்பதாகும். இதுவே எங்கும் நிறைந்த பகவானை பூஜை செய்வதாகும். இந்தப் பூஜையில், முக்கியமாக, எல்லா இந்திரியங்களையும் பகவானிடம் ஈடு படுத்த வேண்டியிருக்கும். ஆகவே, 'என்னை வேள்விப்பவனாக - பூஜை செய்பவனாக - ஆகு' என்பதன் கருத்து, இந்திரியங்கள் மூலம் பகவானைச் சரண் அடைதல் என்பதாம்.

**'மாம் நமஸ்குரு'** (என்னை நமஸ்காரம் செய்) என்று சொல்லியதன்மூலம், 'உடலை, பகவானுக்கு அர்ப்பணம் செய்' என்று சொல்லியதாகிறது. பகவானிடம் மட்டுமே பொறுப்பை ஒப்படைத்து விடவேண்டும் என்பது இதன் கருத்து. தன்னுடைய மனத்துக்கு (விருப்பத்துக்கு) அனுகூல

மாக அல்லது பிரதிகூலமாக எது நிகழ்ந்தாலும்; அல்லது, அநிச்சை (தெய்வ விருப்பம்) அல்லது பிறர் விருப்பப்படி தனக்கு சாதகமான, அல்லது, பாதகமான நிகழ்ச்சி, பொருள் மற்றும் சூழ்நிலை ஏற்பட்டாலும், அதனை, பகவானுடைய கட்டளை என்று எண்ணி மலர்ச்சியோடு எதிர்கொள்ள வேண்டும்; அத்துடன், பகவானுடைய அந்தக் கட்டளையின் ஒவ்வோர் அடியிலும் கடவுளின் தயையைக் கண்டுகொள்ள வேண்டும். தன்னுடைய சரீரம், புலன்கள், மனம், புத்தி, சாஸ்திரம் மற்றும் கொள்கைகளுக்கு அனுகூலமான சம்பவம், பொருள் மற்றும் சூழ்நிலைகளில் பகவானுடைய அருட் கொடையைக் கண்டு, சாந்தியைப் பெறுதல் என்பது இயற்கையான விஷயம்; ஆனால், இவைகளுக்கு எதிரான சந்தர்ப்பங்களிலும் கூட பகவானுடைய அருளைக் கண்டு அமைதியோடிருப்பவனே பகவானுடைய தயையின் தத்வ-ரகசியத்தை உண்மையான வடிவத்தில் அறிந்து கொள் கிறான். உகந்ததான சூழ்நிலையில் மகிழ்ச்சி-சாந்தி ஏற்படு கிறதே, அது அனைவருக்கும் பொதுவாக கிடைக்கக் கூடியது; என்றாலும், அது ராஜசத் தன்மையின்பாற்பட்டது. பிரதிகூல மான சூழ்நிலையும் கூட பரமாத்மாவை அடைவதில் உதவி செய்கிறது என்று எண்ணி அமைதி காக்கும் தன்மை இருக்கிறதே, அது சாத்விக சாந்தியாகும். நம் விருப்பத்துக்கு எதிராக நோய்-நொடி ஏற்பட்டால், அல்லது, பெண்டிர்-மக்கள்-செல்வம் ஆகியவற்றின் அழிவு ஏற்படும் காலத்தில் - இந்த நிகழ்ச்சியை மேலோட்டமாகப் பார்க்கும்போது துயரம் கொடுப்பதாகத் தோன்றுகிறது; ஆனால், பகவான் 'என் நன்மைக்காகவே இப்படிச் செய்திருக்கிறார்' - என்று எணணிக் கொள்ள வேண்டும். இதனால் பல லாபங்கள் கிடைக்கின்றன. துக்கத்தை அனுபவிப்பதால் பாவங்கள் நசித்துப் போகின்றன; அதன்மூலம் (பாவங்கள் அற்றுப் போய்விட்ட நிலையில்) அந்தக்கரணம் சுத்தமாகிறது. ஆபத்துக் காலத்தில், மனிதனுக்குக் கடவுளைப் பற்றிய நினைவு வருகிறது. துக்கம் என்பது, பாவத்தின் பலன் என்று புரிந்து கொள்வதால், மறுபடியும் பாவத்தின் பக்கம் அடியெடுத்து வைப்பதில்லை. துக்கத்தைப் பொறுத்துக் கொள்வதன் மூலம் திதிக்ஷை (துன்பத்தைத் தாங்கிக் கொள்ளும் திறன்) பெருகுகிறது.

இவ்வாறு அறிந்து கொள்வதன் மூலம் அடையப்படும் சாந்தியும், சாத்விக சாந்தியாகும். ஆனால், பரமாத்மாவை அடைந்ததும் ஏற்படுகிற சாந்தி, அல்லது, முக்குணங்களைக் கடந்து பெறப்படும் சாந்தி-அது, முன் சொன்ன சாந்த நிலைகளிலிருந்து வேறு வகையானது. இந்தத் தத்துவத்தை அறிந்து கொண்டு சாதனை புரிபவன், அவன் எந்தவொரு அனுகூல-பிரதிகூலமான நிகழ்ச்சி, பொருள், சூழ்நிலையிலும், அது பகவானுடைய இச்சை அதாவது, பகவானுடைய ஆணை என்று மதித்து பகவானின் மகிழ்ச்சியிலேயே தானும் மகிழ்ந்திருப்பான்; சதா காலமும் சாந்தியிலேயே திளைத்துக் கொண்டிருப்பான்; அது பரமசாந்தி எனப்படும். மேலும், அந்த மனிதனுக்கு அனுகூலம்-பிரதிகூலம் ஆகிய இரு நிலைகளிலும் சமபாவம் ஏற்பட்டுவிடுகிறது; அவனுக்கு, கவலை-அச்சம், மகிழ்ச்சி-துயரம், விருப்பு-வெறுப்பு, காமம்-குரோதம், லோபம்-மோஹம் முதலிய மன விகாரங்கள் முற்றிலுமாக மறைந்துபோய் விடுகின்றன; ஒவ்வோர் அடியிலும், எல்லா இடங்களிலும் மலர்ச்சி, சாந்தி, ஆனந்த அனுபவமே ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது.

பகவானுடைய பக்தன் தன்னுடைய மனம், புத்தி, புலன்கள் மற்றும் சரீரத்தை முற்றிலுமாகப் பகவானுக்கே அர்ப்பணம் செய்து விட்டிருக்கிறான். ஆகவே, இந்த சரீரத்தின் மூலமாக ஆற்றப்படும் செயல்களிலும் பகவானுடைய அருளின் அனுபவம் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது; ஏனென்றால், அவனிடம் 'செய்பவன், நான்' ('கர்த்ருத்வம்'-நான் கர்த்தா) என்னும் தன்மை இல்லை. அதனால், அவனால் செய்யப்படும் செயல்கள் எல்லாமும் பகவானுடைய குறிப்புக்கு இணங்கவே நிகழ்த்தப்படுகின்றன. பகவானுடைய இச்சை எப்படியோ, அப்படியே அவனால் காரியம் செய்யப்படும். அவன், அந்தக் காரியத்தினால் விளையும் சுக-துக்கம், லாப-நஷ்டம், வெற்றி-தோல்வி எல்லாவற்றையுமே சமமாக எடுத்துக் கொள்கிறான். தன்னுடைய உடைமைகளையெல்லாம் பகவானுக்கே அர்ப்பணம் செய்துவிட்டவனால் செய்யப்படும் செயல்கள் எல்லாம், சாஸ்திரத்துக்கு உகந்ததாகவே இருக்கும்; சாஸ்திரத்துக்கு விரோதமான, அல்லது, வீணான கர்மாக்கள் அவன்மூலம் நடைபெற

மாட்டா; ஏனென்றால் அவனுடைய செயல்பாடுகள் எல்லாமே, பகவான் மூலமே நடத்தப்படுகின்றன. ஆதலால், அந்த மனிதனின் எல்லாச் செயல்களும் பகவானுடைய லீலைக்கு ஒப்பானவை. அது, உலகமக்களுக் கும் மிகவும் பயன்படக் கூடியதாகிறது; ஏனென்றால், அவன் ஒரு ஆதர்ச (முன்மாதிரியான) புருஷன் ஆகிறான். ஆதலால், மற்ற மனிதர்களும் அவனைப் பின்பற்றி நடந்து முக்தியை அடைகிறார்கள். இப்படிப்பட்ட சிரேஷ்ட மனிதர்களைப் பற்றி, பகவான் சொல்லியிருக்கிறார் -

யத்$_3$யத$_3$ாசரதி ஶ்ரேஷ்ட$_2$ஸ்தத்ததே$_3$வேதரோ ஜந:।<br>
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்தத$_3$நுவர்த்ததே॥<br>
*(கீதை : 3/21)*

*(மேன்மக்கள் எவ்வாறு நடந்து கொள்கிறார்களோ, அவ்வாறே தான் மற்ற மனிதர்களும் நடந்து கொள்கிறார்கள். மேலோர், செய்யும் செயல்களைப் பிரமாணமாக எடுத்துக் கொண்டு, எஞ்சியுள்ள சமுதாய மக்கள், அவரைப் போன்ற நடவடிக்கைகளில் ஈடுபடுகிறார்கள்.)*

சான்றோனாகிய அந்த மனிதனுக்கு கடவுள் விருப்பப் படி, அல்லது, பிறர் விருப்பப்படி ஏற்படும் நிகழ்ச்சி, பொருள், சூழ்நிலை; மற்றும், தன் விருப்பப்படி, தன் சரீரத்தினால் நிகழ்த்தப்பெறும் கர்மாக்கள்-ஆகிய எல்லாவற்றிலும், அவன், பகவானுடைய எல்லையற்ற, அளவற்ற பேரருளை நொடி தோறும் கண்ணாரக் கண்டு அனுபவித்துக் கொண்டிருக் கிறான். அவன், எல்லா வஸ்துக்களிலும் பகவானுடைய வடிவத்தையே காண்கிறான்; எல்லாச் செயல்களிலும் பகவா னுடைய லீலையையே அனுபவிக்கிறான்; பகவானுடைய எல்லையற்ற கருணையை கண்ணாரக் கண்டு கொண்டிருக் கிறான்; அத்துடன் எந்தச் சூழ்நிலையிலும் மன விகாரம் அடையாமல் சமதிருஷ்டி, சந்துஷ்டி, மலர்ச்சி மற்றும் சாந்தத்தோடு இருக்கிறான்.

இவ்விதம், தன்னுடைய மனம்-புத்தி-புலன்கள்-உடல் எல்லாவற்றையும் பகவானிடமே ஈடுபடுத்துவது தான், பகவானிடம் அநன்ய சரண் அடைதல் ஆகும். பகவானிடம் அநந்ய சரண், அல்லது, அநந்ய பக்தி என்று எப்படிச்

சொன்னாலும், முடிவில் இரண்டும் ஒன்றே தான். கீதையில், சரணாகதியைப் பற்றிப் பகவான் பேசிய இடங்களிலெல்லாம், பக்தி என்பது அதன் ஒரு முக்கியமான அங்கம் என்று குறிப்பிட்டிருக்கிறார். சரணாகதியை நிரூபித்துக் காட்டும் மேற்சொன்ன சுலோகத்தில் 'மத்$_3$ப$_4$க்தோ ப$_4$வ' என்று கூறி, பக்தியின் முக்கியத்துவத்தை சுட்டிக் காட்டியிருக்கிறார். இதுபோல, பதினொன்றாவது அத்தியாயம் சுலோகம் ஐம்பத்து நான்கு, ஐம்பத்து ஐந்தில், அநன்ய பக்தியைப் பற்றி பகவான் விளக்கியிருக்கிறார் -

ப$_4$க்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதே$_4$ாऽர்ஜுந ।
ஜ்ஞாதும் த்$_3$ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥

*(எதிரிகளை தபிக்கச் செய்யும் அர்ஜுனா! அநன்ய பக்தி செலுத்துவதன் மூலம், நான் இவ்விதத் தோற்றத்துடன் பார்க்கப்படக் கூடியவன்; தத்துவத்தோடு அறியத்தக்க வனாகக் கூடியவன்; மேலும், என்னுள் புகுந்து விடவும் - ஒன்றிவிடவும் - முடியும்.)*

மத்கர்மக்ருந்மத்பரமோ மத்$_3$ப$_4$க்த: ஸங்க$_3$வர்ஜித: ।
நிர்வைர: ஸர்வபூ$_4$தேஷு ய: ஸ மாமேதி பாண்ட$_3$வ ॥

*(அர்ஜுனா! தான் செய்ய வேண்டிய கர்மாக்களை எல்லாம் என் பொருட்டாகவே செய்கிறவன், என்னையே சார்ந்திருப் பவன், என்னிடம் பக்தி செலுத்துபவன், பற்றுதல் இல்லா திருப்பவன், எல்லா உயிர்ப் பிராணிகளிடமும் விரோதம் இல்லாதிருப்பவன்-இப்படிப்பட்ட அநன்ய பக்தி செலுத்து பவன் என்னையே அடைந்து விடுகிறான்.)*

ஐம்பத்தைந்தாவது சுலோகத்தில், அநன்ய பக்தியின் ஸ்வரூபத்தைக் குறிப்பிட்டுக் காட்டுவதற்காக, பக்தனின் இலக்கணத்தைக் கூறும்போது 'மத்பரம:' என்று சொல்லி, சரணாகதி செய்வது பக்தியின் ஒரு முக்கியமான அங்கம் என்று கூறியிருக்கிறார். இதிலிருந்து அநன்ய சரணாகதியும் அநன்ய பக்தியும் உண்மையில் ஒன்றே தான் என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும்.

இவ்விதம் பகவானை முற்றிலுமாகத் தஞ்சம் அடைந்து விடும் பகவத்பக்தன் எந்தக் காலத்திலும் எல்லா இடங்

களிலும் பயமின்றி இருக்கிறான். அவனுக்கு எவனிட மிருந்தும் அச்சம் ஏற்படுவதில்லை. யமதூதன் முதலியோர் அவன் அருகில் கூட வர முடியாது. ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் ஸ்ரீபீஷ்மர் கூறுகிறார் -

கிங்கரா: பாஶத$_3$ண்ட$_3$ாஶ்ச ந யமோ ந ச யாதநா: ।
ஸமர்த்த$_2$ாஸ்தஸ்ய யஸ்யாத்மா கேஶவாலம்ப$_3$நஸ்ஸத$_3$ா ॥
*(அம்சம் 3, அத்.7, சுலோ.38)*

*(பகவான் கேசவனையே எப்போதும் சார்ந்துள்ள இதயத் தோடு கூடியவனை யமன், யமதூதன், யமபாசம், யமதண்டம் மற்றும் யமவேதனை சிறிதளவும் துன்புறுத்த முடியாது.)*

கதையின் இந்தப் பகுதியில் பீஷ்ம பிதாமகர், பெரு மனம் படைத்த நகுலனிடம், யமராஜன் தன்னுடைய தூதர் களுக்கு விடுத்த ஆணையை வர்ணிக்கும்போது, பக்தர்களின் லட்சணத்தைச் சற்று விரிவாகவே கூறியிருக்கிறார். (அந்த விளக்கங்களை அந்த கதைப் பகுதியில் படித்து, மனத்தில் ஏற்று, நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.) பகவானிடம் பேரன்பு படைத்த பக்தன் உயிரை விடும் இடத்திற்கு யமராஜனும் யம தூதர்களும் செல்வதற்கு அதிகாரம் இல்லை. ஸ்ரீபீஷ்மர் கூறுகிறார் -

ஸ்வபுருஷமபி$_4$வீக்ஷ்ய பாஶஹஸ்தம் வத$_3$தி யம: கில தஸ்ய கர்ணமூலே ।
பரிஹர மது$_4$ஸூத$_3$நப்ரபந்நாந் ப்ரபு$_4$ரஹமந்யந்ருணாமவைஷ்ணவாநாம் ॥

*(கையில் பாசத்தை எடுத்துக் கொண்டிருக்கும் தன்னுடைய வேலைக்காரர்களைப் பார்த்து யமராஜன், அவர்கள் செவி களில் சொல்கிறான் : பகவான் மதுசூதனரைச் சரணமடைந் துள்ளவர்களை நீங்கள் விட்டுவிட வேண்டும்; ஏனென்றால், விஷ்ணுபக்தரல்லாத மற்றவர்களுக்குத் தான் நான் தலைவன்.)*

சிறந்த தேவர்களால் வணங்கப்படும் திருவடித் தாமரை களையுடைய பகவானை, பரமாத்மா என்ற ஞானத்துடன் வணங்குபவன், எல்லா பாவத் தளைகளிலிருந்தும் விடுபட்டு விடுகிறான். அந்த மனிதனை நீங்கள் நெருங்காமல் தொலைவில் இருந்தவாறே விலகிப் போய்விட வேண்டும்- நெய் ஆகுதியினால் சுடர் விட்டெரியும் அக்னியை விட்டு மக்கள் விலகிப் போய் விடுவதைப் போல.

பாவங்களாகிற மாசுகளால் அசுத்தப்படுத்தப்படாத தூய உள்ளம் உடையவர், தன் இதயத்தில் எப்போதும் பகவான் ஜனார்த்தனனை குடிவைத்திருப்பவர்-இத்தகைய மனிதரை, பகவானிடம் தீவிர பக்தி கொண்டவர் என்று நீ அறிந்து கொள்ள வேண்டும்.

யார் கண்ணிலும் படாத இடத்தில் ஒரு தங்கக் கட்டியைக் கண்டும், தன் அறிவினால் அதை ஒரு புல்லுக்குச் சமமாக நினைப்பவன்; எப்போதும் அநன்ய பாவத்துடன் பகவானை சிந்தித்துக் கொண்டிருப்பவன்-இந்த மேலான மனிதனை, விஷ்ணுபக்தன் என்று அறிந்துகொள்.

மாசற்ற அறிவு, பொறாமையற்ற தன்மை, ஆழ்ந்த அமைதி, தூய ஒழுக்கம், எல்லா உயிர்ப் பிராணிகளுக்கும் நண்பனாக இருப்பது, பிரியமும் நன்மையும் பயக்கக்கூடிய சொற்களைப் பேசுவது; அஹம்பாவம், கபடம் இல்லாதவன்-இப்படிப்பட்டவனின் உள்ளத்தில் பகவான் வாசுதேவன் எப்போதும் வீற்றிருக்கிறார். இவ்வாறு, சநாதனரான பகவான், உள்ளத்தில் குடிகொண்ட பின்னர், அந்த மனிதர் இந்த உலகத்தைப் பொறுத்தவரை சௌம்ய (சாந்த) வடிவம் உடையவராகி விடுகிறார்.

ஏ, தூதனே! யம*-நியம** அனுஷ்டானங்களால் எவர்களுடைய பாவக்குவியல்கள் தொலைவுக்குப் போய் விட்டனவோ, எவர்களுடைய உள்ளம், நிரந்தரமாக ஸ்ரீஅச்யுதனிடமே பற்றுக் கொண்டிருக்கிறதோ; எவர்களிடம் கர்வம், அகம்பாவம், பொறாமைகள் சிறிதளவு கூட ஒட்டிக் கொண்டிருக்கவில்லையோ - அந்த மனிதர்களை நீ தூரத்தி லேயே விட்டு விலகி விட வேண்டும்.

---

* *அஹிம்ஸை, சத்தியம், களவாமை, பிரம்மசர்யம், பொருள் சேர்க்காமை-இவ்வைந்தும் 'யமம்' எனப்படும்.*

** *உள்ளும் வெளியும் தூய்மை, மனநிறைவு, தவம், ஸ்வாத்யாயம், ஈசுவரனை சரண் அடைதல்-இவ்வைந்தும் 'நியமம்' எனப்படும்.*

கத்தி, சங்கு, கதைகளை வைத்துக் கொண்டுள்ள அநாதியும் அவ்யயமாகவும் உள்ள பகவான் ஹரி, ஒருவன் உள்ளத்தில் வீற்றிருக்கிறார்-என்றால், பாவங்களை அழிக்க வல்லவரான பகவான் மூலம் அவனுடைய பாவங்கள் எல்லாம் மறைந்து போய்விடுகின்றன. சூரியன் இருக்குமிடத்தில் இருள் எப்படி இருக்க முடியும்?

எவருடைய உள்ளத்தில் பகவான் அனந்தன் நிலையாகக் குடியேறிய பின், ‘இவ்வுலகங்கள் எல்லாமும் நானும், ஒரே ஒரு பரமபுருஷனான, தன்னேரில்லாத் தலைவனான வாசுதேவனே’-என்ற ஞானம் எவர்களுக்கு ஏற்பட்டிருக்கிறதோ, அவர்களை தூரத்திலேயே விட்டுவிட்டு நீ போய்விட வேண்டும்.

கமலநயந வாஸுதே$_3$வ விஷ்ணோ த$_4$ரணி த$_4$ராச்யுத ஶங்க$_2$சக்ரபாணே ।
ப$_4$வ ஶரணமிதீரயந்தி யே வை த்யஜ ப$_4$ட தூ$_3$ரதரேண தாநபாபாந் ॥

*(ஏ, தாமரைக்கண்ணா! ஏ, வாசுதேவா! ஏ, விஷ்ணோ! உலகத்தைத் தாங்குபவனே! அச்யுதனே! சங்கு-சக்ரம் தரித்தவனே! நீ எங்களுக்கு அடைக்கலம் அளிக்க வேண்டும்-இவ்வாறு அரற்றி அழைக்கும் மனிதர்கள் பாவமற்றவர்கள். நீ, தொலைவில் இருந்தபடியே இவர்களை விட்டு நீங்கி விட வேண்டும்.)*

வஸதி மநஸி யஸ்ய ஸோऽவ்யயாத்மா புருஷவரஸ்ய ந தஸ்ய த்$_3$ருஷ்டிபாதே ।
தவ க$_3$திரத$_2$ வா மமாஸ்தி சக்ர-ப்ரதிஹதவீர்யப$_3$லஸ்ய ஸோऽந்ய லோக்ய: ॥

*(விஷ்ணு புராணம்-அம்சம் 3, அத்.7ல் வரும் சுலோகங்கள்)*

*(எந்தப் புருஷசிரேஷ்டனுடைய உள்ளத்தில், அவ்யயாத்மா பகவான் அமர்ந்திருக்கிறாரோ, அவனுடைய பார்வை எவ்வளவு தூரம் வரையில் படுகிறதோ அவ்வளவு தூரம் வரை பகவானுடைய ஆயுதமான சக்கிரத்தின் பிரபாவத்தினால், நம்முடைய பலம்-வீர்யம் தோற்றுப் போய் விடுவதால், உன்னுடைய அல்லது என்னுடைய அதிகாரம் அங்கு பயன் படுவதில்லை. அந்த மகாபுருஷன், வேறொரு வைகுண்டம் முதலிய உலகங்களுக்கு அதிபதியாகத் தக்கவன்.)*

அநன்யமான, தூய பகவத்பக்தியின் (சரணாகதியின்) மகத்தான பிரபாவம், இவ்வாறு உள்ளது. ஆகவே, நாம்

எல்லோரும் மேலே சொல்லப்பட்ட முறைப்படி நம்முடைய மனம், புத்தி, பொறிகள், உடல் ஆகிய எல்லாவற்றையும் பகவானிடமே ஈடுபடுத்தி, ஒவ்வொரு அடியிலும் அவருடைய அளவற்ற தயையை உணர்ந்து மகிழ்ந்து, அவரைத் திருப்திப்படுத்துவதிலேயே நாம் திருப்தியும் மகிழ்ச்சியும் கொள்ள வேண்டும். இதன்மூலம், வெகு விரைவிலேயே பரமபதத்தை அடைந்துவிட முடியும். இதுவே பகவானை அடைவதற்கான மிக மிக எளிய முறை ஆகும். அதனால் தான், யோகீஸ்வரர் ஸ்ரீகவி சொல்கிறார் -

காயேந வாசா மநஸேந்த்ரியைர்வா புத்$_3$த்$_4$யாऽऽத்மநா வாநுஸ்ருதஸ்வபாவாத் ।
கரோதி யத்$_3$ யத் ஸகலம் பரஸ்மை நாராயணாயேதி ஸமர்ப்பயேத் தத் ॥

*(ஸ்ரீமத் பாகவதம் : 11-2-36)*

*(மனிதன் தன்னுடைய சரீரம், சொல், மனம், பொறிகள், புத்தி, ஆத்மாவினாலோ, அல்லது, பரம்பரையாக வந்துள்ள இயற்கை உணர்வினாலோ என்னென்ன செய்கிறானோ, அவையெல்லாம் பரமபுருஷனான பகவான் நாராயணன் பொருட்டே-என்று அவருக்கே அர்ப்பணம் செய்துவிட வேண்டும்.)*

## 7. ஒருமுகப்பட்ட பக்தியினால் பகவத் தரிசனம்

கீதையில், பகவான் எங்கெல்லாம் பக்தியைப் பற்றி விளக்கியிருக்கிறாரோ, அங்கெல்லாம் பக்தி, பஜன், பிரேமை என்ற கருத்துடைய சொற்களையே உபயோகப்படுத்தி யுள்ளார். இதனால், பக்தி மார்க்கத்தில் பிரேமைக்கு முக்கியத் துவம் இருக்கிறது என்பது தெளிவாகிறது. பகவான் அர்ஜுனனிடம் சொல்கிறார் -

யே யத$_2$ா மாம் ப்ரபத்$_3$யந்தே தாம்ஸ்ததை$_2$வ ப$_4$ஜாம்யஹம் ।

*(கீதை-4/11)*

*('பக்தன் என்னை எந்த விதமாக அணுகுகிறானோ, நான் அதே விதமாக அவனை அணுகுகிறேன்.')*

இங்கு 'யத$_2$ா' என்ற சொல், 'முறை' என்ற பொருளில் வந்திருக்கிறது. அதாவது, 'எவன் என்னை தியானம் செய்கிறானோ, நான் அவனைத் தியானம் செய்கிறேன்.'

மகாபாரதத்தில் ஒரு நிகழ்ச்சி விளக்கப்பட்டுள்ளது. ராஜ்யத்தை அடைந்த பின்னர், மன்னர் யுதிஷ்டிரர், தன்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்வதற்காக ஸ்ரீகிருஷ்ணனிடம் சென்றார். 'பிரபூ! தங்கள் கிருபையால் எங்களுக்கு இந்த அரசு கிடைத்திருக்கிறது.' இதைக் கேட்டும், பகவான் எதுவும் பதில் சொல்லவில்லை. ஏனென்றால், அவர் அந்த நேரத்தில் தியானத்தில் ஆழ்ந்திருந்தார். அப்போது யுதிஷ்டிரர் ஆச்சரியத்துடன் கேட்டார் : 'தாங்கள் எல்லையற்ற பராக்ரமம் உடையவர்; எல்லா உலகங்களுக்கும் அடைக்கலம் கொடுப்பவர்; புருஷோத்தமன்! அப்படிப்பட்ட தாங்கள் யாரைத் தியானம் செய்கிறீர்கள்?'

பகவான் சொன்னார் -

ஶரதல்பக$_3$தோ பீ$_4$ஷ்ம: ஶாம்யந்நிவ ஹுதாஶந: ।
மாம் த்$_4$யா தி புருஷவ்யாக்$_4$ரத்ததோ மே தத்க$_3$தம் மந: ॥
*(சாந்திபர்வம்-46/11)*

*('மன்னா! அம்புப் படுக்கையில் கிடக்கும் பீஷ்மர், இப்போது, அணைந்து கொண்டிருக்கும் அக்னியைப் போல் இருக்கிறார்; அவர் என்னைத் தியானம் செய்து கொண்டிருக்கிறார்; அதனால், என்னுடைய மனமும் அவரிடம் சென்றுவிட்டது.')*

பீஷ்மருக்குப் பகவானிடம் எவ்வளவு பக்தி இருந்தது என்பது இதனால் தெரியவருகிறது. பகவானுடைய இயல்பையும் எண்ணிப் பார்க்க வேண்டும்-அவருக்குத் தான், எவ்வளவு நல்ல இதயம்! பகவான், எல்லோருக்கும் ஸுஹ்ருத்-காரணமில்லாத கருணையும் அன்பும் காட்டக் கூடியவர்! இவ்விதம் அவரை அறிந்து கொள்பவருக்கு அமைதி கிடைக்கிறது. பகவான் சொல்கிறார் -

ஸுஹ்ருத$_3$ம் ஸர்வபூ$_4$தாநாம் ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம்ருச்ச$_2$தி ॥
*(கீதை-5/29)*

*('என்னுடைய பக்தன், என்னை எல்லாப் பிராணிகளுக்கும் ஸுஹ்ருத்-சுயநலமில்லாத தயை காட்டுபவன், அன்பு*

*செலுத்துபவன்-என்ற உண்மையை அறிந்து அமைதியை அடைகிறான்.')*

சூரியனுடைய ஒளி எல்லா இடங்களிலும் சமமாகத் தான் விழுகிறது. ஆனால், கண்ணாடியில், சூரியனின் பிரதி பிம்பம் ஏற்பட்டு, நேரில் பார்ப்பது போலவே தோன்றுகிறது; மரம்-கல் முதலியவற்றில் இப்படி இல்லை. இதே போல, பகவான் எல்லா இடங்களிலும் சமமாகத் தான் விளங்குகிறார்; ஆனால், கண்ணாடியைப் போல் தூய உள்ளமும், பகவானிடம் பக்தியும் செலுத்துபவர்களின் உள்ளத்தில், விசேஷமாக விளங்குகிறார். பகவான் தானே சொல்கிறார் -

ஸமோऽஹம் ஸர்வபூ$_4$தேஷு ந மே த்$_3$வேஷ்யோऽஸ்தி ந ப்ரிய:।
யே ப$_4$ஜந்தி து மாம் ப$_4$க்த்யா மயி தே தேஷு சாப்யஹம்॥
*(கீதை-9/29)*

*('நான் எல்லாப் பிராணிகளிடமும் சமமாக வியாபித்துள்ளேன்; எனக்குப் பிரியமானவர் என்று யாரும் இல்லை; பிரிய மில்லாதவர் என்றும் யாரும் இல்லை. ஆனால், ஆழமான அன்போடு என்னை வழிபடுகிற பக்தர்கள் என்னுடனேயே இருக்கிறார்கள்; நான் அவர்களுடனேயே இருக்கிறேன்.')*

பகவானிடம் நிஷ்காமபாவத்துடன் ஒருமுகப்பட்ட அன்பு செலுத்துபவனிடம், பகவானும் அதே மாதிரி அன்பு செலுத்துகிறார். பகவான் கீதையில் கூறுகிறார் -

தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகப$_4$க்திர்விஶிஷ்யதே।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த$_2$மஹம் ஸ ச மம ப்ரிய:॥
*(7-17)*

*('அவர்களுள், ஒருமுகப்பட்ட பாவத்துடன், வேறெங்கும் செல்லாத மனத்துடன் பிரேமபக்தி செலுத்தும் நிஷ்காமனான ஞானபக்தர் மிகச் சிறந்தவர்; ஏனென்றால், என்னை உண்மை யாக அறியும் ஞானிக்கு நான் மிகவும் பிரியமானவன்; அவரும் எனக்கு மிகவும் பிரியமானவர்.')*

இது மட்டுமன்று; பக்தன், பிரேமையோடு எதைக் கொடுத்தாலும், பகவான் வெளிப்பட்டு அதனை ஏற்றுக் கொள்கிறார்.

பத்ரம் புஷ்பம் ப$_2$லம் தோயம் யோ மே ப$_4$க்த்யா ப்ரயச்ச$_2$தி।
தத$_3$ஹம் ப$_4$க்த்யுபஹ்ருதமஶ்நாமி ப்ரயதாத்மந:॥
(9-26)

*('பக்தனொருவன், பிரேமையோடு, இலை, மலர், பழம், தண்ணீர் முதலியவற்றை அர்ப்பணித்தால், தூய உள்ளம் கொண்ட, தன்னலம் கருதாத, அன்புமிகுந்த அந்த பக்தன் ஆசையோடு அளிக்கும் இலை-மலர் முதலியவைகளை, நான் சகுண வடிவில் வெளிப்பட்டு அன்போடு ஏற்றுக் கொள்கிறேன்.')*

ஆகவே,

யத்கரோஷி யத$_3$ஶ்நாஸி யஜ்ஜுஹோஷி த$_3$தா$_3$ஸி யத்।
யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மத$_3$ர்பணம்॥
(9-27)

*('அர்ஜுனா! நீ செய்யும் கர்மாக்களையும், உண்ணும் உணவு களையும், அக்னியில் சொரியும் அவியையும், கொடுக்கும் தானத்தையும், செய்யும் தவத்தையும்-எனக்கு அர்ப்பணம் செய்து விடு.')*

ஶுப$_4$ாஶுப$_4$ப$_2$லைரேவம் மோக்ஷ்யஸே கர்மப$_3$ந்த$_4$நை:।
ஸந்ந்யாஸயோக$_3$யுக்தாத்மா விமுக்தோ மாமுபைஷ்யஸி॥
(9-28)

*('இவ்விதம் எல்லாக் கர்மாக்களையும் பகவானான எனக்கு அர்ப்பணம் செய்தல் என்ற சந்யாஸ யோகத் துறவு உள்ளம் கொண்ட நீ நல்ல, மற்றும், தீய பயன் வடிவான கர்மத் தளையிலிருந்து விடுபட்டு, என்னை அடைவாய்.')*

அதனால், பக்தி என்ற ஆன்மிகப் பயிற்சி, மற்ற சாதனைகளைக் காட்டிலும் எளியதாக இருக்கிறது.

அநந்யசேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ:।
தஸ்யாஹம் ஸுலப$_4$: பார்த$_2$ நித்யயுக்தஸ்ய யோகி$_3$ந:॥
(8-14)

*('அர்ஜுனா! என்னிடம் மாறாத அன்பு கொண்டு எப்போதும் புருஷோத்தமனான என்னை ஸ்மரித்துக் கொண்டிருப்பவர்,*

*என்னிடமே நித்திய நிரந்தரமாக ஈடுபட்டுள்ள அந்த யோகிக்கு நான் சுலபன்; (அதாவது) எளிதில் அடையத் தக்கவன்.')*

நித்திய நிரந்தரமாகப் பகவானை நினைத்துக் கொண் டிருந்தால், சுலபத்தில் அவரை அடைந்துவிட முடியும்; ஆனால், பகவானையே எப்போதும் நினைத்துக் கொண்டிருப் பது கடினமாயிருக்கிறதே?-என்றால், பகவானிடம் சிரத்தை, ஆழ்ந்த பக்தி, நம்மவர் என்ற உறவு ஏற்பட்டால், கடினம் இல்லை; ஏனென்றால், இப்படிப்பட்ட நினைவு ஏற்பட்ட பின்னர், பகவானைப் பற்றிய சிந்தனை தானாகவே நிரந்தர மாகத் தங்கிவிடுகிறது-என்று தான், அதற்குப் பதிலாகக் கூறமுடியும். அவ்வாறே, பகவானிடம், இயல்பாகவே பிரேமை தோன்றவேண்டும்; ஏனென்றால், உண்மையில், பகவானை விட்டால் நம் நலன்விரும்பி வேறு யாரும் இல்லவே இல்லை; அவருடன் ஜீவனுக்கு நிரந்தரமான சம்பந்தம் இருக்கிறது. சத் சங்கத்திலிருந்தும் சாஸ்திரங்களி லிருந்தும் பகவானுடைய குணம், பிரபாவம், தத்துவம், ரகசியம் முதலியவற்றைத் தெரிந்துகொண்டதும், அவரிடம் இயல்பாகவே அன்பு உண்டாகிறது; ஏனென்றால், பகவானுக்கு நிகரான நற்குணங்களும் பேராற்றலும் படைத்தவர் வேறு யாரும் இல்லை; அவ்வாறே, பகவானிடம் பக்தி என்ற சாதனைக்கு நிகரான வேறு சாதனையும் இல்லை. முழு நம்பிக்கையோடு பக்தி செலுத்தும் பக்தனை, சிறப்பாகப் புகழ்ந்திருக்கிறார், பகவான்.

யோகி$_3$நாமபி ஸர்வேஷாம் மத்$_3$க$_3$தேநாந்தராத்மநா ।
ஶ்ரத்$_3$த$_4$ாவாந்ப$_4$ஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத: ॥

(6-47)

*('யோகிகள் எல்லோரிலும், என்னிடம் நிலைப்பட்ட அந்தராத்மாவுடன் நிரந்தரமாக என்னை வழிபடுகிறவர், எனக்கு மிகவும் சிரேஷ்டமானவர்.')*

'ஸகுண உபாசனை சிறந்ததா? அல்லது, நிர்குண உபாசனை சிறந்ததா?' என்று அர்ஜுனன் கேட்டபோது, சகுண உபாஸனையே மேலானது என்று பகவான் பதில் கூறினார்.

மய்யாவேஶ்ய மநோ யே மாம் நித்யயுக்தா உபாஸதே।
ஶ்ரத்$_3$த$_4$யா பரயோபேதாஸ்தே மே யுக்ததமா மதா:॥
(12-2)

*('என்னிடமே மனத்தைச் செலுத்தி, நித்திய நிரந்தரமாக என் பஜனை-தியானத்தில் ஈடுபட்டு, மிகவும் உறுதியாக என் ஸகுண வடிவத்தை வழிபடும் பக்தர்கள், யோகிகளைக் காட்டிலும் மேலான, உத்தம யோகிகள் என்று மதிக்கத் தக்கவர்கள்.')*

அத்துடன், நிர்குண-நிராகார சாதனை கடினம் என்று பன்னிரெண்டாம் அத்தியாயம் ஐந்தாவது சுலோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தொடர்ந்து, ஸகுண-ஸாகார உபாஸனையால், விரைவில், ஆன்மிக முன்னேற்றம் ஏற்படும் என்ற விஷயம் பேசப்பட்டிருக்கிறது.

யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பரா:।
அநந்யேநைவ யோகே$_3$ந மாம் த்$_4$யாயந்த உபாஸதே॥
தேஷாமஹம் ஸமுத்$_3$த$_4$ர்த்தா ம்ருத்யுஸம்ஸாரஸாக$_3$ராத்।
ப$_4$வாமி நசிராத்பார்த$_2$ மய்யாவேஶிதசேதஸாம்॥
(12-6,7)

*('ஆனால், என்னிடம் முழுமையாக ஈடுபட்ட பக்தர்கள், எல்லாச் செயல்களையும் எனக்கு அர்ப்பணித்து, ஸகுண வடிவம் கொண்ட உயர்ந்த ஈசுவரனான என்னையே ஒருமுகப் பட்ட பக்தியோகத்தினால், எப்போதும் ஸ்மரித்துக் கொண்டு வழிபாடு செய்கிறார்கள். அர்ஜுனா! என்னிடம் சித்தத்தைச் செலுத்திவிட்ட அந்தப் பிரேம பக்தர்களை, சீக்கிரத்திலேயே, மரண வடிவான சம்சார சாகரத்திலிருந்து கரையேற்றி விடுகிறேன்.')*

இத்துடன் நின்றுவிடவில்லை. பாவிகளுக்குள்ளே மிகக் கொடூரமான பாவியாக இருந்தாலும், ஒருமுகப்பட்ட பக்தியின் தாக்கத்தால், விரைவிலேயே மேலான அமைதியைப் பெறுகிறான்.

அபி சேத்ஸுது$_3$ராசாரோ ப$_4$ஜதே மாமநந்யப$_4$াக்।
ஸாது$_4$ரேவ ஸ மந்தவ்ய: ஸம்யக்$_3$வ்யவஸிதோ ஹி ஸ:॥

க்ஷிப்ரம் ப$_4$வதி த$_4$ர்மாத்மா ஶஶ்வச்ச$_2$ாந்திம் நிக$_3$ச்ச$_2$தி।
கௌந்தேய ப்ரதிஜாநீஹி ந மே ப$_4$க்த: ப்ரணஶ்யதி॥
*(9-30,31)*

*('மிகவும் கொடிய நடையோனாயினும், வேறுபடாத மனத்துடன் என்னை வழிபடுபவன், நல்லவன் என்றே கருதத் தக்கவன்; ஏனெனில், சீரிய வழியில் முயலத் தொடங்கி விட்டான். அவன் விரைவில் அறநெறிப்பட்ட சான்றோன் ஆவான்; நித்திய சாந்தியும் அடைவான்; குந்தியின் மகனே! என்னுடைய பக்தன் அழிந்து போகமாட்டான்-என்பதை உறுதியான உண்மை என்று அறிந்துகொள்.')*

பகவானிடம் ஒருமுகப்பட்ட பக்தி, அதாவது, ஒருமுகப் பட்ட பிரேமையுடைய பக்தன், பகவத் தரிசனம், மெய்யறிவு, ஏன், பகவானுடன் ஒன்றிவிடுதலையும் கூட அடைய முடியும்.

ப$_4$க்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதே$_4$ாऽர்ஜுந।
ஜ்ஞாதும் த்$_3$ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப॥
*(11-54)*

*('எதிரிகளை வாட்டும் அர்ஜுனா! வேறிடஞ் செல்லாத பக்தியால் மாத்திரமே, என்னை இவ்விதமாக நேரில் காணவும், உள்ளபடி அறியவும், என்னுள் புகவும் முடியும். அதாவது, ஒன்றிவிடும் தன்மையை அடைய இயலும்.')*

'ஞானம் ஏற்படாமல் முக்தி கிடைக்காது என்று அறநூல்களில் கூறப்பட்டிருக்கிறதே?' என்று கேட்பவர்களுக்கு 'அது சரி தான். ஆனால், பக்தி செய்கிறவர்களுக்கு, பகவான், தானே ஞானத்தைக் கொடுத்து விடுகிறாரே!' என்பது பதில்.

தேஷாம் ஸததயுக்தாநாம் ப$_4$ஜதாம் ப்ரீதிபூர்வகம்।
த$_3$தா$_3$மி பு$_3$த்$_3$தி$_4$யோக$_3$ம் தம் யேந மாமுபயாந்தி தே॥
*(10-10)*

*('நிரந்தரமாக என்னையே தியானம் முதலிய வழிகளாலும் பக்தியோடும் வழிபடும் அடியார்களுக்கு தத்துவஞான யோகத்தை வழங்குகிறேன்; அதனால் அவர்கள் என்னையே அடைந்து விடுகிறார்கள்.')*

ஆதலால், பக்தியோகத்தில், பகவானிடம் வேறிடஞ் செல்லாத, தூயதான, உறுதியான பிரேமை கொண்டிருப்பது தான் முக்கியம். அவ்விதம் மிக உயர்ந்த நிலையான பக்தியைப் பெற விரும்பும் சாதகர்கள், தங்களுடைய நேரத்தை மூன்று பகுதிகளாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். 1) தனித்திருந்து சாதனை புரியும் காலம். 2) உலக விவகார காலம். 3) படுக்கும் காலம். இவைகளை எவ்வாறு பங்கிட்டு மிக அதிக உபயோகமான முறையில் செலவழிக்கலாம் என்பதை, இனி, விரிவாகப் பார்ப்போம்.

### அ) தனித்திருந்து சாதனை புரியும் காலம்.

பக்தியோக சாதகர்கள், தனிமையில் அமர்ந்து, ஜபம்-தியானம்-பூஜை-பாராயணம்-துதி-வேண்டுதல் முதலியவற்றை பின்வரும் முறையில் செய்ய வேண்டும்.

1) ஜபம் :- ஜலம், பானி, நீர், அப்பு, வாட்டர் என்ற எல்லா வார்த்தைகளும் தண்ணீரையே குறிக்கின்றன; அது போலவே, ஓம், ஹரி, ராம், கிருஷ்ண, பகவான், நாராயண, வாசுதேவ, அல்லா, குதா, காட் என்று பகவானுக்கு ஆயிரக்கணக்கான பேர்கள் இருக்கின்றன. இவையெல்லாம் சமமான தெய்விக மதிப்புடையவை. ஆனால், யார் யாருக்கு எந்தெந்தப் பெயரில் ருசி, நம்பிக்கை, ஈடுபாடு அதிகமாக இருக்கிறதோ, அந்தப் பெயர் அவருக்கு அதிகப் பலனைக் கொடுக்கும். வாய்விட்டு, பிறர் செவியில் விழும்படியாக உரத்த குரலில் செய்யப்படும் ஜபத்தைக் காட்டிலும், அடுத்தவர் செவியில் விழாமல் உதட்டசைவுடன் செய்யப்படும் ஜபம் உயர்வானது; இந்த உபாம்சு ஜபத்தைக் காட்டிலும் மனத்துக்குள்ளேயே செய்யப்படும் மானஸிக ஜபம் மிகவும் மேலானது. மனு சொல்கிறார் -

விதி$_4$யக்ஞாத் ஜபயக்ஞோ விசிஷ்டோ தஶபி$_4$ர்குணை:।
உபாம்ஶு: ஸ்யாச்ச$_2$தகுண: ஸாஹஸ்ரோ மாநஸ: ஸ்ம்ருத:॥

*(மனுஸ்ம்ருதி-2/85)*

*('வேத வேள்வியைக் காட்டிலும் ஜபயக்ஞம் பத்து மடங்கும், உபாம்சு ஜபம் நூறு மடங்கும், மானஸ ஜபம் ஆயிரமடங்கும் உயர்வானதாகச் சொல்லப்படுகிறது.')*

2) தியானம் :- பகவானை நிராகாரம், ஸாகாரம் என்று இரு வகையில் தியானம் செய்யலாம். ஸாகாரத்திலும் சிவன், விஷ்ணு, ராமன், கிருஷ்ணன் என்றெல்லாம் பல்வேறு வடிவங்கள். இவைகளில் எந்த வடிவத்தில் மனம் ஈடுபட்டு லயிக்கிறதோ, அந்த மூர்த்தியையே தியானம் செய்வது சிறப்பான பலன்களைத் தரும். அத்துடன், பகவானுடைய உருவத் தோற்றத்தைத் தியானம் செய்யும்போது, பகவானுடைய குணம்-பிரபாவம்- தத்வம்-ரகஸ்யம் ஆகியவைகளையும் உணர்ந்து தியானம் செய்யப்படுமேயானால், அது மேலும் பயனைத் தரும்.

3) பூஜை :- கோவில்களிலோ, வீடுகளிலோ, தன்னுடைய இஷ்ட தெய்வத்துக்குப் பதினாறு வகை உபசாரங்களுடன் ஆகமநூல் முறைப்படி, பக்தி-சிரத்தையோடு பூஜை செய்வது சிறந்தது. இதைக் காட்டிலும் மேலானது-தன்னுடைய உள்ளம் என்னும் கோவிலிலோ, அல்லது, வெளியே ஆகாச வெளியிலோ தன் இஷ்ட தெய்வத்தின் வடிவத்தை ஸ்தாபித்து, மனத்தினாலேயே, மனத்தில் பூஜை சாமான்களை ஸ்மரித்துக் கொண்டு, விதிப்படி பதினாறு வகை உபசாரங்களுடன் பூஜை செய்வது. வெளியே செய்யப்படும் பூஜை (அதாவது, கோவில் அல்லது வீட்டில் சிலா மூர்த்தங்களுக்குச் செய்யப்படும் பூஜை), மன ஈடுபாடு இல்லாமலே கூட நடந்தேறிவிடும்; ஆனால், மானஸிக பூஜை, மன ஈடுபாடு இல்லாமல் செய்ய முடியாது; அதனால், பூஜைக்குரிய சாமான்களை சேகரித்து வைத்துக் கொண்டு தேவதா வடிவங்களுக்குச் செய்யப்படும் பாஹ்ய பூஜையைக் காட்டிலும், (சாமான்கள் எதுவும் இல்லாமல்) மனத்தால் செய்யப்படும் மானஸிக பூஜை மிகவும் உயர்வானது.

பகவான் எல்லா உயிர்ப்பிராணிகளையும் உற்பத்தி செய்கிறார்; காப்பாற்றுகிறார் என்றும், எல்லாப் பிராணிகளிடத்திலும் வியாபித்திருக்கிறார் என்பதையும் உணர்ந்து, பகவானாகவே எல்லா உயிர்களையும் கருதி, சேவை, கௌரவம் செய்வது-இப்படி எங்கும் நீக்கமற நிறைந்தவராகப் பகவானைப் பூஜை செய்வது, முன்பு கூறிய மானஸிக பூஜையைக் காட்டிலும் கூட உயர்வானது. இந்தப் பூஜையைச் செய்யும் முறையை, பகவான், கீதையில், பின்வருமாறு விளக்கியுள்ளார்.

யத: ப்ரவ்ருத்திர்பூ$_4$தாநாம் யேந ஸர்வமித$_3$ம் ததம்।
ஸ்வகர்மணா தமப்$_4$யர்ச்ய ஸித்$_3$தி$_4$ம் விந்த$_3$தி மாநவ:॥
*(18/46)*

*('எந்தப் பரமேசுவரனால் அனைத்து உயிர்ப் பிராணிகள் தோன்றியிருக்கின்றனவோ, எவரால் இவ்வுலகனைத்தும் வியாபிக்கப் பட்டிருக்கிறதோ, அந்தப் பரமேசுவரனை, தன் இயல்பான கர்மாக்களால் பூஜை செய்யும் மனிதர், மிக மேலான ஸித்தியை அடைகிறார். (பரமபதத்தை அடைகிறார்'.)*

4) பாராயணம் (ஸ்வாத்யாயம்) :- சுருதி, ஸ்ம்ருதி, இதிகாசம், புராணம், கீதை, ராமாயணம், பாகவதம், ஸ்தோத்திரம் முதலிய சமய நூல்களை, நாம் சாதாரணமாகப் புத்தகம் படிப்பதைப் போலல்லாமல், அந்தந்த நூல்களில் விளக்கப்படும் பகவானுடைய குண-பிரபாவ நிகழ்ச்சிகளின் தத்வ-ரகசியத்தைப் புரிந்து கொண்டு சிந்தனை செய்வது சிறப்பான பயனைத் தரும்.

5) துதி :- பகவானுடைய குணங்களை இசைப்பது, துதி செய்தல் எனப்படுகிறது. அர்ஜுனன் கீதையில், பகவான் ஸ்ரீகிருஷ்ணனைத் துதி செய்திருக்கிறானே, அது போன்றது.

பரம் ப்$_3$ரஹ்ம பரம் தா$_4$ம பவித்ரம் பரமம் ப$_4$வாந்।
புருஷம் ஶாஶ்வதம் தி$_3$வ்யமாதி$_3$தே$_3$வமஜம் விபு$_4$ம்॥
ஆஹுஸ்த்வாம்ருஷய: ஸர்வே தே$_3$வர்ஷிர்நாரத$_3$ஸ்ததா$_2$।
அஸிதோ தே$_3$வலோ வ்யாஸ: ஸ்வயம் சைவ ப்$_3$ரவீஷி மே॥
*(10-12,13)*

*('தாங்கள் பரப்ரம்மம்; பரந்தாமம்; பரம பவித்ரம்; ஏனெனில், எல்லா முனிவர் கூட்டங்களும், தங்களை, மிகப் பழைமை யானவர்; திவ்ய புருஷர்; தேவதேவர்; பிறப்பில்லாதவர்; எங்கும் நிறைந்தவர் என்று சொல்கின்றன. அவ்வாறே தேவரிஷி நாரதர், அஸிதர், தேவலர் முதலிய ரிஷிகளும், மகரிஷியான வியாஸரும் சொல்கிறார்கள்; தாங்களும் என்னிடம் அப்படித் தான் சொல்கிறீர்கள்.')*

இவ்விதம், கீதையிலும் பல்வேறு நூல்களிலும் பகவான் பற்றிய துதிகள் பலவாறாகக் காணப்படுகின்றன.

அந்தத் துதிகளை, பகவானுடைய குண-பிரபாவ நினைவு களோடு பக்தி-சிரத்தையோடு இசைப்பதும் சிறந்த பலன்களைத் தரும்.

6) வேண்டுதல் (பிரார்த்தனை) :- ஒரு காரியம் நிறைவேற வேண்டுமென்பதற்காக, குறிப்பிட்ட ஒரு பொருளை அடைய வேண்டும் என்பதற்காக பகவானை யாசித்தல், 'பிரார்த்தனை' (வேண்டுதல்) எனப்படும். நான்கு கைகளோடு தரிசனம் கொடுக்க வேண்டுமென்று, அர்ஜுனன், கீதையில் பகவானைப் பிரார்த்திக்கிறானே, அது போல.

**கிரீடிநம் க$_3$தி$_3$நம் சக்ரஹஸ்த-மிச்ச$_2$ாமி த்வாம் த்$_3$ரஷ்டுமஹம் ததை$_2$வ ।**
**தேநைவ ரூபேண சதுர்பு$_4$ஜேந ஸஹஸ்ரப$_3$ாஹோ ப$_4$வ விஶ்வமூர்தே ॥**
*(11-46)*

*('சிரசில் கிரீடம், கைகளில் கதை-சக்ரம் தரித்துக் கொண்ட தங்களைக் காண விரும்புகிறேன்; உலக வியாபியே! ஆயிரம் கரங்கள் உடையவரே! நான்கு புஜங்கள் கொண்ட தங்கள் அந்த உருவத்தைக் காட்டி அருளுங்கள்.')*

இதே போல், பக்தர்கள் பலவிதமாகப் பகவானைப் பிரார்த்தித்திருக்கிறார்கள் (யாசித்திருக்கிறார்கள்.)

பற்பல நூல்களில் இவை பற்றிய விபரங்களைக் காணலாம். பிரார்த்தனையும் கூட, பகவானுடைய தத்வ-ரகசியத்தை அறிந்து கொண்டு, பக்தி-சிரத்தையுடன், வேறிடஞ்செல்லாத, தூய அன்பு பகவானிடம் ஏற்பட வேண்டும் என்பதற்காக செய்யப்படுமானால், அது மிகவும் உத்தமமானது.

மேலே சொல்லப்பட்ட ஆறு சாதனை முறைகளில், எப்போது, எதைச் செய்தாலும், அதை-1) பாவத்தையும் பொருளையும் புரிந்து கொண்டு, 2) மிகவும் சிரத்தையுடன், 3) வேறிடஞ்செல்லாத தூய அன்புடன், 4) மனம் லயித்து, 5) ரகசியமாக, 6) நிஷ்காமமாகச் செய்ய வேண்டும். இவ்வித மாகச் செய்யப்படும் சாதனையின் மகத்துவம், ஆயிரமாயிரம் மடங்கு பெருகிவிடுகிறது.

இந்த ஆறு பிரகாரமான சட்டதிட்டம் பற்றிப் பார்ப்போம்.

1) **பாவத்தையும் பொருளையும் புரிந்து கொள்ளுதல்.** ஜபம், தியானம், பூஜை, பாராயணம், துதி, பிரார்த்தனையை பாவத்தையும் பொருளையும் புரிந்து கொண்டு செய்தல் என்றால், எந்த ஒரு ஜபம், தியானம், பூஜை, பாராயணம், துதி, பிரார்த்தனை செய்தாலும், அதனுடைய உண்மையான கருத்து (உணர்வு) மற்றும் தத்வ-ரகசியம் இவற்றைத் தெள்ளத்தெளிவாக அறிந்து கொண்டு செய்தல் ஆகும்.

2) **மிகவும் சிரத்தை :-** எந்த ஒரு வஸ்துவிடமும், நேரில் பார்க்கிற மாதிரி விசுவாசமும் வணக்கமும் ஏற்படகிறதோ, அதற்குப் பெயர், சிரத்தை; எதனிடம், நேரில் பார்ப்பதையும் மீறி, வணக்கத்தோடு கூடிய விசுவாசம் ஏற்படுகிறதோ, அதற்கு 'பரம சிரத்தை' (மிகவும் சிரத்தை) என்று பெயர்.

'முதலில், உனக்கு ஒரு பெண் குழந்தை பிறக்கும்; பின்னர், அதுவே ஆணாக மாறும்' என்று, துருபத மன்னனுக்கு, பகவான் கைலாசபதி வரம் கொடுத்தார். இதற்கு ஏற்ப, அரசருக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. ஆனால், சிவபெருமானின் சொற்களில் உறுதியான நம்பிக்கை கொண்டிருந்ததால், அந்தக் குழந்தையை ஆண் என்றே மதித்து, ஆண்பால் பெயரான சிகண்டி என்றே பெயர் வைத்தார். தசார்ண தேச மன்னர் ஹிரண்யவர்மனின் புத்திரியுடன் திருமணமும் செய்து வைத்தார். பரமசிவனின் வரனுக்கு ஏற்ப, பின்னர் உரிய காலத்தில், சிகண்டி, ஆண் தன்மையை அடைந்தான். (மகாபாரதம்; உத்யோக பர்வம்). இதற்குப் பெயர், 'பரம சிரத்தை'-கண்ணால் காண்பதையும் மீறிய நம்பிக்கை.

3) **வேறிடஞ்செல்லாத தூய அன்பு :-** ஒருவரேயான பகவான் தான், எல்லோரிலும் மேலானவர்; அவர் நம் தலைவர்; அடைக்கலம் அடையத் தக்கவர்; பரம கதி; உயர்ந்த பற்றுக்கோல். அவர் தான் தாய்-தந்தை; சகோதரர்-உறவினர்; பேருதவி செய்பவர்; செல்வம்; அவரைத் தவிர நமக்கு உற்ற நண்பர் வேறு யாருமிலர்- இவ்வாறு எண்ணிக் கொண்டு, தன்னலமில்லாமல், மிகவும் சிரத்தையோடு, வேறிடஞ் செல்லாத, நிஷ்காம பிரேமை ஏற்பட்டால், அவரைத் தவிர வேறு எவரிடமும் அன்பு தோன்றவில்லையோ-அந்த உன்னத நிலையை, (அனன்ய விசுத்த பிரேமை) 'வேறிடஞ்

செல்லாத தூய அன்பு' என்கிறார்கள். இதனுடைய விளக்கம் பகவத் கீதை, பதினொன்று, பதிமூன்று, (10) பதிநான்காவது (26) அத்யாயங்களில் காணலாம். (இதன் விரிவுரையை, கீதா தத்வவிவேசனீயில் காண்க.)

4) **மனம் லயித்தல் :-** மனத்தை முழுமையாகச் செலுத்தி சாதனை செய்வது தான், (மனோயோகம்) 'மன லயிப்பு யோகம்' ஆகும். கையில் ஜப மாலையை உருட்டிக் கொண்டிருக்கிறோம்; ஆனால், மனம், எங்கெங்கெல்லாமோ ஓடிக் கொண்டிருக்கிறது; 'கையில் மாலை உருள்கிறது; நாக்கில், நாமம்; மனமோ நான்கு திசைகளிலும் ஓடுகிறது. இது என்ன, ஜபம்!' என்கிறார், ஒரு கவிஞர்.

கீதை-ராமாயணம் பாராயணம் செய்யும்போது, மனம் எங்கோ ஓடிப் போய்விட்டது; வாய் மட்டும் படித்துக் கொண் டிருக்கிறது. என்ன சந்தர்ப்பம், எந்த இடம்-எதுவும் புரிய வில்லை! - என்றால், மனோலயம் ஏற்படவில்லை என்று அறியவேண்டும்.

துதி-பிரார்த்தனை விஷயத்திலும், இதே போல், மனோலயம் பின்பற்றப்பட வேண்டும். ஆதலால், மேலே சொல்லப்பட்ட சாதனைகளைச் செய்யும்போது, மனம் வேறு எங்கும் செல்லாமல், சாதனையிலேயே ஆழ்ந்திருக்கும் வண்ணம் முயற்சி செய்ய வேண்டும்.

5) **ரகசியம் :-** மேற்சொன்ன சாதனைகளைச் செய்து வருங் கால், கடவுள் அருளால், விசேஷமான நிகழ்ச்சிகள்-அனுபவங்கள் ஏற்படுமானால், அவைகளையும் சாதனைப் பயிற்சியையும் பிரகடனம் செய்யாமல் ரகசியமாகவே வைத்திருக்க வேண்டும்; பிறரிடம் சொல்லக் கூடாது. ஏனெனில், மதிப்பு-மரியாதை- கௌரவப் பேராசையால் பிரசாரம் செய்தால் கர்வம் அதிகமாகிவிடும்; விசேஷமான அனுபூதிகள் நின்று போய்விடும். கற்பூரப் பெட்டியின் மூடியைத் திறந்து வைத்தால் அதிலிருந்து கற்பூரம் கொஞ்சம் கொஞ்சமாக கரைந்து போய்விடும். அது போல, தன் வாய்மூலமே, தன்னுடைய குணம், பிரபாவம், சாதனை, அதனால் கிடைத்த பெரும் பயன் பற்றிப் புகழ்ந்து பேசுவதால், அதனுடைய பெருமை குறைந்து

போய்விடுகிறது. அதனால், சாதனையை ரகசியமாகச் செய்ய வேண்டும்.

6) **நிஷ்காமபாவம்** :- ஈசுவரன், மகாத்மா, தேவதை, மனிதர் அல்லது வேறு ஏதோ ஒரு பிராணியிடமிருந்தோ, ஜடப் பொருளிடமிருந்தோ, மனைவி-புத்திரன்-செல்வம்-வீடு-உடல்நலம்-துயரத்திலிருந்து விடுதலை, மரியாதை-பெருமை-கௌரவம் முதலிய இவ்வுலக, அல்லது, சொர்க்கம் முதலிய அவ்வுலக சௌகரியத்துக்காக, சிறிதளவு ஆசை-பிரார்த்தனை-ஆவல்-விருப்பம் ஒருபோதும் செய்யாதிருப் பது, 'நிஷ்காமபாவம்' ஆகும்.

ஆனால், பகவானிடம் பரம சிரத்தை, பரம பிரேமை ஏற்பட; ஜப-தியானம் நிரந்தரமாக நடைபெற; பகவானை அடைவதற்காக; பகவானுடன் எப்போதும் இணைந்திருக்கும் அனுபவத்திற்காக-இப்படியாகப் பகவானிடம் பிரார்த்தனை செய்வது, நிஷ்காம நிலைக்கு நிகரானது தான்.

**உலக விவகார காலம்**

உலக விவகாரங்களில் ஈடுபடும் காலத்தில், பின்வரும் ஆறு விஷயங்களை கவனத்தில் கொள்ள வேண்டும்.

1) தினசரி நடவடிக்கைகளில்-அதாவது, நடப்பது-எழுந் திருப்பது-அமர்வது-உண்பது-குடிப்பது-தொழில் செய்வது-உறவாடுவது முதலியன செய்யும்போது, பகவானுடைய நாம-உருவங்களைச் சிந்தனையில் நிறுத்தி, அந்தச் செயல்களைச் செய்ய வேண்டும். பகவான், அர்ஜுனனிடம் சொல்கிறார் -

தஸ்மாத்ஸர்வேஷு காலேஷு மாமநுஸ்மர யுத்₄ய ச।
மய்யர்பிதமநோபு₃த்₃தி₄ர்மாமேவைஷ்யஸ்யஸம்ஶயம்॥

(8-7)

*('ஆகவே, அர்ஜுனா! நீ எப்போதும் என்னை நினைத்துக் கொண்டிரு; யுத்தமும் செய். இவ்விதம் என்னிடம் அர்ப்பணம் செய்யப்பட்ட மனம்-புத்தியுடைய நீ, சந்தேகமில்லாமல் என்னையே அடைவாய்.')*

பகவானை எப்போதும் நினைவில் வைத்துக் கொண்டு யுத்தமும் செய்ய முடியுமானால், மற்ற காரியங்களைச் செய்

வது கஷ்டமா, என்ன? அர்ஜுனன், க்ஷத்திரியன். அதனால், போர் செய்வது அவனுடைய கடமை. அது போல, பிற வர்ணா சிரமிகளும் மகளிரும், தத்தமக்கு உரிய சாஸ்திர விதிப்படி யான கடமைகளை, பகவானை எப்போதும் நினைவில் நிலைநிறுத்திக்கொண்டு, செய்து வர வேண்டும்.

2) நான் பகவானுடையவன்; பகவான், என்னுடையவர்; பகவானுக்கும் எனக்கும் இடையேயுள்ள உறவு நித்திய நிரந்தரமாக இருந்து வருகிறது; எப்போதைக்கும் இருக்கும்- என்று எண்ணிக் கொண்டு, பகவானுடன் தனக்குள்ள நெருக்கமான உறவை நிலைநிறுத்திக் கொள்ள வேண்டும்.

3) இங்குள்ள எல்லா சேதன-அசேதனப் பிராணி வர்க்கங்களும் பகவானுடையவை; இவை எல்லாவற்றிலும் பகவான் வியாபித்திருக்கிறார் - இவ்வாறு உணர்ந்து, எல்லோருக்கும் பகவத் பாவனையுடன் சேவை செய்ய வேண்டும்; மதிப்பு-மரியாதை காட்ட வேண்டும்.

4) சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள எந்த ஒரு சடங்கினைச் செய்தாலும், அது பகவானுடைய ஆணை என்று மதித்து பகவானுடைய மகிழ்ச்சிக்காகவும், பகவானிடம் தூய பிரேமை ஏற்பட வேண்டும் என்பதற்காகவும், பகவானை அடைவதற்காகவும், நிஷ்காமபாவத்துடன் செய்ய வேண்டும்.

5) குருக்ஷேத்ர யுத்த களத்தில், அர்ஜுனன், தன்னுடைய ரதம், குதிரைகள், கடிவாளம் எல்லாவற்றையும் பகவான் கை யில் ஒப்படைத்திருந்தான். பகவான் எப்படி யெல்லாம் ஓட்டிச் சென்றாரோ, அவன் அப்படியே சென்று கொண்டிருந்தான். அதே போல, நாமும் நம்முடைய மனம், புத்தி, புலன்கள், உடல் என்பதான ரதத்தை, பகவானிடம் அர்ப்பணித்து விட வேண்டும். பகவானுடைய கைப்பொம்மையாக ஆகிவிட வேண்டும். பகவான் எப்படி ஆட்டுவிக்கிறாரோ, அவ்வாறே ஆடவேண்டும். இது தான், பகவானிடம் சரணாகதி என்பது.

பகவான் சொல்கிறார் -

மந்மநா ப$_4$வ மத்$_3$ப$_4$க்தோ மத்$_3$யாஜீ மாம் நமஸ்குரு।
மாமேவைஷ்யஸி யுக்த்வைவமாத்மாநம் மத்பராயண:॥

*(9-34)*

*('என்னிடம் மனத்தைச் செலுத்து; என் பக்தனாகு; என்னை வழிபடு; என்னை வணங்கு; இவ்விதம் உன்னை என்னிடம் இணைத்துக் கொண்டு, என்னையே சார்ந்துவிட்டால், நீ என்னை அடைவாய்.')*

'மந்மநா பவ'-மனத்தால் பகவானை எப்போதும் சிந்தித்துக் கொண்டிருத்தல்.

'மத்பக்தோ பவ'-'நான் பகவானுடையவன்' என்று புத்தி பூர்வமாக, தத்துவத்தை உணர்ந்து, ஒருமுகப்பட்ட பிரேமை செய்வது-புத்தியை பகவானிடம் அர்ப்பணித்தல் ஆகும்.

'மத்யாஜீ'-எல்லோரையும் பகவானாகவே கருதி, தன் புலன்களால் எல்லோருக்கும் பணிவிடை செய்தல், கௌரவித் தல் ஆகியன புலன்களை பகவானிடம் அர்ப்பணித்தல் ஆகும்.

'மாம் நமஸ்குரு'-நம் உடலோடு சம்பந்தப்பட்டுள்ள அகங்கார-மமகாரங்களை விலக்கி, பகவானுடைய சேவை யில் சரீரத்தை ஈடுபடுத்துவது-சரீரத்தைப் பகவானிடம் அர்ப்பணிப்பது ஆகும். இவ்விதம் பகவானுடைய திருவடிகளில் தஞ்சம் புகுந்ததும், தான் 'செய்தல்' என்பது, தான் 'ஆதல்' என்றாகிவிடும்.

6) சுக-துக்கம், லாப-நஷ்டம், அனுகூலம்-பிரதிகூலம், என்று சூழ்நிலை, பொருள் மாற்றம் அல்லது சம்பவம் நிகழ்ந்தாலும், அவையெல்லாம் பகவானின் சட்டம் அல்லது பகவானால் அளிக்கப்பட்ட வெகுமதி, பகவானின் லீலை என்று எண்ணி, விருப்பு-வெறுப்பு இல்லாமல், சமபுத்தி, மகிழ்ச்சி, திருப்தியுடன் இருக்க வேண்டும்.

### படுக்கும் காலம்

படுக்கும்போது, 'இவ்வுலகம் அழியுந் தன்மை யுடையது; விநாடி நேரம் நிலைத்திருப்பது, துன்ப வடிவானது' என்று நினைத்துக் கொள்ள வேண்டும். சங்கல்பத்தை (செயல் திட்டங்களை) விட்டு விட வேண்டும். பகவானிடம் தூய அன்பு ஏற்படுவதற்காக, பகவானுடைய நாமம், ரூபம், குணம், பிரபாவம், தத்வம், ரகசியம் பற்றிய சிந்தனைப் பெருக்கத்தை ஓடவிட்டுக்

கொண்டு படுக்க வேண்டும். இவ்விதம் செய்தால், உறக்க காலம் கூட சாதனை செய்யும் காலமாக மாறிவிடும்.

மேற்சொன்னவாறு, பக்தியோக சாதனை செய்வதால், பகவானிடம் ஒருமுகப்பட்ட தூய அன்பு ஏற்பட்டு, பகவத் பிராப்தி கிடைக்கும். அதனால், பகவானிடம் ஒருமுகப்பட்ட தூய பிரேமை உண்டாக வேண்டும் என்ற நோக்கத்துடன், மேற்சொன்ன வழிமுறைகளின்படி சாதனை செய்வதாக உறுதி பூண்டு, மூச்சுள்ளவரை முயற்சி செய்ய வேண்டும்.

## 8. நேரத்தை நல்ல முறையில் பயன்படுத்து

நேரம் விலைமதிக்க முடியாதது என்பதை உணர்ந்து கொண்டு, மனிதன் தன்வசமுள்ள நேரத்தையெல்லாம் பகவானுடைய பிரபாவம்-ரகசியங்களை அறிந்துகொண்டு, சிரத்தையோடும், அன்போடும் எல்லாக் காலங்களிலும் ஈசுவரனைப் பற்றிய சிந்தனையிலேயே ஈடுபடுத்த வேண் டும். இவ்வாறு நிரந்தரமாகப் பகவத் சிந்தனை இருக்கும் பயிற்சியை மனிதன் மேற்கொண்டால், சிறிது காலத்திலேயே அவன் பரமாத்மாவை அடையமுடியும். இவ்விதப் பயிற்சி செய்வதனால் மனிதனுடைய தீய குணங்கள், தீய நடவடிக் கைகள், துயரங்கள் அனைத்தும் முற்றிலும் மறைந்து போகின்றன; வேறு தனி முயற்சி ஏதும் இல்லாமலேயே, நல் லொழுக்கமும், நற்குணங்களும் வந்தடைகின்றன; அதனால் பரம சாந்தியையும் பரமானந்தத்தையும் மனிதன் அடைகிறான்.

உலகத்தில் எண்பத்துநாலு லட்சம் ஜீவராசிகள் இருப்பதாக சாஸ்திரங்கள் சொல்கின்றன. இவைகளில் மனிதனுக்கு மட்டுமே பரமாத்மாவை அடையும் தகுதி இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. பரமாத்மாவின் எல்லையற்ற கருணையினால், ஈசுவர தரிசனத்துக்குத் தகுதியற்ற விலங்கு-பறவைகள் போன்ற திர்யக் (குறுக்குவாட்டில் வளரும்) யோனிகளில் பிறந்த உயிர்களுக்கும் கூட பரமாத்ம தரிசனம் கிடைத்துவிடுகிறது. இதற்கான எடுத்துக் காட்டுகள் இதிகாசங்களில் காணக் கிடைக்கின்றன; ஆனால், அவையெல்லாம் விதிவிலக்குகளே தவிர, விதி அன்று.

உலகத்தில் தோன்றியுள்ள ஜீவர்களின் எண்ணிக்கையைக் கணக்கிட முயல்வது சிறுபிள்ளைத்தனமானது; ஆனால், மனிதனுடைய பொது அறிவைக் கொண்டு அனுமானிக்கும் போது, உலகில் சிருஷ்டிக்கப்பட்டுள்ள கோடி கோடிக்கணக் கான உயிர்ப்பிராணிகளில் மனிதனின் எண்ணிக்கை, ஒரு பெருங்கடலில் ஒரு மிகச் சிறிய அலை போன்றது தான் என்பது தெரியவரும். ஒவ்வொரு யோனியிலும் வரிசைக் கிரமமாக பிறந்து, வாழ்ந்து, முடிந்து ஒரு ஜீவன் மனித உடலை எடுக்க வேண்டுமானால், அந்த வாய்ப்பு எத்தனையோ யுகங்களுக்குப் பின்னர் கிடைக்கக்கூடும். பிற யோனிகளில் பிறந்த ஜீவன்களுடைய நடத்தையைப் பார்த்தாலும், நமக்கு அவநம்பிக்கைதான் ஏற்படுகிறது. ஏனென்றால், தனக்கு விரைவில் மனித சரீரம் கிடைக்க வேண்டும் என்ற எண்ணம் கூட அவைகளுக்கு ஏற்படு வதில்லை. மனித சரீரம் கிடைத்திருப்பவர் மேல் ஈசுவரனுக்கு மகா கிருபை இருக்கிறது என்று உணர்ந்து கொள்ள வேண்டும். ஸ்ரீராம சரித மானஸத்தில் கோஸ்வாமி சொல்கிறார்–'அழிவற்ற இந்த ஜீவன், நான்கு விதமாக (முட்டையிலும் உடலிலும் விதையிலும் வியர்வையி லிருந்தும்) எண்பத்து நான்கு லட்சம் யோனிகளில் பிறந்து பிறந்து சுழல்வான். மாயையின் தூண்டுதலினால் காலத் திற்கும் கருமத்திற்கும் இயல்புக்கும் முக்குணங்களுக்கும் கட்டுப்பட்டு, இவன் எப்போதும் தடுமாறுகிறான். காரண மின்றி அன்பு காட்டும் பகவான் எப்போதாவது மிகச் சிலருக்கே அரியதான மானிடப் பிறவியை அளிக்கிறார்' (உத்தர காண்டம்)

அதனால், கணக்கில்லாத யுகங்களில் வழிதவறித் திண்டாடிக் கொண்டிருக்கும் கோடிகோடி உயிர்களில், மிகமிகப் பேறு பெற்றதாயும் முக்திக்குத் தகுதி பெற்றதாயும் கருதத்தக்க உயிர்களுக்கு, கிடைத்தற்கரியதான முக்தியை கொடுக்கக்கூடிய மனித சரீரத்தை ஈசுவரன் கொடுத்தருள் கிறார். இந்த மனித சரீரம் கிடைத்தற்கரியது; விநாடிப்போது மட்டுமே இருக்கக்கூடியது; அநித்தியமானது. எனவே, தன்னுடைய ஆத்ம நலனுக்கு உரிய செயல்களில் வெகு விரைவில் முழுமூச்சுடன் ஈடுபடாதவனுக்கு நிகரான

முட்டாள் இருக்கவே மாட்டான். மனித சரீரம் கிடைத்திருப்பதாலேயே, 'நாம் முக்தியை அடை வதற்கான தகுதி (அதிகாரம்) கிடைத்திருக்கிறது' என்று புரிந்து கொள்ள வேண்டும். இப்படிப் புரிந்து கொள்ளா விட்டால், மனித சரீரம் நமக்கு வேறு எதற்காகக் கொடுக்கப் பட்டிருக்கிறது? இந்த அதிகாரத்தை அடைந்திருந்தும் கூட, கருணைக் கடலான பகவானின் தயையை அலட்சியம் செய்து, நம்முடைய நேரத்தை புலனின்பம், தவறுகள், பாவம், சோம்பல் முதலியவைகளில் கழித்தால், அது அறியாமை என்பதைத் தவிர வேறு என்ன? உணவு, உறக்கம், உடலுறவு முதலியவை அநேகமாக எல்லாப் பிராணிகளிடமும் காணப் படுகின்றன. அப்புறம், மனித சரீரத்தை அடைந்த பின்னரும், அதே விஷயங்களில் தன் வாழ்க்கையைக் கழித்தானே யானால் அவனுக்கும் மிருகத்துக்கும் இடையே என்ன வித்தியாசம் தான் இருக்கிறது? பெண் நாயிடம் ஆண் நாய்க்கு இன்பம் கிடைக்கிறது; அரசியிடம் அரசனுக்கு; இந்திராணி யிடம் இந்திரனுக்கு! மிருதுவான மலர்ப் படுக்கையில் படுத்து ஓர் உல்லாஸ மனிதன் அடையும் அதே ஆனந்தம் குப்பை கூளச் சாம்பல் மேட்டில் படுத்துப் புரளும் கழுதைக்கும் கிடைக்கிறது! பலவகையான அறுசுவை உண்டிகளை உண்ணும் மனிதனுக்கு ஏற்படும் அதே ஆனந்தம், நாய்-காகம் போன்ற விலங்கு-பறவைகளுக்கும், அவைகளுக்கான உணவு வகைகளில் அவைகளுக்குக் கிடைக்கிறது. ஈசுவர னுடைய தயையின் பயனாக, கிடைத்தற்கரிய மனித சரீரத்தை யும் மனித சிந்தனைகளையும் அடைந்தும்கூட, இந்த விலங் குகளையும் பட்சிகளையும் போல உணவு-உறக்கம்-உடலு றவுகள் தாம் மிக உயர்ந்த சுகம் என்று எண்ணி, இவை களிலேயே நமது நேரத்தைச் செலவழித்தோமேயானால், உண்மையில் நாம் இவைகளை விட மிகவும் தாழ்ந்த தரத்தில் தான் இருக்கிறோம்! ஏனென்றால், திக்குத் திசை தெரியாத இந்த ஜந்துக்களுக்கு, இவ்விதம் (உணவு-உறக்கம்-உடலுறவுக்கு மேலாகப் பகவானை அடைய வேண்டும் என்று) புரிந்து கொள்ளும் திறனும் அதைப் பற்றி சிந்திக்கவும் அறிவு கிடையாது. அதனால், அவைகள் பெரும் குற்ற வாளிகள் அல்ல. ஆனால், மானுடப் பிறவி எடுத்துவிட்ட

ஜீவன், கேவலம் விலங்கு-பறவையைப் போலவே நடந்து கொண்டால், அது மிகவும் வருத்தத்துக்கும் வெட்கத்துக்கும் உரிய விஷயமாகும்.

மனித ஆயுள், எல்லைக்கு உட்பட்டது; மிகவும் குறை வானது. மனிதனுக்கு அதிக பட்சமாக நூறு வருஷம் என்று கருதப்படுகிறது. அதுவும், தற்காலத்தில் நூற்றில் நாலைந்து பேர்களுக்குக்கூடக் கிடைப்பதில்லை. இந்த ஆயுளில், பிள்ளைப் பருவத்தில் சிலகாலம் போய்விடுகிறது. வயோதிகத்தில், ஆன்மப்பயிற்சி ஏதும் அநேகமாக செய்ய இயலாது. 'நான் கிழவனாகப் போனதும் சாதனை செய்கிறேன்' என்று சொல்வது தவறு. மீதியுள்ள நேரத்திலும் எத்தனையோ இடையூறு-தடங்கல்கள். நம்முடைய சஞ்சிதபாவம், தற்போது ஏற்படுத்திக் கொண்டுள்ள தீயசேர்க்கை, புலனின்பப் பற்று காரணமாக இடையூறு-தடங்கல்கள் வந்து கொண்டே இருக்கின்றன. உடலும், எப்போதும் ஆரோக்கியமாக இருப்பதில்லை. மனிதனுடைய புத்தியும் சிந்தனையும் எப்போதும் ஒன்றாக இருப்பதில்லை. தீயோர் சேர்க்கையால் புத்தி கெட்டுப் போகிறது; உலகில், அநேகமாக தீயசேர்க்கைதான் அதிகமாக இருக்கிறது. சோம்பல், போகம், தவறு, தீயவொழுக்கம், அகங்காரம், நாத்திகர்களுடன் நட்பு-இவைதான், தீயசேர்க்கை. எல்லாவற் றுக்கும் மேலாக, 'மரணம் எப்போது வரும்?'- தெரியாது! இம்மாதிரியான பயங்கர இடையூறுகளிலிருந்து தப்பி, மீத முள்ள குறைந்த காலத்திலேயே, எல்லாத் திசைகளிலிருந்தும் தன் மனத்தை விலக்கி மிகவும் ஏகாக்கிரத்துடன் முழு மையாக, அடைய வேண்டிய லட்சியத்தைப் பெறுவதற்கான முயற்சியில் ஊன்றி நிற்கும் அறிவுள்ள மனிதர் அடைவார். விலை மதிக்க முடியாத நேரத்தில் ஒரு விநாடியைக் கூட சோம்பல் அல்லது தவறுகளில் செலவழிக்காமல், தன்னுடைய லட்சியத்தை நோக்கிச் செலுத்துபவன் தான் உண்மையான புத்திசாலி. மிகவும் ஏழையான ஒருவன், அல்லது தொழில் ஏதும் இல்லாத ஒரு கருமி, தனக்குக் கிடைக்கும் இரண்டொரு காசுகளை, மிக அவசியமான செலவுகளுக்கு மட்டுமே பயன்படுத்துவதைப் போல, மனிதன் தனக்குக் கிடைத்துள்ள குறைந்த காலத்தை,

ஒவ்வொரு விநாடியையும் மிகக் கவனமாக மிக அவசியமான சாதனைகளில் மட்டும் செலவழிக்க வேண்டும். காலத்தின் விலைமதிக்க முடியாத தன்மையை உணர்ந்து கொண்ட மனிதன், ஒருபோதும், காலத்தை பயனற்ற வழிகளில் செலவழிக்க மாட்டான். ஆகவே, மரணத்தின் அருகே, மற்றும் வயோதிகத்தை அடையுமுன்னரே, ஒருநிலைப்பட்ட மனத்துடன் முயற்சி செய்து, மனிதன் தன்னுடைய லட்சியத்தை அடைந்துவிட வேண்டும்.

இப்போதைய காலம் ஒரு நல்ல வாய்ப்பு. ஏனென்றால், பயங்கரமான இந்தக் கலிகாலத்தில் நிஷ்காமபாவத்துடன் செய்யப்படும் பகவந்நாம சங்கீர்த்தனம் என்ற சாதனை சிறிதளவேயானாலும், மிகவும் நன்மையை தரக் கூடியது. அந்த சாதனையாளரிடம் ஈசுவரனுக்கு ஏற்படும் கருணைக்கு எல்லையே இல்லை. இப்படியிருந்தும் நாம் அவருடைய தயை, பிரேமை, பிரபாவம் முதலியவற்றின் சூட்சுமத்தை அறிந்து கொண்டு, அவரை வழிபடுவதில் முழுமூச்சாக இறங்காமல் இருந்துவிட்டு, பின்னர், 'எல்லாம் என் தலைவிதி; பொல்லாத வேளை' என்று அவைகள் தலைமேல் குற்றத்தைச் சுமத்துவது நியாயமன்று. ஆகவே, எழுந்திராய்! கவனமாக இரு! உன்னுடைய லட்சியத்தை அடைவதற்காக மாமுனிவர்களால் கூறப்பட்டுள்ளபடி, இடுப்புத்துணியை வரிந்து கட்டிக்கொண்டு தயாராகு.

இன்றிலிருந்து நாளை; நாளையிலிருந்து நாளன்றை என்றபடி, மேன்மேலும் ஆத்ம உயர்வுக்கான பாதையில் முன்னேறிக் கொண்டிருப்பவர்கள், புத்திமான்கள். சுருதி-ஸ்ம்ருதி-இதிகாச-புராணங்களில் சொல்லப்பட்டுள்ள பல விஷயங்களில் எதன்மீது நமது மனம் லயிக்கிறதோ, அந்த விஷயத்தைக் கடைப்பிடிப்பதில் நமது நேரத்தைச் செல வழிக்க வேண்டும். அத்துடன், நம்முடைய பார்வையில், மகா புருஷ லட்சணங்களோடு கூடியிருப்பவராக எவர்படுகி றாரோ, அவர் காட்டும் பாதையிலும் செல்லவேண்டும். இப்படிப்பட்ட மகாபுருஷர்களின் குணங்கள்-நடத்தைகளைப் பின்பற்ற வேண்டும். ஒரு மகாத்மாவுடன் தற்போது ஒரு சந்திப்பு ஏற்படவில்லையென்றால், முன்னர் இருந்த உத்தம புருஷர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படித்து அவர்களு

டைய குணங்கள், ஒழுக்கங்களை லட்சியமாகக் கொண்டு, அதற்கேற்பத் தன் வாழ்க்கையை மேன்மேலும் உயர்த்திக் கொண்டே போவதில் உறுதியாக இருக்க வேண்டும். உயிர் உள்ள வரையில் முன்னேறிக்கொண்டே இருக்க வேண்டும். ஏதோ கொஞ்சம் முன்னேறியதும், 'அப்பாடா, நான் உச்சிக்கு வந்துவிட்டேன்; இதற்கு மேலே எதுவும் இல்லை!' என்று எண்ணிக் கொண்டு நின்றுவிடக் கூடாது. இவ்வாறு எண்ணிக்கொள்வது முன்னேற்றப் பாதையில் தடையை ஏற்படுத்தும். தடைபடுத்துவது மட்டுமில்லை; இவ்வாறு எண்ணிக்கொண்டு அங்கேயே உட்கார்ந்துவிடும் பல பேர்கள் தம் நிலையிலிருந்து கீழேயும் விழுந்து விடுகிறார்கள்.

மனித அறிவு என்ற அளவுகோலை வைத்துக் கொண்டு உண்மையான முன்னேற்றத்தை அளந்து காட்ட முடியாது. இந்த அளவுகோல், முன்னேற்றத்தின் கடைசி எல்லைவரை செல்ல இயலாது. எல்லைவரை போய்விட்டால், அங்கே தேகாபிமானம் முற்றிலுமாக அழிந்து போய்விடுகிறது; அங்கே, இந்த விஷயத்தைப் பற்றிப் பேச அல்லது மதிக்க, அதாவது, 'இனி நான் செய்வதற்கு ஒரு கடமையும் இல்லை' என்று கூறுவதற்கு தேகாபிமானமாகிய 'நான்' எதுவுமே இருக்காது; எதுவரையில், சரீரத்தையே ஆத்மா என்று நினைத்துக் கொள்கிற அபிமானம்; அல்லது, தேகத்தின் தலைவனாக உள்ள ஓர் அபிமானம் இருக்கிறதோ அது வரையில், 'கடமைகள் எல்லாம் முடிந்துபோய் விட்டன' என்று எண்ணிக் கொள்வது பெரிய தவறாகும். எதுவரையில் சரீரத்தில், ஏதோ ஒரு வடிவத்தில், தன்னுடைய திட்டங் களைத் தீட்டிக் கொள்கிற, தன்னுடைய சுற்றுச் சூழலை உணர்ந்துள்ள ஏதோ ஒரு 'தர்மீ' (உலக உறவு வைத்துக் கொண்டிருக்கும் நான் என்ற எண்ணம்) இருக்கிறதோ, அதுவரையில், அதனை படிப்படியாக மேம்படுத்துவதில் ஈடுபட்டிருக்க வேண்டும். பரமாத்மாவை உண்மையாக தரிசித்துவிட்ட அனுபூதியாளருக்கு, தனக்கென்று கடமை ஏதும் மிச்சமில்லாமற்போனாலும் உலகம் உய்வதற்காக, அவர் மூலமாகவும் காரியங்கள் நடந்து கொண்டேதானிருக்கும். அதனால், அவர் செய்யும் கர்மா, அகர்மா என்று பேசப்படுகிறது.

ஆன்மிக முன்னேற்றத்தை விரும்புவருக்கு, கடமை என்றைக்கும் முற்றுப் பெறுவதில்லை. உலகத்தில், தவிர்க்கப் பட வேண்டிய கர்மாக்களைச் செய்பவர்களைக் காட்டிலும், அத்தகைய கர்மாக்களைச் செய்யாதவர்கள் மேலானவர்கள்; அவர்களைக் காட்டிலும் மேலானவர்கள், பொருள்-புதல்வர்-மனைவி-மதிப்பு-பெருமை அல்லது சொர்க்கம் வேண்டும் என்ற விருப்பத்தோடு, நல்லொழுக்கத்துடன் இருந்து ஈசுவரபக்தி செலுத்துபவர்கள். அவர்களிலும் மேலானவர்கள், நல்லொழுக்கம்-ஈசுவரபக்தி செய்யுங்காலத் தில் பகவானிடம் எதையும் கேட்காமல் இருந்து, பின்னர், ஏதேனும் சங்கடம் வரும்போது, அந்தச் சங்கடத்திலிருந்து விடுதலை பெறு வதற்காக, ஈசுவரனிடம் யாசிப்பவர்கள். அவர்களைக் காட் டிலும் மேலானவர்கள்-ஆன்மிக முன்னேற்றத்தைத் தவிர வேறு எந்த ஒரு விஷயத்திலும் இச்சை கொள்ளாதவர்கள்; மேற்சொன்ன எல்லோரைக் காட்டிலும் மிக மிக மேலான வர்கள்-ஈசுவரத் தத்துவத்தைப் புரிந்து கொண்டு, காரணம் ஏதுமில்லாமல், இயல்பாகவே ஈசுவர பக்தியும் நல்லொழுக் கமும் கொண்டு, அவைகளை ஆசையோடு பின்பற்றி வருபவர்கள். ஈசுவரனையே அடைந்துவிட்ட இவர்களுடைய மகோன்னத நிலையைப் பற்றி என்ன சொல்ல! ஈசுவரனை அடைந்துவிட்டவர்களைக் காட்டிலும், உலகத்தில் சதாசாரத் தையும் பக்தியையும் பரப்புவதற்காக ஈசுவரனிடமிருந்து ஆணையும் அதிகாரமும் பெற்று வந்துள்ள உத்தமர்கள், மேலானவர்கள். ஈசுவரனிடமிருந்து இத்தகைய அதி காரத்தைப் பெற்றுக்கொண்டு வந்திருப்பவர்களை காரக புருஷர்கள் அல்லது அம்சாவதாரம் என்கிறார்கள். கருணா மூர்த்தியான பகவான், எல்லாரைக் காட்டிலும் மேலானவர் என்பதுடன் உன்னதத்தின் அடித்தளமே அவர்தான்; ஜீவர்களைக் கைதூக்கிவிடுவதற்காக, அவரே அவ்வப்போது இறங்கிவந்து நிரந்தரமான தர்மத்தையும் பவித்திரமான பக்தியையும் பிரசாரம் செய்கிறார். ஆகவே, உத்தமமான மகான்களை நம்முடைய ஆதரிசமாகவும் லட்சியமாகவும் கொண்டு, அவர்களுடைய செயல்பாடுகள் மற்றும் குணங்களைப் பின்பற்றியும் அவர்களுடைய ஆணைகளை ஏற்று நடந்து, தன்னுடைய ஆத்மாவை மேன்மேலும்

உயர்நிலைக்குக் கொண்டுவரும் முயற்சிகளிலும் தன்னுடைய நேரத்தை ஈடுபடுத்த வேண்டும். இப்படிச் செய்வதில் தான் மனிதனுடைய புத்திசாலித்தனம் இருக்கிறது.

இவ்விதமான மிக உயர்ந்த நிலையை அடைவதற்கு, அதாவது, தெய்வதரிசனத்துக்கு, எல்லாவற்றைக் காட்டிலும் அதிக சிரத்தையும் பக்தியும் அவசியம் தேவை. சிரத்தை முதலில் ஏற்படுகிறது; அப்புறம், பக்தி. எல்லாவற்றைக் காட்டிலும் உயர்வான சிரத்தைக்கு உரிய நபர், சாட்சாத் பகவான்தான்! அடுத்ததாக நமது நம்பிக்கைக்கு உரியவர்கள் யாரென்றால், எவருடைய சேர்க்கையினாலே நமக்குப் பரமேசுவரன் மேல் பக்தி ஏற்படுகிறதோ, அவர்கள்; எவர்கள் பரமேசுவரனைத் தரிசித்துவிட்டார்களோ, அவர்கள்; அல்லது பரமேசுவரனை அடைவதற்காக முயன்று கொண்டிருப்பவர்கள். பரமேசுவரன், சாது-மகாத்மா, அவர்களுடைய உபதேசங்கள், செயல்பாடுகள், குணங்கள் முதலியனவற்றில் கண்ணால் காண்பது போன்ற நம்பிக்கையும் உயர்வான உணர்ச்சிகளும் ஏற்படுகின்றனவோ, அதற்குப் பெயர் சிரத்தை. ஒரு கல் இருக்கிறது; அதை ஒரு மகாத்மா பரிசமணி என்று சொல்லிவிட்டார் என்றால், அந்த மகாத்மாவிடம் சிரத்தை வைத்துள்ளவருக்கு, அந்த விநாடிமுதல், அந்தக் கல் பரிசமணியாகவே தென்படத் தொடங்குகிறது. அதாவது, நாம் ஒரு பொருளைப் பார்த்திருக்கிறோம்; கேட்டிருக்கிறோம்; அறிந்திருக்கிறோம். அதே பொருளை, ஒரு மகாத்மா, நாம் பிரத்யட்சமாக அறிந்துள்ளதற்கு மாறாக, வேறொரு பொருளாகச் சொன்னால், நம்முடைய மனத்திலும் பார்வையிலும், நமக்கு முன்னர் தெரிந்திருந்த பொருள் தட்டுப்படுவதில்லை; மாறாக, மகாத்மா சொன்ன பொருள்தான் தட்டுப்படும். இதுதான், மிக உத்தமமான சிரத்தை. பொருள், அவர் சொல்லியபடி காணப்படுகிறதோ, இல்லையோ-சிரத்தையின் காரணமாக நம்பிக்கை வைப்பது என்பது நடுத்தரமான சிரத்தை; மகாத்மாவால் சொல்லப்பட்ட விஷயத்தில் நம்பிக்கை வைப்பதற்கு முயற்சி செய்வதற்குப் பெயர், கடைசித்தரமான சிரத்தை. நாம் மகாத்மாக்களிடம் நம்பிக்கை கொள்ள வேண்டும். ஆனால், தற்காலத்தில்,

உலகத்தில், பகவானைத் தரிசித்துவிட்ட மகாத்மாக்கள், மிகக் குறைவு. அப்படி யாரேனும் இருந்தால், அவரைச் சந்திப்பது மிகவும் கஷ்டம்; அவரைச் சந்தித்தாலும், 'இவர் மகாத்மா' என்று அடையாளம் கண்டு கொள்வது மிக மிகக் கடினம். தெய்வபலத்தால் நமக்கு அப்படிப்பட்ட ஒரு மகாபுருஷர் கிடைத்தால், அதை தெய்வானுக்கிரஹம் என்றே கொள்ள வேண்டும். அப்படிக் கிடைக்காமற்போனால், அத்தகையவர் களால் அளிக்கப்பட்டுள்ள நல்லுபதேசங்கள், அவர்களுடைய வாழ்க்கையின் தூய செயல்பாடுகள் ஆகியவற்றை ஒரு முன்மாதிரியாக வைத்துக் கொண்டு, அவற்றில் நம்பிக்கை வைக்க வேண்டும். இந்த வழியில் செல்லும் சாதகர்களின் உறவும்கூட மிகவும் உதவிகரமாக இருக்கும். அவர்களிடமும், தகுதிக்கு ஏற்றபடி நம்பிக்கை கொள்ள வேண்டும்.

சிரத்தையிலிருந்து பிரேமை, தானாகவே தோன்றி விடு கிறது. ஈசுவரனைக் குறித்துச் செய்யப்படும் பிரேமை, ஈசுவர னின்மேல்தான்; ஆனால், ஈசுவரனை அடைய வேண்டும் என்ற நோக்கத்துடன், தெய்வதரிசனம் பெற்று விட்ட சான் றோர்களிடம், சாதகர்களிடம், சாஸ்திரங்களிடம் வைக்கும் பிரேமையும்கூட, வேறொரு வகைப்படி, ஈசுவரனிடம் வைக்கப்படும் பிரேமையே ஆகும். கண்டிப்பாக, பிரேமை யில் சுயநலம் இருக்கக்கூடாது. தன்னலமில்லாத பிரேமை யால் பகவத் தரிசனம் சீக்கிரம் கிடைக்கிறது. தன்னுடைய பிரேமைக்குரியவரின் குணம், சுபாவம், நடத்தை, பெயர் மற்றும் உருவத்தைக் கேட்டும் கண்டும் சிந்தித்தவுடனும் சரீரத்தில் புல்லரிப்பு, கண்ணீர் வழிதல், உடல் ஆடுதல், தொண்டை தழுதழுத்தல், முகமலர்ச்சி முதலிய லட்சணங் கள் வெளிப்படுதல், பிரேமையின் வெளித்தோற்றங்கள். ஒன்றிய நிலையில், மிகவும் குதூகலம், பரமசாந்தி, புறப்பொருள் நினைவிழத்தல் முதலியன ஏற்படுதலும், பிரிவு ஏற்படுங்கால் மிக்க தவிப்பு, மிகவும் பொறுத்துக் கொள்ள முடியாமற் போவது, எப்போதும் யோசனையில் ஆழ்ந்திருத்தல் முதலியன ஏற்படுதலும் பிரேமையின் உள்ளார்ந்த தோற்றங்கள். பிரேமைக்குரியவரின் நினைவில் பரமசாந்தியும் ஆனந்தமும் ஏற்படும்; அவ்விதமே, உலக நடைமுறைக் காரியங்களில் ஈடுபட்டிருக்கும்போது,

அவருடைய பெயர், உருவம், குணம் மற்றும் நடவடிக் கைகளின் நினைவு எப்போதும் இருந்து வருவதும், அவருக்கு அனுகூலமான நடத்தையைப் பின்பற்றுவதும் பிரேமையை வளர்ப்பதாகும். இவை எல்லாவற்றுக்கும் வேர் போல் விளங்குவது சிரத்தை. சிரத்தையும் பக்தியும், பரமேசுவரனின் தத்வ-ரகசிய-பிரபாவ-குணங்களை அறிந்து கொள்வதால் ஏற்படுகின்றன. அதனால், பரமாத்மாவின் விஸ்தாரமான, எல்லையில்லாத, ஆழமான தத்வ-ரகசிய-பிரபாவ-குணங் களைப் பற்றி ஆழமாகவும் நுட்பமாகவும் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

## தத்வம்

ஜலத்தின் பரமாணு, மேகம், நீர், பனிக்கட்டி முதலியன அடிப்படையில், ஒரே தண்ணீர் தான் அல்லவா? அதுபோல, சொற்களுக்கு அகப்படாதது, ஞான வடிவானது; ஒளிமய மானது; கவர்ந்திழுக்கும் அழகுமிக்க சிலை வடிவானது- எல்லாம், ஒரே பகவான் தான். ஆகாயம் சுத்த நிர்மலமானது; அதில், அணுத்திரளாய் தண்ணீர் இருக்கிறது; ஆனால், அது கண்ணுக்குப் புலனாவதில்லை; விஞ்ஞானக் கருவிகள் மூலமும் பார்வைக்குத் தட்டுப்படுவதில்லை என்றாலும், அது இருக்கிறது என்பது விஞ்ஞான ரீதியாக நிரூபிக்கப்பட்ட உண்மை. அணுத்திரளான அதே ஜலம், மேக வடிவில் காணப்படும் போதும், அதிலுள்ள தண்ணீர் கண்ணுக்குத் தெரிவதில்லை; ஆனால், ஆராய்ந்து பார்க்கும் போது, மேகத்தில் தண்ணீர் இருக்கிறது என்பதும் காற்றுடன் தொடர்பு ஏற்பட்டதும் மழையாகப் பொழிகிறது என்பதும் தெரியவருகிறது. அதே தண்ணீர் குளிர்ச்சியைப் பெற்றதும் பனிக்கட்டி வடிவத்தைப் பெறுகிறது. இதுபோலவே, பிரம்மம், சொற்களுக்கு அடங்காதது; காண முடியாதது; சிந்தனைக்கு எட்டாதது; குணங்களுக்கு அப்பாற்பட்டது; என்றாலும், அதனுடைய ஒரு சிறு துளிப்பகுதியில் குணத்தின் தொடர்பு இருப்பது போலப் படுகிறது. அதாவது, எல்லையற்ற பரப்பிரம்மத்தின் ஒரு பகுதியில் ஸத்வ-ரஜஸ்-தமஸ் என்ற முக்குணமயமான பிரகிருதி (அவ்யாக்ருத மாயை) இருக்கிறது. அந்தப் பகுதியைத் தான் ஸகுண

பிரம்மம் என்கிறோம். மாயையோடு சம்பந்தப்பட்ட பிரம்மம் தான் ஸகுண நிராகார பிரம்மம். (குணங்களோடு கூடியது; ஆனால், உருவம் அற்றது.) அவ்யாக்ருத மாயை (தெளிவாக வகைப்படுத்தப்படாத மாயை) உருவமற்றது; ஆனால், குணத்தோடு கூடியது. ஆதலால், அதனோடு தொடர்புடைய பிரம்மம், ஸகுண நிராகாரம் என்று குறிக்கப்படுகிறது. இந்த ஸகுண-நிராகார பிரம்மம், சச்சிதானந்த வடிவாக உபாசிக்கப் படுகிறது. குணங்களைக் கடந்த பொருளை உபாசிக்க முடி யாது; ஏனெனில், குணங்களைக் கடந்த பொருள், யாருடைய கற்பனைக்கும் அகப்படுவதில்லை. ஆனால், குணங்களுக்கு அப்பாற்பட்ட ஒன்றை லட்சியமாகக் கொண்டு, ஸகுண நிராகார பிரம்மோபாஸனை செய்யப் படுகிறது. இதனுடைய பலன், குணங்களுக்கு அப்பாற்பட்ட சுத்தப் பிரம்மத்தை அடைவதுதான்-என்று சொல்லப்பட்டிருக்கிறது. விக்ஞானா னந்தத் திரளானதும் ஸர்வவியாபியும் உருவமற்றதுமான பிரம்மமே, தன்னுடைய விருப்பத்தினால் தேசுடைய ஒளிவடிவாகக் காட்சி தருகிறது. அதனை ஒளிமயம் என்றும் சொல்கிறார்கள். சூரியன், சந்திரன் மற்றும் ஒளிவீசும் பொருட் களையெல்லாம் ஒளிப்படுத்துவதால், அதனை 'ஒளிகளுக் கெல்லாம் ஒளி கொடுக்கும் மகத்தான ஒளி' என்கிறார்கள். அதே ஒளிவடிவ பிரம்மம், நான்கு கைகள் கொண்ட மகாவிஷ்ணு என்ற திவ்விய தோற்றத்தை ஏற்றுக் கொள்கிறது. அந்த நான்கு கரம் கொண்ட மகாவிஷ்ணுவை ஸகுண- ஸாகார பிரம்மம் என்கிறார்கள். அதே மகாவிஷ்ணு, பிரும்மா- விஷ்ணு-மகேசன் என்ற தோற்றத்தில், படைத்தல்-காத்தல்- அழித்தல் என்ற செயல்களைச் செய்கிறார்-அதாவது அணுத் திரள், மேகம்-தண்ணீர்-பனிக்கட்டி ஆகியவை உண்மையில் நீர் என்பது போல. இவைகள் எல்லாவற்றின் மொத்த வடிவம் நீர். இவ்விதமே, குணாதீதன், ஸகுண நிராகார ஜோதிர்மயம், ஸகுண ஸாகாரம் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து தான் பிரும்மத்தின் மொத்த வடிவம். இந்த மொத்த வடிவத்தை, மேற்சொன்ன உருவங்களிலும் காண்பதுதான் பகவானுடைய தத்துவத்தை அறிவதாகும். ஆனால், ஒரு விஷயத்தை மனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்- தண்ணீர் என்பது ஜடப்பொருள்; மாறும் தன்மையுடையது; அநித்தியமானது.

ஆனால், பகவான் சடம் அல்லர்; மாறும் தன்மையுடையவர் அல்லர்; அநித்தியர் அல்லர். உலகத்தில் அவருடன் ஒப்பிடும்படியான வேறு ஒரு பொருள் இல்லை; புரிய வைப்பதற்காக, தண்ணீரைப் போன்றவர் என்று ஓர் எடுத்துக்காட்டாகக் கூறியிருக்கிறது.

மனிதன், பறவை, விலங்கு, புழு, பூச்சி ஆகியவற்றின் உடல், மரம், மலை, செடி, கொடி, தங்கம், வெள்ளி முதலிய உலோகங்கள்; சட்டி-பானை, துணிமணி முதலிய சமஸ்தமான மண்ணுலகப் பொருட்கள், ஒரு பூமியின் வெவ்வேறு தோற்றங்களே; இவை அனைத்தும் மண்ணிலிருந்தே தோன்றியவை; முடிவில் மண்ணையே அடைந்து மட்கிப் போகப் போகின்றன. அறிவியல் ரீதியாக, தற்கால ஆராய்ச்சி களின்படி பார்த்தாலும், எல்லாம் மண் என்றே நிரூபிக்கப் பட்டிருக்கின்றன. இவை எல்லாவற்றுக்குமான மொத்தப் பெயர் மண்; அதேபோல நிர்குணம், ஸகுணம், ஸாகாரம் முதலியவற்றின் மொத்தப் பெயர் பரமேசுவரன் (பகவான்). ஸகுண ஸாகார பிரும்மோபாஸனை செய்பவர், பிரும்மத்தின் வடிவம் அத்தகையது மட்டும் என்று எண்ணி, நிர்குண-நிராகார, ஸகுண-நிராகாரத்தை இகழ்ந்து பேசினால், அது பரப்பிரம்மத்தையே இகழ்வதாகும். அதேபோல, நிர்குண-நிராகாரப் பிரும்மோபாஸனை செய்பவர்கள், நிர்குண பிரம்மத்தைத் தவிர, நிராகாரம் மற்றும் ஸாகார ஸகுண பிரம்மத்தை, அதிலிருந்து வேறானது என்று எண்ணி இகழ்ந்து பேசினால், அவர்களும் அதே பரப்பிரம்மத்தையே இகழ் கிறார்கள். அதனால், அவ்விரு வகையினருமே பிரம்மத்தின் தத்துவத்தை அறியவில்லை என்றாகிறது. பகவான் சொல் கிறார்: வாஸுதேவ: ஸர்வம்-அனைத்தும் வாசுதேவனே.

பகவானிடம் தஞ்சம் புகுந்து, ஏதேனும் ஒரு வடிவத்தை உபாசிக்கும் உறுதியான மனிதர்கள், அந்த மொத்த பிரம்மத்தை மெய்யாக உணர்ந்து அதை அடைந்து விடுகிறார் கள். பகவான், கீதை ஏழாம் அத்தியாயத்தில் சொல்கிறார் : 'என்னைச் சரண் அடைந்து, முதுமை-மரணத்திலிருந்து விடுதலை பெறுவதற்காக முயல்பவர்கள், பிரம்மத்தையும் அத்யாத்மத்தையும் கர்மாவையும் முழுமையாக அறிகிறார்கள்.

அதிபூதம், அதிதைவம், அதியக்ஞம் ஆகியவற்றுடன் கூடிய (எல்லாவற்றின் ஆத்மவடிவான) என்னை, இறுதிக் காலத்திலும் நினைவில் வைத்துக் கொண்டிருக்கும் அவர்கள், இறைவனிடம் ஒன்றிய மனம் கொண்டவர்கள் என்னையே அடைந்து விடுகிறார்கள்.'

## ரகசியம் (மறைபொருள்)

ஈசுவரனுடைய ரகசியம் மிகவும் ஆச்சரியமானது; உலகில் காணமுடியாதது. அதனை, ஈசுவரனுடைய திருவரு ளாலேயே ஒரு சிறிது அறிந்து கொள்ள முடியும். 'ரகசியம்' என்று மறைந்து நிற்கும் ஞானத்தைக் கூறுகிறார்கள். ரகசியம் (மறைபொருள்) யார் யாருக்கோ சொல்லப்படக் கூடாதது. எந்த ஒரு மனிதனும், தன்னுடைய சொத்துக் கணக்கை, தன்னுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமான, அந்தரங்கமான நண்பனைத் தவிர, வேறு யார் கேட்டாலும் சொல்லுவ தில்லை. சாது-மகாத்மாக்களும் தங்களுடைய ஆன்மிக சாதனை நிலைபற்றி, தகுதியற்றவர்களிடம் சொல்வதில்லை. பகவான் கூட, தகுதிபடைத்த பிரிய பக்தனுக்கே, தன்னு டைய ரகசியத்தைத் தெரிவிக்கிறார். பகவான், கீதையில், 'இது ரகசியமான விஷயம்'; 'இது மறைக்கத் தக்கது'; 'இது மிகவும் மறைக்கத் தக்கது'; 'இது, எல்லாவற்றைக் காட்டிலும் மறைத்து வைக்கப்பட வேண்டியது' என்றெல்லாம் சொல்லிய இடங்களில், 'நான் தான் பரமாத்மா'; 'நான்தான் மிகவும் சிரேஷ்டமானவன்'; 'நீ என்னையே பக்தி செய்து, சரண் அடைவாய்' என்பன போன்ற தத்துவத்தை (மெய் ஞானத்தை)ச் சொல்லியிருக்கிறார். இவ்விதம் தன்னுடைய உண்மையான நிலையை, தன்னுடைய அன்புக்குரிய பக்தனிடம் கூறுவது தான், மெய்யான ரகசியத்தைத் திறந்து காட்டுவதாகும். கீதை, அத். நான்கு, ஒன்றிலிருந்து பதினான்கு வரையிலுள்ள சுலோகங்களில், 'நான் சாட்சாத் பரமாத்மா. பூவுலகின் பாரத்தைக் குறைப்பதற்காக, சாதுக் களை ரட்சிப்பதற்காக, தர்மத்தை நிலைநாட்டுவதற்காக லீலையாக வெளிப்பட்டிருக்கிறேன்' என்று மறைபொருளைத் தெரிவித்திருக்கிறார். மேலும், 'நான் உனக்கு மிகவும் மறைவாக வைக்கத் தகுந்த ரகசியத்தைக் கூறப் போகிறேன்!...

நான் தான் ஈசுவரன்; நீ என்னையே சரண் அடைவாய்' என்றும் தெளிவாகக் கூறியிருக்கிறார்.

இதேபோல. உத்தங்க முனிவர், ஸ்ரீகிருஷ்ணனுக்குச் சாபம் கொடுக்க முற்பட்டபோது, அவருக்குத் தன்னுடைய (அவதார) ரகசியத்தைக் கூறி, சாந்தப்படுத்தினார். 'நான் அவ்வப்போது, அவதாரம் என்ற பெயரில் மண்ணுலகுக்கு வருகிறேன். சாட்சாத் பரமாத்மாவான நான், இப்போதைய மனித வடிவில் ஸ்ரீகிருஷ்ணன் என்று பெயர் பெற்றுள்ளேன். நீங்கள் என்னை அறியாததால், எனக்குச் சாபம் கொடுக்க வேண்டாம். உங்கள் சாபம் என்னைப் பாதிக்காது; தாங்கள் தான் தவத்திலிருந்து வீழ்ந்தவர் ஆவீர்கள்.' பின்னர், உத்தங்கர் கேட்டுக் கொண்டபடி அவருக்குத் தன் விசுவரூபத்தைக் காட்டித் தேறுதல் கூறினார்.

இவ்விதமே, மற்ற மற்ற பக்தர்களுக்கும் வெவ்வேறு காலங்களில் தன்னுடைய ரகசியத்தைக் கூறியிருக்கிறார். ஆசாரியர், சாஸ்திரம், சாது அல்லது சத்சங்கம் என்றாகிய ஏதேனும் ஒரு சாதனையின் மூலம் ஈசுவரனுடைய ரகசியத்தை, (அதாவது மறைத்து வைக்கப்பட்டுள்ள தத்துவத்தை) அறிந்து கொண்டு விட்டால், பின்னர் அவன் ஒரு விநாடி கூட ஈசுவரனை மறக்க மாட்டான். அவன் நித்திய-நிரந்தரமாக ஈசுவரனையே பூஜிக்கிறான். 'ஈசுவரனே மிக மிக மேலானவர்' என்பதை அவன் புரிந்து கொள்கிறான். மிக மிக மேலான வஸ்துவை ஒதுக்கிவிட்டு மிகமிகக் கீழான பொருளை, புத்தியுள்ள எந்த மனிதனாவது ஏற்றுக் கொள் வானா? ஒரு சுரங்கம் இருக்கிறது. அதில் தங்கம், வெள்ளி, செம்பு, இரும்பு, கல், நிலக்கரி முதலிய பல வஸ்துக்கள் இருக்கின்றன. யாருக்கு எந்தப் பொருள் வேண்டுமோ, அதை அவர் வெட்டி எடுத்துக் கொள்ளலாம். வெட்டி எடுக்கும் சிரமம், கொடுக்கப்பட்டுள்ள காலம்- எல்லோருக்கும் ஒரே அளவு. இப்படிப்பட்ட நிலையில், எந்த ஒரு முட்டாளாவது தங்கத்தை விட்டு விட்டு, கல்லையும், நிலக்கரியையும் வெட்டி எடுக்க முயல்வானா? தங்கத்தின் தத்துவத்தை அறிந்துள்ள புத்திசாலி, ஒரு நிமிடத்தைக் கூட வேறு முயற்சிகளில் செலவழிக்காமல் தங்கத்தை வெட்டியெடுப் பதிலேயே முனைந்து நிற்பான். இதுபோலவே,

ஈசுவரனுடைய தத்வ-ரகசியத்தைத் தெரிந்துகொண்டு விட்ட மனிதர், 'ஈசுவரனைக் காட்டிலும் மேலான ஒரு பொருள் இல்லவே இல்லை' என்பதைப் புரிந்து கொண்டு விடுகிறார். ஆதலால், அவர் மற்ற எல்லாப் பொருட்களிலிருந்து முகத்தைத் திருப்பிக் கொண்டு, ஈசுவர வழிபாட்டிலேயே ஒன்றிவிடுகிறார்.

பகவான் தானே சொல்கிறார்-

யோ மாமேவமஸம்மூடே₄ா ஜாநாதி புருஷோத்தமம்।
ஸ ஸர்வவித்₃ப₄ஜதி மாம் ஸர்வப₄ாவேந ப₄ாரத॥

*('அர்ஜுனா, இவ்விதம் மெய்ஞானம் பெற்று என்னைப் புருஷோத்தமன் என்று அறிந்து கொள்ளும் ஞானி, அந்தப் பேரறிஞர் எல்லா விதத்தாலும் எப்போதும் வாசுதேவனான என்னையே போற்றுகிறார்.')*

உண்மையில், இந்த அண்டகோளம் முழுவதும் பரமேசுவர வடிவம் தான். ஆனால், இந்த ரகசியத்தை அறியாத காரணத்தால், உலகிலுள்ள பற்பல வடிவங்களைப் பார்த்துப் பார்த்து, சுகமோ துக்கமோ அடைகிறார்கள். ஒரு வேஷதாரி இருந்தான். ஒரு பெரிய போலீஸ் அதிகாரியின் சீருடையை அணிந்து கொண்டு கடைத் தெருவுக்குப் போனான். ஒரு கடைக்காரன், சாமான்களை பாதையில் பரத்தி வைத்து வியாபாரம் செய்து கொண்டிருந்ததைப் பார்த்தான். இந்த வேஷதாரி அவனிடம் சென்று, 'என்ன, பாதையை அடைச்சுக்கிட்டு வியாபாரம் பண்றே? உன் மேலே கேஸ் போட்டுடுவேன்' என்று பயமுறுத்தினான். கடைக்காரன் பயந்து போய், கெஞ்சிப் பேச ஆரம்பித்தான். வேஷதாரியின் சீருடைக்குத் தகுந்த மரியாதை கிடைத்துவிட்டது! உடனே, தன்னுடைய சுயவிபரத்தைத் தெரிவித்துக் கடைக்காரனிடம் இனாம் கேட்டான். வேஷதாரியின் உண்மை நிலை தெரிந்த வுடனே, கடைக்காரனுக்குப் பயம் போய்விட்டது; அவன் சிரிக்கத் தொடங்கினான். அவனுடைய அச்சத் தவிப்பு, நொடி நேரத்துக்குள் சிரிப்பாக மாறிப் போய்விட்டது. வேஷதாரி, இப்போதும், போலீஸ் அதிகாரியின் சீருடையில் தான் இருக்கிறான்; அதே உருவத்துடன் தான் கடைக்காரனைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். ஆனால், ரகசியம் வெளிப்

பட்டு விட்டதால், பாவனையில் பெரிய மாறுதல் ஏற்பட்டு விட்டது! இவ்விதமே பரமேசுவரன் தன்னுடைய யோக மாயையினால் விசுவரூபியாக மாறியிருந்து நொடி தோறும் தன் சீருடையை (வெளித் தோற்றத்தை) மாற்றிக் கொண்டே இருக்கிறார். மக்கள், அவருடைய ரகசியத்தை அறியாத காரணத்தால் அச்சப்படுகிறார்கள்; நொந்து போகிறார்கள். நாம், பார்க்கும் ஒவ்வொரு உருவத்திலும் பகவானைக் கண்டு கொண்டு விட்டால், பகவானுடைய ரகசியம் நம் மட்டில் வெளிப்படுத்தப்பட்டு விட்டால், பின்னர், அச்சமும் நோதலும் இல்லை. வேஷதாரி தன்னுடைய ரகசியத்தை திறந்து காட்டியதைப் போல, பகவானும் தயை கூர்ந்து தன்னுடைய ரகசியத்தை வெளிப்படுத்தும்போது பக்தன் அந்த விநாடியே, அச்சம் நீங்கி, நிரம்பிய சுகத்தைப் பெறுகிறான்; ஏனென்றால், அதற்கப்புறம், எல்லா இடத்திலும் எல்லாக் காலத்திலும் ஆனந்த வடிவினரான ஒரு பகவானைத் தான் அவன் பார்க்கிறான்.

## பிரபாவம் (மகிமை)

திறமை, சிறப்பான ஆற்றல் மற்றும் அறிவொளியை பிரபாவம் என்று சொல்கிறார்கள். ஈசுவரனுடைய பிரபாவம் எல்லையில்லாதது. அதனால் தான், நிகழ முடியாததையும் ஈசுவரன் நிகழ்த்திக் காட்டுவார் என்று சொல்லப்படுகிறது. அனைத்து உலகங்களையும் மேம்படுத்துவது என்பது அநேகமாக நடக்காது என்று தோன்றினாலும் ஈசுவரன் சங்கல்பித்தால், ஒரு விநாடியில் நடத்திக் காட்ட முடியும். ஏனென்றால், அவர் எல்லையில்லாத ஆற்றலும், எல்லாவற்றையும் நடத்திக் காட்டும் சக்தியும் படைத்தவர். அவருடைய முழுப் பிரபாவத்தை தேவர்கள், அசுரர்கள், மாமுனிவர்கள் கூட அறியமாட்டார்கள். அவர், தான் மட்டும் அறிவார். ஒரு விநாடியில், அத்தனை உலகங்களையும் படைத்து அழிக்கும் ஆற்றலுடையவர், அவர். வேதம், ஸ்ம்ருதி, கீதை முதலிய நூல்களில் அவருடைய பிரபாவத்தின் வருணனை நிரம்பிக் கிடக்கிறது. அனைத்து சக்திகளும், அவருடைய சக்தியின் ஒரு சிறு பகுதியே ஆகும். கீதையில் பகவான் சொல்கிறார்-

யத்$_3$யத்$_3$விபூ$_4$திமத்ஸத்த்வம் ஸ்ரீமதூ$_3$ர்ஜிதமேவ வா।
தத்ததே$_3$வாவக$_3$ச்ச$_2$ த்வம் மம தேஜோம்஽ஶஸம்ப$_4$வம்॥
அத$_2$வா ப$_3$ஹுநைதேந கிம் ஜ்ஞாதேந தவார்ஜுந।
விஷ்டப்$_4$யாஹமித$_3$ம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்தி$_2$தோ ஜக$_3$த்॥
*(10-41,42)*

*('செழுமை, காந்தி, சக்தியோடு கூடிய வஸ்துக்கள் எல்லாம் என்னுடைய பேராற்றலின் ஒரு பகுதியிலிருந்து தோன்றியவை என்பதை அறிந்து கொள். அர்ஜுனா! இவ்வளவு விரிவாக அறிந்து கொள்வதால் உனக்கு என்ன லாபம்? உலகமனைத்தையும் (என்னுடைய யோகசக்தியின்) ஒரு துளியால் தாங்கிக் கொண்டு நிற்கிறேன்')*

அறிவின்மை காரணமாக, தன்னிடம் உள்ள ஒரு சிறப்பான ஆற்றலை, தன்னுடையது என்று எண்ணி கர்வப்படும் மனிதன், வீழ்ச்சி அடைகிறான். ஒரு தடவை இந்திரன், அக்னி, வாயு ஆகிய தேவர்கள் அசுரர்களை வென்று, வெற்றியடைந்தபோது தத்தம் சக்தியினால் வெற்றி கிடைத்தது என்று கர்வப்பட்டார்கள். அதனால், அவர்கள் முன்தோன்றி பரீட்சித்துப் பார்த்த யக்ஷவடிவான பிரம்மத்திடம் தலைகுனிய நேரிட்டது-என்ற கதை, கேனோபநிஷத்தில் வருகிறது.

பகவானுடைய உண்மையான பிரபாவத்தை, பகவானைச் சரண்புகுந்து, பகவானுடைய தயையினாலேயே அறிய முடியும்; அதனால், நாம் எல்லோரும் பகவானிடம் தஞ்சம் அடைவோம்.

## குணம்

பரமேசுவரன் (பகவான்) குணங்களுக்கு அப்பாற்பட்டவர்; நற்குணங்கள் நிரம்பப் பெற்றவர். அவருடைய குணங்கள் எல்லையில்லாதவை; கரைகாண முடியாதவை; ஆதிசேஷன், கலைமகள் கூட அவருடைய குணங்களை எடுத்துக் கூறத் திறமையற்றவர்கள். என்னைப் போன்ற சாதாரண மனிதன் எப்படிச் சொல்ல முடியும்? அவருடைய குணங்களைச் சொற்களினால் எடுத்து விளம்புவது என்பது. கணக்கில்லாத செல்வக் குவியல்களுக்குச் சொந்தக்காரரை

'லட்சாதிபதி' என்று கூறுவதற்கும், மின்மினிக் கூட்டத்தை சூரியனோடு ஒப்பிடுவதற்கும் நிகரானது. கணக்கில்லாத குணக்கடலான பிரபுவின் ஒரு குணத்தையேனும் மிக நன்றாக அறிந்து கொள்வதும் அறிவுறுத்துவதும் மிக மிகக் கடினம்-என்னும்போது, எல்லா குணங்களையும் பற்றி எவர் தான் விளக்க முடியும்? என்றாலும், சாஸ்திரங்களின் ஆதாரத்தின் பேரில் கொஞ்சம் சொல்ல முயல்கிறேன்.

பகவான் அன்பு மயமானவர். அத்தனை உலகத்திலும் உள்ள பிரேமையை ஓர் இடத்தில் சேர்த்து வைத்துப் பார்த்தாலும் அன்புமயமான பிரபுவின் பிரேமசாகரத்தின் ஒரு திவலைக்குக் கூட ஈடாகுமோ, என்னமோ?

பகவானுடைய ஒளி, உலகில் காணக் கிடைக்காதது. கோடிக்கணக்கான சூரியர்களை ஒன்று சேர்த்துப் பார்த்தாலும், அவருடைய ஒளிக்கு ஒப்பாகாது.

இவ்வுலகம் முழுவதையும் ஒரு சூரியன் பிரகாசப்படுத்துகிறார். இப்படி கோடி கோடி பிரம்மாண்டங்களில், கோடி கோடி சூரியர்களுக்கு ஒளிவழங்கும் பரமேசுவரனுடைய பிரகாசத்தை விவரித்துக் கூற முயல்வது என்பது, மின்மினிக் கூட்டத்தின் ஒளியைக் கொண்டு சூரியனுடைய பிரகாசத்தைப் புரிய வைப்பதைப் போன்றதாகும்.

ஸர்வக்ஞரான பரமாத்மாவின் ஞானத்தைப் பற்றிய விஷயமே விநோதமானது. அவர், ஞானவடிவமே. உலகங்கள் அனைத்திலும் உள்ள ஜீவன்களின் ஞானத்தை ஒன்று திரட்டி வைத்தாலும், அது பரமாத்மாவின் ஞானத்தின் மிகச் சிறிய பரமாணுவின் நிழல் என்று கூறினால், அது மிகையாகாது.

பகவானுடைய வள்ளன்மையைப் பற்றி என்ன சொல்ல! விஷத்தைப் புகட்ட வந்த பூதனைக்கும் பரமபதத்தை அருளிய அவருடைய கொடைத் தன்மையை எவ்வாறு கணக்கிட்டுப் பார்க்க முடியும்?

அபயம், பகவானுடைய வடிவமே. எந்தப் பிரபுவின் ரகசிய-பிரபாவங்களை அறிந்து கொள்வதாலேயே, அல்லது, எவருடைய நாமத்தை நினைத்துக் கொள்வதாலேயே, மனிதன், நிரந்தரமாக, அச்சம் நீங்கப் பெறுகிறானோ,

அப்படிப்பட்ட அபயவடிவினரான பகவானுடைய அபய குணத்தை எவ்வாறு எடுத்துக் கூற முடியும்?

அவர், கருணைக் கடல். மிகக் கொடிய பாவியாக இருந்தாலும், அவரைச் சரணாகதி அடைந்து விட்டால் அவனை நிரந்தரமாகப் பாவத்திலிருந்து விடுவித்து அவனுக்கு அபயம் அளிக்கிறார். எவராலும், ஏற்றுக்கொள்ளப் படாதவரையும், அவர் சரணடைந்து விட்டால், பிரபு தன்னுடையவனாக ஏற்றுக் கொள்கிறார்.

பகவானுடைய புனிதத் தன்மை, யாரால் கற்பனை செய்து பார்க்க முடியும்? எவருடைய நாம-ஜபம், துதி- தோத்திரம், உருவ சிந்தனையினால் மகாபாவியும் கூட மிகவும் புனிதனாக ஆகிவிடுகிறானோ, அவரைப் பற்றி என்ன சொல்ல? அதனால் தானே, பீஷ்ம பிதாமகர், 'பவித்ராணாம் பவித்ரம் யோ மங்களானாம் ச மங்களம்' என்று போற்றினார்? அந்த பகவானு டைய புனித வடிவத்தைப் பற்றி எவ்வாறு சொல்ல முடியும்?

பகவான், உயர்ந்த பிரம்மசாரி. அவரை சிந்தனை செய்யும் பக்தன் அருகில் கூட காமதேவன் செல்ல முடியாது. பகவான், ஸ்ரீகிருஷ்ணனாக வடிவெடுத்து வந்தபோது, கோபி கைகளோடு கூட, பாலுணர்வு அற்ற ராஸக்ரீடை செய்து, கோபிகைகள் மூலமாக காமதேவனின் திமிரைப் பொடிப் பொடியாக்கினார். அவரைத் தியானம்-சிந்தனை செய்வதா லேயே மனிதன் பிரம்மசாரி ஆகிறான் என்னும் போது, அந்த மேலான பிரம்மசாரியின் பிரம்மசர்யத்தின் பெருமையை யாரால் இசைக்க முடியும்?

பகவான், மன்னிப்பின் வடிவம். காரணம் ஏதும் இல்லாமல் பிருகு, அவருடைய மார்பில் காலால் உதைத்த போது, அதைப் பற்றியே சிந்திக்காமல் அவருடைய காலைப் பிடித்துவிட்டு, 'என்னுடைய மார்பு கடினமானது; தங்கள் காலில் காயம் ஏதும் படவில்லையே?' என்று கேட்டு, அந்த உதையின் அடையாளத்தை நிரந்தரமாக, அணிகலன் போல அவர் ஏற்றுக் கொண்டார். மக்கள் நிறைந்திருந்த அரசவையில் இகழ்ந்து பேசிய சிசுபாலனின் நூற்றுக் கணக்கான குற்றங்களை மன்னித்து அவனுக்கு முக்தி அளித்தார்.

வெறுப்பின்மை, அவருடைய இயல்பு. அவரிடம் வெறுப்பின் துர்நாற்றம் என்பதே கிடையாது. அவரை வெறுப்பவர்களையும் கூட, அவர் தண்டனை கொடுத்துக் கை தூக்கி விடுகிறார். பகவானைப் பற்றிச் சொல்வானேன்?- பகவானுடைய பக்தர்கள் கூட, இயல்பாகவே, அபகாரம் செய்தவர்களுக்கும் கூட உபகாரம் செய்வதை நெறியாகக் கொண்டவர்கள்.

சத்தியம்-பகவானின் ஸ்வரூபம். உலகம் அனைத்திலும் காணப்படும் ஸத்-துக்கெல்லாம் அவரே, மூலாதாரம். சூரியன், சந்திரன், கடல், பூமி முதலியவை எந்த சத்தியத்தின் அஸ்திவாரத்தில் நிற்கின்றனவோ, அந்த சத்தியம் பகவானின் வடிவமே. எல்லா உலகங்களும் சத்திய வடிவினரான பரமாத்மாவின் சத்தியத்தின் ஆதாரத்தின்மேல் நிற்கின்றன.

பகவான் மிகவும் வைராக்கியம் உடையவர். குணமயமான உலகங்கள் எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டிருந்தாலும், அவர் குணங்களுக்கு முற்றிலும் அப்பாற்பட்டவர். உலகம் முழுவதும் அவருடைய குடும்பம்; எல்லோரையும் போஷித்துப் பராமரிக்கும் பெரிய குடும்பஸ்தர்; ஆனால், யாருடனும் ஒட்டுதல் இல்லாதவர். எப்போதும் எல்லோருடனும் ஒட்டிக் கொள்ளாமல் இருப்பவர்.

பகவான், கௌரவத்தை விரும்பாதவர். எல்லா உலகங்களிலும் மிகவும் கௌரவத்துக்கு உரியவர் அவர் என்றாலும், தான், கொஞ்சமும் கௌரவத்தை விரும்பாதவர்; ஆனால், எல்லோருக்கும் மதிப்புக் கொடுப்பவர். அதனால் தான், அவருக்குப் பெயர்-'அமானீ மானத:'

தானசீலம், அவருடைய விசித்திரமான குணம். கற்பக மரத்தோடு அவரை ஒப்பிட்டுப் பேசமுடியாது. ஏனென்றால், கற்பகமரம் கேட்பவர் நல்லது-கெட்டது எதைக் கேட்டாலும் கொடுக்கும்; அது தீமை, நலன் பார்ப்பதில்லை. ஆனால், பகவானோ தீய பொருட்களைக் கேட்டாலும் கொடுப்பதில்லை. நாரதரை விவாகம் செய்து கொள்ள அனுமதிக்கவில்லை. அவருக்கு உசிதம் என்று தோன்றினால், குறைவாகக் கேட்பவருக்குக் கூட நிறையவே தருவார். துருவன், ராஜ்ஜியம் தான் கேட்டான்; ஆனால் பகவான்

மண்ணுலக ராஜ்ஜியத்துடன் மோட்ச சாம்ராஜ்யத்தையும் அளித்தார்.

சாந்தியும் ஆனந்தமும் பகவானுடைய வடிவம். அவரைச் சரண் அடைந்தால் மனிதன் பரம சாந்தியையும் பரமானந்தத்தையும் அடைகிறான். அவருடைய சாந்தி-ஆனந்தத்தை வேறு எதனுடன் ஒப்பிட்டுக் கூற முடியும்?

புஷ்பதந்தாசாரியர், பகவானுடைய முடிவற்ற, எல்லையற்ற குணங்களைப் பற்றிக் கூறுகிறார் -

அஸிதகி$_3$ரிஸமம் ஸ்யாத் கஜ்ஜலம் ஸிந்து$_4$பாத்ரே
ஸுரதருவரஶாகா$_2$ லேக$_2$நீ பத்ரமுர்வீ ।
லிக$_2$தி யதி$_3$ க்$_3$ருஹீத்வா ஶாரதா$_3$ ஸர்வகாலம்
தத$_3$பி தவ கு$_3$ணாநாமீஶ பாரம் ந யாதி ॥
*(சிவமஹிம்ன ஸ்தோத்ரம்-32)*

*('பரமேசுவரா! சமுத்திரத்தை மசிக்கூடாகச் செய்து கஜ்ஜலகிரியை மசியாக்கி, கற்பக விருட்சத்தின் கிளையை எழுதுகோலாக்கி, பூமி என்னும் காகிதத்தில் சரஸ்வதி தேவியே நித்திய நிரந்தரமாக, தங்களுடைய குணங்களின் மேன்மையை எழுதிக் கொண்டே யிருந்தாலும், தங்கள் குணங்களின் எல்லையை சென்றடைய முடியாது!')*

மேலே சொல்லப்பட்ட எல்லா விஷயங்களையும் புரிந்து கொண்டு, நித்திய நிரந்தரமாக, எல்லா வழிகளாலும் பரமேசுவரரான பகவானைச் சரண் அடைவதிலேயே விலை மதிக்க வொண்ணாத தங்கள் நேரத்தை ஈடுபடுத்த வேண்டும். வாழ்க்கையின் நொடிப் பொழுதையும் வீணாக்கக்கூடாது. இதுவே, நேரத்தை நல்ல முறையில் பயன்படுத்துவதாகும்.

## 9. உபாசனையின் தத்துவம்

சாஸ்திர நூல்கள் வாயிலாகவும் மகாத்மாக்களின் அனுபவங்களிலிருந்தும், பகவானை உருவத்துடன் கூடியவர், உருவமில்லாதவர் (ஸாகார்-நிராகார்) ஆகிய இரு முறைகளில் எந்த வகையில் உபாசித்தாலும் பரமகதி கிடைக்கும் என்பது நிச்சயமாகத் தெரிந்துள்ளது. உருவ வழிபாட்டில் ஈடுபட்டுள்ள பரம பக்தருக்கு ஸகுண

பகவானுடைய தரிசனமும் கிடைக்கும்; உருவமற்ற இறை வனை உபாசிப்பவருக்கு, அவருக்கு பகவத் தரிசனத்தில் நாட்டம் இல்லாததால், தரிசனம் ஏற்படுவதில்லை. உருவ வழிபாடு செய்வது பகவானுடைய பிரபாவங்களைத் தெரிந்து கொண்ட பிறகு நடைபெறுவதால், பலன் சீக்கிரத்தில் கிடைக் கிறது. உருவமுடைய பகவானுடைய பிரபாவங்களைத் தெரிந்து கொள்ளுதல் என்றால், ஒரே தனிப்பெரும் பொருளான ஈசுவரன் தானே, எங்கும் நிறைந்தவராகவும் (ஸர்வவியாபி), எல்லா ஆற்றல்களும் கொண்டவராகவும் (சர்வசக்திமான்) விளங்குகிறார்-என்பதை, சாதகன் அறிந்து கொள்ளுதலே ஆகும். சிவன் அல்லது விஷ்ணுவை உபாசிக் கிறவர்கள், 'என்னுடைய இஷ்டதேவதையான ஈசுவரன், இந்த மூர்த்தியில் மட்டும் தான் இருக்கிறார்; வேறு எந்த வடிவத்திலும் இல்லை' என்று எண்ணிவிடக் கூடாது. 'ஈசுவரன் என்பவர் இவ்வளவு - இவ்வடிவம் - தான்' என்ற மாதிரியான ஓர் அளவுக்குள் அடக்கி விடுவது, ஒருவகையான தாமஸ அறிவு தான். இப்படிச் சொல்வதனால், 'அர்ச்சா மூர்த்தி வழிபாடு கூடவே கூடாது' என்று பொருள் செய்து கொள்ளக் கூடாது; இறைவழிபாட்டின் தத்துவத்தை மனதிற் கொள்ளா மல், உருவத்தையே ஈசுவரனாக எண்ணிக்கொண்டு அதை உபாசிப்பதே போதும் என்று சாமான்யமாக நினைத்து விடக் கூடாது-என்பதை சுட்டிக் காட்டுவதாகக் கொள்ள வேண்டும். ஏதேனும் ஒரு வகையில் உபாசனையில் ஈடுபடுவது என்பது- உபாசனையிலேயே ஈடுபடாமல் இருப்பது என்பதைக் காட்டிலும் எவ்வளவோ மேல். ஆனால், இப்படிச் செய்வது ஒரு தாழ்ந்த நிலையைச் சேர்ந்தது என்பதால், இவ்விதமாகச் செய்யப் படுகிற உபாசனையின் பயன் மிகவும் தாமதமாகத் தான் கிடைக்கும். உபாசனையின் தத்துவம் பற்றிய முழுமை யான அறிவு இல்லாமல், குறைந்த அறிவுடன் செய்யப்படும் உபாசனையில் குறை என்னவென்றால், இதற்கு உண்டாகக் கூடிய விளைவில் காலதாமதம் ஏற்படும் என்பது தான். ஏனென்றால், உபாசகன், தான் உபாசிக்கும் பொருளின் மகத்தான பெருமையைக் குறைத்து மதிப்பீடு செய்கிறான்.

அக்னியை உபாசிக்கும் ஒருவன், வேள்விக்காக அக்னி வளர்க்கிறான். 'இதோ, இவ்வளவு தூரத்தில் இருக்கிறதே?-

இதுதான் அக்னிதேவதை; வேறு எங்கேயும் அக்னி இல்லை' என்று எண்ணினால், அது அக்னியின் பெருமையைக் குறைத்து மதிப்பதாகும்; அகண்டாகாரமாக வியாபித்துள்ள ஒரு வஸ்துவை சிறிய எல்லைக்குள் கட்டிப் போடுவதாகும். இதற்கு மாறாக, 'அக்னி, உண்மையில், எல்லா இடங்களிலும் வியாபித்திருக்கிறது; ஆனால், அவ்யக்தமானதால் (கண் ணுக்குப் புலப்படாததால்) எல்லா இடங்களிலும் காணப்படு வதில்லை' என்று உபாசகன் உணர்ந்து கொள்ள வேண்டும். அது வெளிப்படும்போது தான் (வ்யக்தமான நிலையில் தான்), கண்களுக்குப் புலனாகும்; முயற்சி செய்தால் தான், அது வெளிப்படும். அது (கண்ணுக்குப் புலனாகாததால், அக்னி என்று ஒரு பொருள்) 'இல்லவே இல்லை' என்று சொல்லிவிட்டால், அது ஏதோ ஓர் இடத்தில், ஏதோ ஒரு பொருளில் எப்படித் தோன்ற முடியும்! வேள்விக் குண்டத்தில் (சுவாலைவிடும் அக்னி) நமது கண்களுக்கு நன்றாகத் தெரிகிறது; ஆனால், (அக்னி, வேள்விக் குண்டத்தில் மட்டும் தான் இருக்கிறது-என்பதாகக் கருதி விடக் கூடாது) அது எங்கும் இருக்கிறது. இதே போலத் தான், பகவானும் நிராகார வடிவில் எல்லா இடங்களிலும் சமமாக நிறைந்திருக்கிறார்; பக்தனுடைய பிரேமை காரணமாக ஓர் உருவம் ஏற்று பிரத்யட்சமாகக் காட்சி தருகிறார். நிராகாரமே ஸாகாரம்; ஸாகாரமே நிராகாரம். இவ்விதம் உணர்ந்து கொள்வது தான் ஸாகாரத்தின் பிரபாவத்தையும் தத்துவத்தையும் அறிந்து கொள்வதாகும். உண்மையில், ஈசுவரனோடு கூட அக்னியை எடைபோட்டுப் பார்க்க முடியாது. இது, ஓர் உதாரணத்துக் காகவே; ஏனென்றால், அக்னி என்பது பரமாத்மாவைப் போல் எங்கும் நிறைந்தது அல்ல. ஒரே இடத்தில், மண்-நீர்-அக்னி-வாயு-ஆகாயம் ஆகிய ஐந்து மூலங்களும் சேர்ந்து இருக்க முடியாது. சர்வ வியாபியான பரமாத்மாவோ, காரணங் களுக்கெல்லாம் மகாகாரணமாக விளங்குபவர்; அதனால், அவர் எல்லாப் பொருட்களிலும் உறைந்திருக்கிறார். காரியம் (விளைவு) ஒருபோதும் சர்வவியாபியாக இருக்க முடியாது; ஆனால், காரணம் சர்வ வியாபியானது. உலக உற்பத்திக்குக் காரணம், பிரகிருதியாகும்; ஆனால், பரமாத்மாவோ, அதற்கும் (பிரகிருதிக்கும்) காரணமாதலால், மகாகாரணம் ஆவார்.

பிரகிருதி என்பது ஜடவஸ்து; அதனால், ஜடகாரியங்களுக்கு மட்டுமே அது காரணமாக முடியும்; சைதன்யப் பொருளான பரமாத்மாவுக்குக் காரணமாக முடியாது. ஆகவே, பரமாத்மா தான் அனைத்துக்கும் மகாகாரணமானவர்; அவரே, ஜட-சேதனப் பொருட்கள் அனைத்திலும், முழுமையாக நிறைந் திருக்கிறார். எல்லாவற்றுக்கும் அழிவு ஏற்பட்டாலும் கூட, அவருக்கு அழிவு ஏற்படுவதில்லை; அவர் நித்தியமானவர்; அநாதியாக உள்ளவர்.

நிராகார ப்ரம்மம், சத்-விஜ்ஞான-அனந்த-ஆனந்தச் செறிவானது. எந்தப் பொருள், ஒருபோதும் இல்லாமல் போய் விடுவதில்லையோ; எந்தப் பொருளில் மாற்றங்கள் ஏற்படுவ தில்லையோ; எந்தப் பொருளின் தோற்றத்தில் வேறுபாடுகள் தோன்றுவதில்லையோ; எந்தப் பொருள் எப்போதும் ஒரே தன்மை-ஒரே தோற்றத்துடன் விளங்குகிறதோ, அந்தப் பொருள் சத் என்று கூறப்படுகிறது. விஜ்ஞானம் என்பதன் மூலம், அறிவு-உயிர்ப்பு-தூய்மை-மெய்ஞானம் முதலிய வற்றை உணர்ந்து கொள்ள வேண்டும். எந்தப் பொருளுக்கு எல்லை என்பதே இல்லையோ; எடை போடுவது, அளந்து பார்ப்பது முடியாதோ; எந்தப் பொருளுக்கு எங்கேனும் ஒரு சமயத்தில் தோற்றம்-முடிவு இல்லையோ; எந்தப் பொருள் அணுவைக் காட்டிலும் அணுவாகவும், பெரியதைக் காட்டிலும் மிகப் பெரியதாகவும் இருக்கிறதோ; எல்லா உலகமும் எந்தப் பொருளின் ஒரு சிறு கூறாக உள்ளதோ-அதனை, அனந்த என்று குறிப்பிடுகிறோம். ஆனந்தச் செறிவு என்றால், ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தமே! செறிவு என்று சொன்னால், அந்தப் பொருளில், ஆனந்தத்தைத் தவிர வேறு எதற்கும் இடமே இல்லை என்று பொருள்-பனிக்கட்டியில் தண்ணீரைத் தவிர வேறு எதுவுமே இல்லை என்பதைப் போல-பரமாத்மா ஆனந்தச் செறிவினர். (ஆனந்தத்தைத் தவிர வேறு எந்தப் பொருளுக்கும் அவரிடம் இடமே இல்லை என்றபடி.) பனிக்கட்டி என்பது ஓர் உருவம் உடையது; ஜடமானது; கெட்டியானது. ஆனால், பரமாத்மாவோ சேதனர்; ஞானவடிவினர்; உருவம் இல்லாதவர். இவ்விதமான நிராகார பரமாத்மா எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்திருக்கிறார்.

பரமாத்மாவின் ஆனந்தவடிவத்தை விளக்கிப் பேச முடியாது; அது, அநிர்வசனீயம் (சொல்லுக்கு அப்பாற் பட்டது). உங்களுக்கு ஏதோ ஒரு சமயத்தில் ஏதோ ஒரு காரணத்தால் பெரிய ஆனந்தம் ஏற்படும்போது, (பரமாத்மாவின்) ஆனந்த (வடிவ)த்தை நினைத்துக் கொள்ளுங்கள். இதைக் காட்டிலும் மேலான ஆனந்தம், உண்மையான மனத்துடன் செய்யப்படும் சத்சங்கம், பஜனை அல்லது தியானத்தின் மூலம் கிடைக்கிறது. இதைப் பற்றிய விளக்கம் கீதை பதினெட்டாவது அத்தியாயம், முப்பத்தாறு, முப்பத்தேழு சுலோகங்களில் காணலாம். இந்த சுகத்தின் எதிரில், (புலன்கள் வாயிலாக அனுபவிக்கப்படும்) போகசுகம் என்பது, சூரியனுக்கு முன் மின்மினிப்பூச்சி எப்படியோ, அது மாதிரி கூட இல்லை. ஆனால், இந்த சுகமும் அந்தப் பரமானந்த வடிவமான பிரம்மத்தின் ஓர் அணு என்பதை உணர்ந்து கொள்ளவேண்டும். ஏனென்றால், பிரும்மானந் தத்தைத் தவிர ஆனந்தம் என்பது வேறு எங்கும் இருப்பதற்கே இடமில்லை; எல்லா ஆனந்தமும், பிரும்மானந்தத்தின் எல்லைக்கு உட்பட்டது; அதில், இரண்டாவதான இன்னொரு பொருளுக்கு இடமே இல்லை.

ஆனந்தச் செறிவான இந்தப் பரமாத்மாவின் விரிவாக் கமே பொருட்கள் எல்லாம். கண்ணாடியில் காணப்படும் நிழலுருவம் போல, பரமாத்மாவிடம் இவ்வுலகம் அடங்கி யிருக்கிறது. உண்மையில் இல்லை; உள்ளடங்கியிருப்பது போல் தோற்றமளிக்கிறது.

கண்ணாடி என்பது ஜடமானது; கடினமானது. ஆனால், பரமாத்மாவோ பரம சுகஸ்வரூபமாக இருந்தும் கூட, உயிர்ப்பு (சேதன)த் தன்மை உடையவராக இருக்கிறார்; அவருடைய செறிவுத் தன்மையை-அடர்த்தியை-வேறு எந்தப் பொருளு டனும் இணைத்துப் பார்க்க முடியாது. அவருடைய அடர்த்தி, ஏதோ ஒரு கல், பாறை, பனிக்கட்டி முதலான பொருட்கள் போன்றது அல்ல; (ஏனென்றால்) இவைகளில், வேறு பொருட்கள் கலந்திருப்பதற்கான வாய்ப்பும் உண்டு; ஆனால், அதனிடத்தில் (பரமாத்மாவிடத்தில்) வேறு எந்தப் பொருளுக்கும் சிறிதளவு கூட இடமே இல்லை. இந்த

உடலில் 'நான்' (ஆத்மா) என்பது மிகநுண்ணியதாக நிறைந்து அடர்ந்துள்ளது; இதனுள்ளே வேறு எந்தப் பொருளுக்கும் ஒருபோதும் இடம் கிடைப்பதற்கே சாத்தியமில்லை. சரீரம். மனம், புத்தி முதலியவற்றில் வேறொன்று உட்செல்ல முடியும்; ஆனால், ஆத்மாவிடத்தில் எந்தப் பொருளும் எந்தக் காலத்திலும் இடம் பிடிக்கவே முடியாது. இந்த வகையில்தான், சர்வ வியாபியாகவும் நிராகாரமாகவும் உள்ள பரமாத்மா, 'அடர்த்தி'யானவர்.

அவருடைய உயிர்ப்புத் தன்மையும் சிறப்பாக மாறு பட்டது. நம்முடைய இந்த உடலில் உள்ள பொருட்கள் எல்லாம் ஜடமானவை; இவைகளை அறிவது 'சேதனன்' (அறிந்துணரும் உயிர்ப்பு இயல்பு) ஆகும். வேறொன்றின் மூலமாக அறியப்படும் பொருள், ஜடமானது; கண்ணால் காணப்படுவது; அது, ஆத்மாவை அறிய முடியாது. கை-கால்கள், ஆத்மாவை அறிவதில்லை; ஆனால், ஆத்மாவுக்கு அவைகள் தெரியும். அதுவே (ஆத்மாவே) எல்லாவற்றையும் அறியும் இயல்புடையது; ஞான வடிவமானது; அந்த ஞானம் தான் அனைத்துப் பொருட்களுக்கும் தன்னிகரற்ற தனிப் பெரும் தலைவன் (பரமேசுவரன்); அது, எல்லா இடத்திலும் நிறைந்துள்ளது. அது இல்லாத இடமே இல்லை. அதனால் தான், வேதம், 'ஸத்யம் ஜ்ஞானமனந்தம் ப்ரஹ்ம' என்று விளக்குகிறது.

அதே பரபிரம்மம் தான், பக்தர்களின் பிரேமைக்கு வசப் பட்டு, அவர்களை (சம்சாரச் சுழலிலிருந்து) மேலே தூக்கி விடுவதற்காக, ஒரு வடிவத்தினை ஏற்று வெளிப்பட்டு, அவர்களுக்குத் தரிசனம் தருகிறது. அவருடைய தோற்ற வருணனை, மனித புத்திக்கு அப்பாற்பட்டது; ஏனென்றால், அது எல்லையற்றது. பக்தன் பார்க்க விரும்பும் தோற்றத் திலேயே நேரில் தோன்றி தரிசனம் கொடுக்கிறார். பகவான் ஒரு வடிவத்தோடு தோற்றமளிப்பது என்பது அவர் வசத்தில் உள்ளதன்று; அநன்ய பிரேமையுடைய பக்தனின் வசத்தில் உள்ளது. அர்ஜுனன், முதலில், விசுவரூப தரிசனத்தைக் காண விரும்பினான்; (அதன்படி அவனுக்கு விசுவரூப தரிசனம் கிடைத்தது). பின்னர், நான்கு கைகளோடு கூடிய

கண்ணனைக் காண விரும்பினான். (அதுவும், அவனுக்குக் கிடைத்தது). அடியாரிடம் பேரன்பு பூண்ட பகவான் கிருஷ்ணன், மிகக் குறைந்த காலத்திலேயே, மூன்று விதமாக அர்ஜுனனுக்குத் தரிசனம் தந்தருளினார். அவனுக்கு, தன்னுடைய நிராகார இயல்பினையும் தெளிவாக உணர்த்தினார். ஆக, பரமாத்மாவின் எந்த வடிவத்தைக் குறித்து பக்தன் உபாசனை செய்கிறானோ, அவனுக்கு அதே வடிவத்தில் பகவத் தரிசனம் கிடைக்கிறது.

அதனால், உபாசனையில் வடிவ மாற்றத்துக்கு அவசியமே இல்லை. பகவான் விஷ்ணு, ராமன், கிருஷ்ணன், சிவன், நரசிம்மன், அம்பாள், கணேசன் போன்ற எந்த ஒரு தெய்வ உபாசனை செய்தாலும், அது பரமாத்ம உபாசனையே ஆகும். வழிபாட்டில் எந்தவித மாற்றமும் செய்யத் தேவையில்லை. 'பரமாத்மாவே பரம்பொருள், எல்லாமாக விளங்குபவர்' என்ற நம்பிக்கை இல்லாமல், 'நான் வணங்கும் சிறு உருவத்தில் மட்டும் இருக்கிறார்' என்ற எண்ணம் இருக்குமானால், அந்த எண்ணத்தில் தான் மாற்றம் தேவை. 'நான் என்னுடைய இஷ்ட தேவதையாக வரித்துக்கொண்டு உபாசனை செய்து வரும் பரமாத்ம ஸ்வரூபம், நிராகார வடிவில் அனைத்துச் சராசரங்களிலும் நிறைந்திருக்கிறது; அது, எல்லாவற்றையும் அறியும் பேரறிவுமயமானது; நடைபெறும் எல்லாமே அதன் அருட்பார்வையில் இயங்கிக் கொண்டிருக்கிறது' என்று பக்தன் எண்ணவேண்டும். 'சர்வக்ஞ, சர்வ வியாபி, சர்வ குணஸம்பன்ன, சர்வஸமர்த்த, சர்வசாட்சி, ஸத், சித், ஆனந்தகனமான என்னுடைய இஷ்ட தேவதையான பரமாத்மாவே, தன்னுடைய லீலைகள் மூலம் பக்தர்களைக் கைதூக்கி விடுவதற்காக, தன் விருப்பப்படி வித விதமான வடிவங்களை ஏற்று, பற்பல திருவிளையாடல்களைச் செய்து வருகிறது.' இந்தத் தத்துவத்தை உணர்ந்துள்ள மனிதனிடமிருந்து பரமாத்மா ஒருபோதும் காணாமற் போவதில்லை; அவனும் பரமாத்மாவுக்குக் காணாமற் போவதில்லை.

பகவானே சொல்லியிருக்கிறார் –

யோ மாம் பஶ்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயி பஶ்யதி ।
தஸ்யாஹம் ந ப்ரணஶ்யாமி ஸ ச மே ந ப்ரணஶ்யதி ॥
*(கீதை : 6/30)*

*('வாசுதேவனான நானே, எல்லாப் பிராணிகளிடத்திலும் ஆத்மாவாக விளங்குவதாகக் கண்டும், எல்லாப் பிராணிகளும் வாசுதேவனான என்னுள்ளே அடங்கியிருப்பதாகவும் எவன் காண்கிறானோ, அவனுக்கு நான் காணாமற் போவதில்லை; அவனும் எனக்குக் காணாமற் போவதில்லை; ஏனென்றால், (அனைத்தும் பரமாத்ம வடிவமே என்ற) ஏகீபாவத்தில், என்னில் நிலைத்து நிற்கிறான்.')*

நிராகார்-ஸாகார் என்பதில் எவ்வித வேறுபாடும் இல்லை. நிராகார பகவானே, ஸாகாரமாக ஆகிறார்.

பகவான் சொல்கிறார் -

அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூ$_4$தாநாமீஸ்வரோऽபி ஸந் ।
ப்ரக்ருதிம் ஸ்வாமதி$_4$ஷ்ட$_2$ாய ஸம்ப$_4$வாம்யாத்மமாயயா ॥

*(கீதை : 4/6)*

*(நான் பிறப்பில்லாதவன்; அழிவில்லாதவன்; எல்லா உயிர்களுக்கும் தலைவன்; என்றாலும், என்னுடைய பிரகிருதியை வசப்படுத்திக் கொண்டு, என்னுடைய யோக மாயையால் வெளிப்படுகிறேன்.)*

அவர் ஏன் வெளிப்படுகிறார்? இந்தக் கேள்விக்கான பதிலையும் பகவானே கொடுக்கிறார் -

யத$_3$ா யத$_3$ா ஹி த$_4$ர்மஸ்ய க்$_3$லாநிர்ப$_4$வதி ப$_4$ாரத ।
அப்$_3$யுத்த$_2$ாநமத$_4$ர்மஸ்ய தத$_3$ாத்மாநம் ஸ்ருஜாம்யஹம் ॥
பரித்ராணாய ஸாதூ$_4$நாம் விநாஶாய ச து$_3$ஷ்க்ருதாம் ।
த$_4$ர்மஸம்ஸ்த$_2$ாபநார்த$_2$ாய ஸம்ப$_4$வாமி யுகே$_3$ யுகே$_3$ ॥

*(கீதை : 4/7,8)*

*(அர்ஜுனா, எவ்வெப்பொழுதெல்லாம் தர்மத்துக்குக் குறைவும் அதர்மத்துக்கு வளர்ச்சியும் ஏற்படுகிறதோ, அவ்வப்பொழுதெல்லாம், நான் என்னுடைய வடிவத்தை உண்டாக்கிக் கொள்கிறேன். அதாவது, தோற்றத்தோடு கூடிய வடிவினை ஏற்று மக்கள் மத்தியில் வெளிப்படுகிறேன். சாதுக்களின் ஆன்ம மேம்பாட்டுக்காகவும், பாவச் செயல்கள் புரிபவர்களை அழிப்பதற்காகவும், தர்மத்தை நல்ல முறையில் நிலைப்படுத்துவதற்காகவும் யுகங்கள்தோறும் நான் வெளிப்படுகிறேன்.)*

இவ்விதம், அழிவற்ற, நிர்விகார பரமாத்மா, உலகினை மேம்படுத்துவதற்காக பக்தர்களின் பிரேமை வசப்பட்டு, தன்னுடைய விருப்பப்படி தானே மண்ணுலகுக்கு இறங்கி வருகிறார். அவர் பிரேமையே உருவானவர்; அவருடைய ஒவ்வொரு செயலிலும் பிரேமையும் தயையும் ஊடும் பாவுமாக விளங்குகின்றன. அவர் சம்ஹாரம் செய்பவரையும் கூட, மேல் தூக்கியே விடுகிறார். அவர் செய்யும் சம்ஹாரமும், பரம பிரேமையின் அருட்கொடையே ஆகும். ஆனால், அறிவில்லாத உலகம், அவருடைய தெய்விகப் பிறப்பு-செயல்களாகிற லீலையின் உண்மையான ரகசியத்தை அறியாமல் பலவகையான ஐயப்பாடுகளை கொண்டிருக் கிறது. பகவான் சொல்கிறார் -

ஜந்ம கர்ம ச மே தி₃வ்யமேவம் யோ வேத்தி தத்த்வத:।
த்யக்த்வா தே₃ஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந ॥
(கீதை : 4/9)

*(அர்ஜுனா! என்னுடைய பிறப்பும் செயல்களும் தெய்விக மானவை; அதாவது, மாசற்றதும் மண்ணுலகில் காணக் கிடைக்காததும் ஆகும். இவ்விதம், உண்மையாக என்னை அறிந்து கொள்பவன், உடலைத் துறந்தபின், மீண்டும் பிறப்பை அடைவதில்லை; என்னையே அடைந்து விடுகிறான்.)*

சர்வசக்திமானும் சச்சிதானந்தச் செறிவினருமான பரமாத்மா, பிறப்பற்றவர்; அழிவற்றவர்; அனைத்துப் பிராணி களுக்கும் அடைக்கலம்; சிறந்த பற்றுக் கோல். அறத்தை நிலைநிறுத்தவும் உலகத்தை உய்விப்பதற்காகவுமே, தன்னு டைய யோகமாயையினால் ஸகுணவடிவத்தை ஏற்று வெளிப் படுகிறார். ஆகவே தான், தன்னேரில்லாத ஈசுவரனாகிய அவருக்கு நிகரான நண்பர், அன்புடையவர், இழிந்தோரையும் ரட்சிப்பவர் வேறு யாரும் இலர்-இதைப் புரிந்துகொண்டு அவரிடம் அநன்யப் பிரேமையுடன் எப்போதும் சிந்தனை செய்துகொண்டு, எவ்விதப் பற்றுதலும் இல்லாமல் உலகில் விவகரிப்பவன், உண்மையில், அவரை தத்துவத்தோடு அறிந்தவனாகிறான். இவ்விதம் தத்துவத்தைப் புரிந்து கொண்டவர், துக்கவடிவமான இவ்வுலகத்துக்கு ஒருபோதும் திரும்பி வர நேரிடாது.

பகவானுடைய பிறப்பும் செயல்களும் எவ்வளவு தெய்விகமானவை என்று, தத்துவத்தோடு அறிந்து கொண்டு விடுபவரே, நிஜமான பேறு பெற்ற பெருமனிதராவார். சுடர் விடுதல், பிரகாசமாக இருத்தல், பரம தூய்மை, உலகுக்கு மாறாக மேலானது ஆகிய சொற்கள் தெய்விகம் என்ற சொல்லுக்கு இணையானவை. பகவானுடைய பிறப்பு-செயல்களில் இவைகள் (இந்த குணங்கள்) எல்லாம் நிகழ்வு களாக உள்ளன. அவருடைய செயல்கள் உலகில் பரவி எல்லாருடைய இதயங்களிலும் தாக்கத்தை ஏற்படுத்துகிறது; செயல்களின் புகழ், பிரும்மாண்டம் முழுவதிலும் பரந்து விரிகிறது; அவரை நினைத்துப் புகழ் பாடுபவர்களின் உள்ளமும் கூட களங்கமற்றுச் சுடர் விடுகிறது. ஆகவே, அவர் சுடர் விடுபவர் ஆகிறார். அவருடைய லீலைகள் விரிந்து பரவும் அளவுக்கு, இருள் நாசமடைகிறது. ஹரிலீலைகளின் கதைப் பிரசங்கம் நடைபெறும் இடத்தில், ஞான சூரியனுடைய ஒளி விரிந்து பரவுகிறது; பாப-தாபங்களாகிற இருள் அழிந்து போகிறது; எனவே, அவர் பிரகாசமானவர். அவருடைய செயல்களில் தன்னலம் அல்லது சுயலாபம் ஏதும் இல்லவே இல்லை; எவ்வித விருப்பமும் இல்லை; அணுவளவும் இல்லை; மாசுகள் அற்றவை-எனவே, அவர் மிகவும் தூய்மையானவர். அவர் செய்யும் செயல்களை உலகில் வேறு யாரும் செய்ய முடியாது; பிரும்மா, இந்திரன் முதலியோர் கூட அவருடைய செயல்களைக் கண்டு மதிமயங்கிப் போகிறார்கள். உலகிலுள்ள மக்களின் கற்பனைக்குக் கூட எட்டாத விஷயங்களை, நடைபெறவே முடியாதவைகளை, அவர் செய்து காட்டுகிறார்; நிகழமுடியாத வைகளை நிகழ்த்திக் காட்டுகிறார்; ஜீவன்முக்தர் அல்லது வேலையிலேயே ஈடுபட்டுள்ளவர்களைக் காட்டிலும் அற்புதமானவர் என்பதால், உலக இயல்பைக் கடந்து நிற்பவர். அவருடைய அவதாரம் எப்போதும் தூய்மையானது. அவர் தன்னுடைய லீலையினாலேயே வெளிப்படுகிறார். அவர் பிரேமை வடிவினராக இருப்பதாலேயே, ஸகுண வடிவத்தில் தோற்றமளிக்கிறார். மிக்க மகிமை வாய்ந்த அவருடைய தோற்றம், பிரேமையின் வடிவமே. அதனால் பிரேமையுள்ளவர்கள் மட்டுமே அவரை அடையாளம்

கண்டுகொள்ள முடியும். இந்தத் தத்துவத்தை அறிந்து கொண்டு, அவரிடம் பிரேமையுடன் உபாசனை செய்யும் பாக்கியவான்கள் மிக விரைவிலேயே பிரேமை மயமானதும் பிரேமை நிரம்பியதுமான அவருடைய முகத் தாமரையைத் தரிசனம் செய்து கிருதார்த்தராகிறார்கள். ஆகவே, உடல்-உள்ளம்-புத்தி-ஆத்மா ஆகிய எல்லாவற்றையும் அவருடைய அழகிய திருவடிகளில் சமர்ப்பணம் செய்து, இரவு-பகலாக அவரைப் பற்றிய நினைவிலேயே தோய்ந்திருக்க வேண்டும். அன்புமயமான அவருடைய ஆணை மற்றும் ஆறுதலான சொற்களை நினைவிற் கொள்வோம்.

> மய்யேவ மந ஆத$_4$த்ஸ்வ மயி பு$_3$த்$_3$தி$_4$ம் நிவேஶய।
> நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்$_4$வம் ந ஸம்ஶய:॥
> *(கீதை : 12/8)*

*(என்னிடம் மனத்தை நிலைநிறுத்து; என்னிடமே புத்தியைச் செலுத்து. இப்படிச் செய்தால், பின்னர், என்னிடமே நீ வசிப்பாய்; அதாவது, என்னையே நீ அடைந்து விடுவாய். இதில் சிறிதளவும் சந்தேகம் இல்லை.)*